# திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்





தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
**சரசுவதி மகால் நூலகம்**
மற்றும் ஆய்வு மையம்
தஞ்சாவூர்.

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் |
| பதிப்பாசிரியர் | : | முனைவர் பு. இந்திராகாந்தி |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : | 567 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | 2015 |
| தாள் | : | TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : | 21 X 14 செ.மீ. |
| பக்கங்கள் | : | 164 |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | ஒளி அச்சுக்கோப்பு மற்றும் ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : | லேமினேசன் அட்டை |
| பொருள் | : | இலக்கியம் |
| ISBN | : | 978-93-85343-05-6 |
| விலை | : | **ரூ.160/-** |

# வெளியீட்டாளர் முகவுரை

பல்வேறு இலக்கிய வகைகளைத் தன்னகத்தே கொண்டுள்ள தமிழ்மொழிக்கு, சிற்றிலக்கிய வகைகளும் மிகச்சிறந்த மணிமகுடமாகத் திகழ்கின்றன. இச்சிற்றிலக்கியங்களைப் பிரபந்தங்கள் என்றும், அவைகள் தொண்ணூற்று ஆறுவகைப்படும் என்றும் தமிழ்ச் சான்றோர்கள் வகுத்துள்ளனர். அவற்றுள் ஒன்று பிள்ளைத்தமிழ். தமிழ் இலக்கியத்திற்கு பல பிள்ளைத்தமிழ் நூல்கள் கிடைத் துள்ளன. பிள்ளைத்தமிழ் இலக்கியத்திற்கு மேலும் சிறப்பு சேர்க்கும் வகையில் அமைந்தது பகழிக்கூத்தர் இயற்றிய திருச்செந்தூர் பிள்ளைத்தமிழாகும்.

பிள்ளைத்தமிழ் இலக்கியங்கள் குழந்தையின் மூன்றாம் மாதம் தொடங்கி இருபத்தி யொன்றாம் மாதம் வரை பத்துப் பருவங்களாகப் பகுத்துப் பாடப்பெறுவதாகும். பிள்ளைத்தமிழ் நூலான இந்நூல் சிற்றிலக்கிய வகையில் சிறப்பிடம் பெற்று கற்றவர்களும், பக்தி சிந்தனை உடையவர்களும் போற்றி புகழும் வகையில் விளங்கும் பெருமையுடையதாகும். நூல் முழுவதும் முருகனின் சிறப்புகளும், பெருமையும் பேசப்படுகிறது.

அழகு என்று சொல்லும்போது அன்னை, தந்தையுடன் வீற்றிருக்கும் சிறப்பு, ஆறுபடை வீடுகளில் குடிகொண்டிருக்கும் சிறப்பு, அங்கு பக்தர்களுக்கு அருள்பாளிக்கும் சிறப்பும், முருகன் நடத்தியத் திருவிளையாடல்கள் அவன் திருஞான சம்பந்தராக அவதரித்த சிறப்பு, அசுரனை வென்ற திறம், வள்ளி தெய்வானையுடன் காட்சிதரும் சிறப்பு, என முருகனின் சிறப்புகள், பாடலுக்குப் பாடல் சிறப்பு சேர்க்கும் வகையில் பதிவு செய்யப்பட்டுள்ளது. வண்டு பாயுந் திருச்செந்தூர் , திரைமுத் தெறியுந் திருச்செந்தூர் என்று திருச்செந்தூரும், பொய்யா வளமை தரும் பெருமை பொருனைத் துறை என்று தாமிரபரணித் துறையின் சிறப்பும் பேசப்பட்டுள்ளது.

முருகனை காக்க வேண்டுமென்று திருமால், சிவபெருமான், உமையவள், விநாயகர், கலைமகள், அரிகரபுத்திரன், பகவதி, காளி, ஆதித்தர் ஆகிய தெய்வங்களை போற்றி வணங்கும் பாடல்கள், முருகனின் தோற்றம், அருள், இயல்பு, திருச்செந்தூர் தலத்தின் வளம் என்ற வகையில் இந்நூலில் பல கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. இந்நூலானது சரசுவதி மகால் நூலகத்தில் உள்ள ஏட்டுச் சுவடியினைக் கொண்டும், இதற்கு முன் பதிப்பித்து வெளிவந்துள்ள நூல்களை ஒப்புநோக்கியும், மூலச் சுவடியின் வழி பாடல்களை சரிசெய்தும், பாடல், பாடலுக்கானப் பொருள் விளக்கங்கள் கொடுக்கப்பட்டு, நன்முறையில் பதிப்பித்து வழங்கிய குந்தவை நாச்சியார் மகளிர் கலைக்கல்லூரியின் தமிழ்த்துறை உதவிப்பேராசிரியர் முனைவர் பு. இந்திராகாந்தி அவர்களைப் பாராட்டுகின்றேன்.

இந்நூல் வெளிவரத் தேவையான நிதியுதவி நல்கிய அரசுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூல் நன்கு வெளிவர ஆவன செய்துள்ள சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் (பொ.) திரு. கி. கணேசன், B.Com., அவர்களுக்கும், நூலகர் முனைவர் எஸ். சுதர்ஷன், M.A., B.Lit., M.L.I.S., Phd., அவர்களுக்கும் மற்றும் நூலகப் பணியாளர்களுக்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இலக்கியத்தில் ஈடுபாடுடையவர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும், தமிழ்மொழி ஆர்வலர்களுக்கும் இந்நூல் பெரிதும் பயனுள்ளதாக அமையும்.

*தஞ்சாவூர்,*
*20-09-2015*

டாக்டர் **என். சுப்பையன்,** இ.ஆ.ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்,

# பதிப்பாசிரியர் உரை

"உயர்மதிற் கூடலின் ஆய்ந்தஒண் தீந்தமிழ்"

என்று போற்றப்படும் தமிழ்மொழியானது,

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன்தோன்றி மூத்தகுடி"

என்று சிறப்பிக்கப்படும் தமிழ்க்குடியை இன்றும் உலகுக்கு அடையாளப்படுத்திக் கொண்டிருப்பதற்கு இம்மொழிக் கொண்டுள்ள கருத்தாழம் நிறைந்த படைப்புகள்தான் காரணமாகும்.

பலதரப்பட்ட இலக்கிய வகைகளைத் தன்னகத்தே கொண்டுள்ள தமிழ்மொழிக்கு, சிற்றிலக்கிய வகைகளும் மிகச்சிறந்த மணிமகுடமாகத் திகழ்கின்றன. இச் சிற்றிலக்கியங்களைப் பிரபந்தங்கள் என்றும், அவைகள் தொண்ணூற்று ஆறுவகைப்படும் என்றும் தமிழ்ச் சான்றோர்கள் வகுத்துள்ளனர்.

அவற்றுள் ஒன்று பிள்ளைத்தமிழ். தமிழ் இலக்கியத்திற்கு பல பிள்ளைத்தமிழ் நூல்கள் கிடைத் துள்ளன. அவற்றுள் குமரகுருபரர் பாடிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், முத்துக்குமாரசாமிப் பிள்ளைத்தமிழ் போன்றனவும், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் இயற்றிய பத்து பிள்ளைத்தமிழ் நூல்களும் தமிழன்னைக்கு பெருமை சேர்த்து வருகின்றன. இத்துடன் சிவஞான சுவாமிகள் இயற்றிய அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ், அருணாசலக் கவிராயர் எழுதிய அனுமார் பிள்ளைத் தமிழ் ஆகியனவும் வெளிவந்துள்ளன. பிள்ளைத்தமிழ் இலக்கியத்திற்கு மேலும் சிறப்பு சேர்க்கும் வகையில் அமைந்தது பகழிக்கூத்தர் இயற்றிய திருச்செந்தூர்

பிள்ளைத்தமிழாகும். திருச்செந்தூர் வாழ் முருகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு சிறப்புப் பாயிரம் நீங்கலாக 103 செய்யுட்களைக் கொண்டு எழுதப்பெற்றது திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ்.

பிள்ளைத்தமிழ் இலக்கியங்கள் குழந்தைகள் மூன்றாம் மாதம் தொடங்கி இருபத்தியொன்றாம் மாதம் வரை பத்துப் பருவங்களில் பாடப்பெற்றுள்ளது. பிள்ளைத்தமிழ் நூலான இந்நூல் சிற்றிலக்கிய வகையில் சிறப்பிடம் பெற்று கற்றவர்களும், பக்தி சிந்தனை உடையவர்களும் போற்றி புகழும் வகையில் விளங்கும் பெருமையுடையதாக விளங்குகிறது.

நூல் முழுவதும் முருகனின் சிறப்புகளும், அவரின் பெருமையும் பேசப்படுகிறது. "செந்நிறக் குடுமிவெண் சேவற் பதாகையாய் என்றும், பொதியமலை முனி அகத்தியனுடன் பிரம்மனும் வணங்கும் சிறப்புடையவன் என்றும், இறையனார் அருளிய நூலுக்கு பொருளை முழுவதும் விளக்கிக் கூறியவன் என்றும் சிறப்பிக்கப்பட்டுள்ளான்.

அவன் அழகு என்று சொல்லும்போது அன்னை, தந்தையுடன் வீற்றிருக்கும் சிறப்பு, ஆறுபடை வீடுகளில் குடிகொண்டிருக்கும் சிறப்பு, அங்கு பக்தர்களுக்கு அருள்பாளிக்கும் சிறப்பும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. முருகன் நடத்தியத் திருவிளையாடல்கள் அவன் திருஞான சம்பந்தராக அவதரித்த சிறப்பு, அசுரனை வென்ற திறம், வள்ளி தெய்வானையுடன் காட்சிதரும் சிறப்பு, என முருகனின் சிறப்புகள், பாடலுக்குப் பாடல் சிறப்பு சேர்க்கும் வகையில் பதிவு செய்யப்பட்டுள்ளது. 'வண்டு பாயுந் திருச்செந்தூர்', 'திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்' என்று திருச்செந்தூரும், 'பொய்யா வளமை தரும் பெருமை பொருனைத் துறை' என்று தாமிரபரணித் துறையின் சிறப்பும் பேசப்பட்டுள்ளது.

முருகனை காக்க வேண்டுமென்று திருமால், சிவபெருமான், உமையவள், விநாயகர், கலைமகள், அரிகரபுத்திரன், பகவதி, காளி, ஆதித்தர் ஆகிய தெய்வங்களை போற்றி வணங்கும் பாடல்கள் பக்தித்திறத்துடன் விளக்கப்பட்டுள்ளது.

முருகனின் தோற்றம், அருள், இயல்பு, திருச்செந்தூர் தலத்தின் வளம் என்ற வகையில் இந்நூலில் கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. இந்நூலானது சரசுவதி மகால் நூலகத்தில் உள்ள ஏட்டுச் சுவடியினைக் கொண்டு, இதற்கு முன் பதிப்பித்து வெளிவந்துள்ள நூல்களை ஒப்புநோக்கியும், மூலச் சுவடியின் வழி பாடல்களை சரிசெய்தும், பாடல், பாடலுக்கானப் பொருள் விளக்கங்கள் கொடுக்கப்பட்டுப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

இத்துடன் பிள்ளைத்தமிழின் தோற்றுவாய், பிள்ளைத் தமிழில் இடம்பெறும் பருவங்கள், இலக்கியங்களில் பிள்ளைத்தமிழ்க் கூறுகள், தமிழர் வாழ்வில் முருக வழிபாடு, திருச்செந்தூர் என்னும் திருத்தலத்தின் சிறப்பு, என இந்நூல் பல தகவல்களை ஒருங்கிணைத்து நூலாக வெளிவருகின்றது.

இந்நூலுக்கு ஆக்கம் சேர்க்கும் வகையில் பல தகவல்களைத் தந்துதவிய எம் துறைத்தலைவர் உள்ளிட்டப் பேராசிரியர்களுக்கு மனமார்ந்த நன்றிகள். இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ள நூல் தொடர்பான பிற தகவல்களை அறிவதற்கு நூல்கள் தந்துதவிய தமிழ்ப் பல்கலைக் கழக நூலகர் கா. கௌதமன் அவர்களுக்கும் என் உள்ளம் நிறைந்த நன்றிகள்.

திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ்ச் சுவடி நூலினைப் பதிப்பித்து வெளியிட மகிழ்வுடன் அனுமதி வழங்கிய மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும் நூலக இயக்குநருமான

**டாக்டர் என். சுப்பையன், இ.ஆ.ப.,** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன். மேலும் இந்நூல் வெளிவர ஆவன செய்துள்ள சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் (பொ.) திரு. **இ. கணேசன்,** B. Com., மாவட்ட ஆட்சித்தலைவரின் நேர்முக உதவியாளர் (கணக்கு) அவர்களுக்கும், நூலகர் முனைவர் **எஸ். சுதர்ஷன்,**M.A.,B.Lit. M.L.I.S.Ph.D அவர்களுக்கும், இந்நூலின் உள் கட்டமைப்புச் செய்திகள் நிரல்பட அமைய வழிகாட்டிய சரசுவதி மகால் நூலகத் தமிழ்ப்பண்டிதர் திரு. மணி. மாறன் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன.

இந்நூலை நன்கு அச்சிட்டுத் தந்த நூலக ஒளி அச்சுக்கோப்பு பிரிவினருக்கும் மற்றும் நூலகப் பணியாளர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர், **பு. இந்திராகாந்தி**
*03-09-2015.*

---

## பொருளடக்கம்

# பிள்ளைத்தமிழின் தோற்றுவாய்

மனிதனின் மனதில் தோன்றும் உணர்வுகள் மொழி வடிவம்பெறும் நிலையில் இலக்கியங்கள் தோன்றுகின்றன. அவ்வகையில் நம் தாய்மொழியாம் தமிழ் பல்வேறு இலக்கிய வகைகளை உள்ளடக்கி சிறப்புற்று விளங்கும் தலைசிறந்த மொழியாகும்.

திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ் சிற்றிலக்கிய வகையைச் சேர்ந்ததாகும். தமிழ் மொழியின் தலைசிறந்த இலக்கண நூலான தொல்காப்பியத்தில் இடம்பெறும், "குழவி மருங்கினும் கிழ்வதாகும்" என்ற நூற்பாவைக் கருவாகக் கொண்டு பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் தோற்றம் பெற்றன. பிள்ளைத்தமிழ் என்பது கடவுளையோ, அரசனையோ மனிதருள் சிறந்தவரையோ குழந்தையாகக் கருதிப் போற்றிப் பாடுவதாகும்.

தூது, உலா, அந்தாதி, கலம்பகம் முதலிய சிற்றிலக்கியங்கள் உலக மொழிகளிலும் இந்திய மொழிகளிலும் காணப்படுகின்றன. ஆனால் பிள்ளைத்தமிழ் இலக்கியம் தமிழ் மொழிக்கே உரிய இலக்கிய வகையாகும். மற்ற மொழிகளில் பிள்ளைத் தமிழுக்குரிய கூறுகள் விளங்குகின்றனவேயன்றித் தமிழில் உள்ளது போல் தனித்ததோர் இலக்கிய வகையாக உருப்பெற்றுத் திகழவில்லை. தமிழ் என்னும் சொல் பிள்ளைத் தமிழ் என்ற தொடரில் இணைந்திருப்பது பிள்ளைத் தமிழின் தனிச் சிறப்புகளுள் ஒன்றாகும். பிள்ளைத்தமிழ் தமிழ்மொழியின் பெருமைகளையும், குழந்தைச் செல்வத்தின் சிறப்புகளையும், மாண்புடையாளர்களின் மதிக்கத்தக்கப் பெருமைகளையும், அவர்களின் வரலாறுகளையும் சிறந்த முறையில் கூறுகின்றது.

மனிதனின் பல்வேறு பருவங்களில் மிக இனிய பருவமாக அனைவராலும் போற்றப்படும் பருவம் குழந்தைப் பருவமாகும். ஆதலால் புலவர்கள் தாம் போற்றும்

கடவுளையும், மனிதனையும் குழந்தையாக கற்பனை செய்து பாடுவதில் பெருமகிழ்ச்சிக் கொண்டனர். மேலும் மக்களில் சிறந்தவரையும், குழந்தையாகக் கருதிப் போற்றுகின்ற தன்மையும் ஏற்பட்டது.

## பிள்ளைத்தமிழில் இடம்பெறும் பருவங்கள்

பிள்ளைத்தமிழ் சிற்றிலக்கியத்தின் நிலையை உயர்த்திக் காட்டுகின்றது என்றால் மிகையல்ல. பிள்ளைத்தமிழ் நூல்கள் பத்துப் பருவங்களைக் கொண்டது. ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்கும், பெண்பாற் பிள்ளைத்தமிழுக்கும் பொதுவாகக் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி முத்தம், வருகை, அம்புலி ஆகிய ஏழு பருவங்களும் பாடப்பெறும். சிற்றில், சிறுபறை, சிறுதேர் ஆகிய மூன்று பருவங்களும் ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்குப் பாடப்பெற்று மொத்தம் பத்து பருவங்களைக் கொண்டதாக விளங்குகின்றது.

"காப்பொரு செங்கீரை தால்சப் பாணி
யாப்புறு முத்தம் வருகவெண் நல்முதல்
அம்புலி சிற்றில் சிறுபறை சிறுதேர்
நம்பிய மற்றவை சுற்றித் தளவென
விளம்பினர் தெய்வ நலம்பெறு புலவர்"

என்ற பன்னிருப் பாட்டியல் நூற்பா பிள்ளைத் தமிழ் பருவங்களை விளங்குகின்றது. பெண்பாற் பிள்ளைத் தமிழுக்கான இறுதி மூன்று கழங்கு, அம்மானை, ஊசல் பருவங்களை,

"ஆடுங் கழங்கம் மானை ஊசல்
பாடும் கவியால் பகுத்து வகுப்பின்
அகவல் விருத்தத் தால்கினை அளவாம்"

என்ற இலக்கண விளக்கப் பாட்டியல் நூற்பாவால் அறியமுடிகின்றது.

## பருவ விளக்கம்

**1. காப்புப் பருவம்:** குழந்தைக்கு வயது மூன்று மாதங்கள் ஆகிய நிலையில் பிள்ளையைக் காக்க என்று திருமால், சிவபெருமான், உமையவள், கணபதி, கலைமகள் அரிகரபுத்திரன், பகவதி ஆதித்தர். முப்பத்து முக்கோடி தேவர்கள் ஆகிய பல கடவுளர்களைப் பாடி நிற்பதாகும்.

**2.செங்கீரைப் பருவம்:** குழந்தைக்கு வயது ஐந்து மாதங்கள் ஆகிய நிலையில் பாடப்பெறுவது குழந்தை ஒரு காலை மடக்கி ஒரு காலை நிமிர்த்தி இரண்டு கைகளையும் நிலத்தில் ஊன்றி முகத்தை மேல் நோக்கி ஆடுதலாகிய பருவத்தைக் குறிக்கும்.

**3. தாலப் பருவம்:** ஏழாம் மாதத்தில் நிகழ்வதைப் பாடுவது தாலப் பருவமாகும். இப்பருவம் குழந்தை தாலாட்டைக் கேட்கும் பருவம், தாலாட்டு ஒருவகை நாவசைப்பு, தாலாட்டையேல் தாலாட்டையேல் என்னும் அடுக்கு, தாலோ, தாலேலோ என இணைத்தும் தரல் எனத் தனித்தும் மரீஇயிற்று.

**4. சப்பாணிப் பருவம்:** இப்பருவம் ஒன்பதாம் மாதத்தில் நிகழ்வதாகும். குழந்தையை இரு கைகளையும் சேர்த்துத் தட்டி ஒலி எழுப்புமாறு வேண்டுவதாக அமையும்.

**5. முத்தப் பருவம்:** பதினோராம் திங்களில் பாடப்படுவதாகும். குழந்தையை முத்தம் தருக என்று தாயும், பிறரும் வேண்டுவதாக பாடப்படும். குழந்தையிடம் முத்தம் கேட்கும் பொருட்டு எழுந்தப் பருவமாகும்.

**6. வருகைப் பருவம்:** பதின்மூன்றாம் மாதத்தில் பாடுவதாகும். குழந்தைகள் எழுந்து நின்று தள்ளாடித் தள்ளாடி நடக்கும் பருவத்தில் பெற்றோரும், மற்றோரும் சிறிது எட்ட இருந்து குழந்தையை வா வா என்றழைத்து மகிழ்ந்து திழைப்பர்.

**7. அம்புலிப் பருவம்:** இப்பருவம் பதினைந்தாம் மாதத்தில் நிகழ்வதாகும். நிலாவை குழந்தையோடு விளையாட வருமாறு விளித்துக் கூறுவதாக அமையும். சாம, பேத, தான, தண்டம் ஆகிய நான்கு நிலைகளில் இது பாடப்பெறுவதாகும். இப்பருவம் பாடுவது சற்று கடினம் என்ற நிலையில் "அம்புலி புலவர்களுக்கு புலி" என்ற சொல் வழக்கு உள்ளது.

**8. சிற்றில் பருவம்:** இது பதினேழாம் மாதத்தில் பாடப்படுவது. மணல் வீடு கட்டி விளையாடும் சிறுவர், பாட்டுடைத் தலைவர், அச்சிற்றிலை அழிக்க வரும்போது, சிற்றிலை அழிக்காது இருப்பாயாக என வேண்டுவதாக அமையும்.

**9. சிறுபறைப் பருவம்:** இப்பருவம் குழந்தையின் பத்தொன்பதாம் மாதத்தில் பாடப்பெறும். பாட்டுடைத் தலைவனாகத் தாம் பாடும் சிறுவனைச் சிறுபறையடித்துக் கொண்டு விளையாடும்படி வேண்டும் பருவமாகும்.

**10. சிறுதேர்ப் பருவம்:** இந்தப் பருவம் இருபத்தி யொன்ராம் மாதத்தில் நிகழ்வது. குழந்தை இப்போது நிறைவாகச் சிறுதேர் உருட்டி விளையாடும் பருவம் சிறுதேர்ப் பருவமாகும். சிற்றில், சிறுபறை, சிறுதேர் ஆகிய பருவங்கள் ஆண்பிள்ளைகளுக்கே உரியது.

**இறுதி மூன்று பெண்பாற் பிள்ளைத் தமிழ் பருவஙகள்**

**1. கழங்காடல் பருவம்:** பதினேழாம் மாதத்தில் பெண் பிள்ளை கழங்கு என்கிற கழற்சிக் காய்களை வைத்து விளையாடுவதைப் பாடுவதாகும்.

**2. அம்மானைப் பருவம்:** பெண் குழந்தையின் பத்தொன்பதாம் மாதத்தில் காய்களைக் கொண்டு மூன்று பெண்கள் அம்மானை விளையாடுவதாகப் பாடப்படும்.

**3. ஊசற்ப் பருவம்:** இப்பருவம் இருபத்தியொன்ராம் மாதத்தில் நிகழும் பாட்டுடைத் தலைவியை ஊசலாடுமாறு வேண்டிப் பாடுவதாகும். பெண்பால் பிள்ளைத்தமிழில் கழங்கு, அம்மானை ஊசல் ஆகிய பருவங்கள் இறுதியில் வரும் சில பிள்ளைத்தமிழில் நீராடல் பருவம் இடம்பெறும்.

## இலக்கியங்களில் பிள்ளைத்தமிழ் கூறுகள்

தமிழ் இலக்கியங்கள் பலவற்றில் பிள்ளைத்தமிழ் நூல்களில் பாடப்பெறும் செய்திகள் பலவும் இடம் பெற்றுள்ளன. வள்ளுவப் பெருந்தகை,

"பெறுமவற்றுள் யாமறிய தில்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்லபிற"

"மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலன் நன்மக்கட் பேறு"

என்று மக்கட்பேற்றின் மேன்மையைப் போற்றுகின்றார். எத்தனைப் பெருஞ்செல்வராயினும் மக்களைப் பெறாதார் வாழ்க்கை பயனற்றதாகவே முடியும் என்பதை,

"படைப்புப் பல படைத்துப் பலரோடுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுத் தொட்டுங் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்ப்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்கும்
பயக்குறை யில்லைதாம் வாழு நாளே."

பாண்டியன் அறிவுடை நம்பியின் புறநானூற்றுப் பாடல் குழந்தையின் உயர்வைச் சுட்டுகிறது. இப்படி சங்க இலக்கியங்கள் மட்டுமல்லாது பிற இலக்கியங்களிலும் காணமுடிகிறது.

மணிமேகலையில் 'சிறுதேர் இழுத்தல்' பற்றிய குறிப்பும், சிலப்பதிகாரத்தில் 'ஊசல்' பற்றிய செய்தியும் இடம்பெற்றுள்ளது. பெரியபுராணத்தில் கூட பிள்ளைத் தமிழ்ப் பருவங்களின் பெயர்களிலேயே பாடல்களை அமைத்து சேக்கிழார் பாடியுள்ளதை அறியலாம்.

சங்க காலம் தொடங்கி கி. பி. 12ஆம் நூற்றாண்டு வரை தமிழில் தோன்றிய இலக்கியங்கள் பலவற்றில் காணப்படும் பிள்ளைத்தமிழ் கூறுகள் பிற்காலத்தில் தனியாக பிள்ளைத்தமிழ் இலக்கியமாக வளர்ச்சி அடைந்தது என்றால் மிகையல்ல.



# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், மருத்துவக் குறிப்புகளையும், இன்ன பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. அச்சுவடிகள் பழுதடைவதற்குள் சரசுவதி மகால் நூலகத்திற்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பெரிதும் பயன்படும்.

இந்நூலகத்திற்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை, பெருமைசால் சரசுவதி மகால் நூலகம் உள்ளளவும் பெறுவர். அவை நூல் வடிவில் பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு. அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகால் நூலகத்திற்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும்

இயக்குநர்,

சரசுவதி மகால் நூலகம் மற்றும் ஆய்வு மையம்,

தஞ்சாவூர்.

# திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ்

### சிறப்புப் பாயிரம்

செந்தமிழுக்கு வாய்த்ததிருச் செந்தில் பதிவாழுங்
கந்தனுககுப் பிள்ளைக் கவிசெய்தான் - அந்தோ
திருமாது சேர்மார்பன் தேர்பாகற் கன்பு
தருமர் பகழிக் கூத்தன்.

(தெ.ரை) இலக்குமியானவள் வத்சம் என்னும் மனுவின் வடிவாக வந்து தங்கியிருக்கின்ற மேன்மை பொருந்திய மார்பினை உடையவனும், பாரதப் போரில் அருச்சுனனுக்குத் தேரோட்டியாய் நின்றவனுமாகிய திருமாலுக்குத் தன் மனத்தில் எழுந்த அன்பை தந்தருளிய பெருமை உடையவராகிய பகழிக்கூத்தர் என்ற புலவர், செம்மை பொருந்திய தமிழ் மொழிக்குப் பரம குருவாக அமைந்தவனும், திருச்செந்தூர்த் திருத்தலத்தில் கோயில் கொண்டிருக்கின்றவனுமாகிய முருகப்பெருமானுக்குத் திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் என்னும் இப்பிள்ளைத் தமிழை இயற்றிச் சமர்ப்பித்தார்.

### காப்புப் பருவம்

### திருமால்

பூமா திருக்கும் பதங்களபப்
புயயூ தரத்துப் பொற்றக் ககனவேள்
முகட்டுப்புத்தேள் பொதிய முனி அகத்திய முனிக்குத்
தமிழ் உரைத்த தேசிகனை

குரைகடற்குக் குடக்கே குடிகொண் டிருந்தசெந்திற்
குமரப் பெருமான் பட்டனை
காறகத்தே மாமலையர் பெற்ற செழும்பொருட்டுச்
செந்தா மரையில் வீற்றிருக்கும்

தேவை படைத்துப் படைக்குமுதல்
சேரப் படைத்துப் படைக்கும்உயிர் மாறன்வுத
அனைத்துந் தழைக்கும்படி கருதி அளிக்கும்படிக்கும்
தனியே சங்காழி பதைத்த பெருமானே. 1

(தெ. உரை) தேன் நிறைந்திருப்பதும் இலக்குமியின் கோயிலாக விளங்குவதும், தன்னில் பொன்மயமான பூந் தாதுக்களை உடையதுமான செந்தாமரை மலரில் கோயில் கொண்டிருக்கும் பிரம்மனை முதன்முதலில் படைத்தவரும், படைப்புத் தொழிலுக்குக் காரணமாக விளங்கும் வேதங்கள் அனைத்தையும் அவனுக்குக் கற்றுக்கொடுத்து, அவன் படைக்கின்ற உயிர்கள் எல்லாம் உலகில் நன்றாக வளருமாறு செய்தவரும், அவ்வுயிர்களின் அளவுக்குத் தானே அளவு கோலாக இருந்து அவை நல்வாழ்வு வாழ வேண்டும் என்னும் நினைவை மனத்தில் கொண்டவரும், அவ்வுயிர்களைக் காவல் காப்பதற்கு உரிய கருவிகளான சக்கரத்தையும், சங்கினையும் ஏந்தியிருக்கின்றவனாகியத் திருமால், மலர்மகள் வெற்றிக்கு அறிகுறியாக வந்து தங்கியிருக்கின்ற, பசுமையான கலவை மணச்சாந்தினை அணிந்திருக்கும் மலை போன்ற தோள்களைக் கொண்டிருக்கும் இந்திரன் வணங்கவும்.

வான்வெளியின் உச்சியில் உள்ள தேவனானப் பிரம்மன் புகழவும், பொதிகைமலை வாழ்கின்ற முனிவர்களின் அரசனாகிய அகத்தியனுக்குத் தமிழ் இலக்கணத்தைக் கற்றுக்கொடுத்த பரம குருவானவனும், அலைகள் ஒலிக்கும் தென்திசைக் கடலுக்கு மேற்கில் குடிகொண்டிருக்கும் முருகப் பெருமானைக் காத்தருள வேண்டும்.

## சிவபெருமான்

உடல்வளை குழவி மதியமும் நதியும்
உரகமும் ஒழுகு செஞ்சடைக் காட்டினார்
உமைமுலை குழைய மருவிய புனிதர்
உரைகொடு பரவு தொண்டரைக் காத்தவர்

உமிழ்திரை மகர சலதியில் விளையும்
உறுவிட வடவை கண்டமட் பேற்றினர்
உடைமணி கனக பரிபுர முறல
ஒருமுறை பவுரி கொண்டமெய்க் கூத்தினர்

வடவரை முதுகு நெளிநெளி நெளிய
வரிசிலை யெனவொர் அம்பினைக் கோத்தவர்
மருவிய சகல வடிவினரறிய வடமலைத்
தமிழை வளம்பெறச் சேத்தவர்

மறுவறு முழுவெண் நிலவேழ்வி முறுவல்
வளரொளி இருள்வ னங்கெடப் பூத்தவர்
மதுரையில் இறைவர் இரசத பொதுவர்
மணமலி பதயு கங்களைப் போற்றுதும்

இடவிய மதுர வரியளி குமுறி
இடறிய களப குங்குமத் தூட்பொதி
இமசலம் உழுகு கனதன விரகம்
எழுகுற வனிதை சிந்தையிற் சேர்ப்பனை 2

இடிபடு முரச முழவுடன் அதிர
எதிர்பொரு நிருதர் தம்படைப் போர்களம்
இடமற முதிய கழுதுகள் நடனம்
இடவடல் புரிய மொய்ப்பனைத் தூற்றிய

**கடதட வமுவை முகமுள கடவுள்**
**கருணையின் முதிய தம்பியைப் பார்ப்பதி**
**கரமலர் அணையில் விழிதுயில் மருவி**
**களிபெறு குதலை மைந்தனைப் பூப்பயில்**

**கடிகமழ் தருவின் இறைமகள் புதிய**
**கலவியின் முழுகு கொண்கனைப போற்றிசெய்**
**கலைமகள பரவு குமரனை மதுர**
**கவிதரு குரிசில் கந்தனைக் காக்கவே.** *3*

(தெ. உரை) மிகுதியான தேன் உண்ணும் கோடுகளை உடைய வண்டுகள் ரீங்காரம் செய்துகொண்டு ஏற்றிச் சென்ற கலவைச் சாந்தாகிய கும்குமம் நிறைந்த குளிர்ச்சியான நீர் வழிகின்ற பெரிய முலைகளால் உண்டாக்கப்பட்ட காம வேதனை மனத்தில் வளர்வதனால், தெய்வயானை மனத்தில் இருத்தி நினைக்கின்ற தலைவனும், இடிபோல் முழக்கம் செய்கின்ற முரசு குடமுழவுடன் சேர்ந்து ஒலி எழுப்பத் தன்னை எதிர்த்துப் போர் புரிந்த அசுரர்களின் படைகள் நிறைந்தப் போர்க்களத்தில் நிற்க இடமில்லாமல் வயதால் முதிர்ச்சியடைந்தப் பேய்கள் நடனமிடுமாறு அசுரர்களைக் கொன்றொழித்தத் தன்மையுடையவனாக விளங்கியவன்.

நான்கு புறங்களிலும் மதநீர் சிந்துகின்ற யானையின் முகத்தை உடைய விநாயகப்பெருமானின் அருந்தன்மையில் மிகுந்த இளையவனுமாக இருந்தவன்.

பார்வதி தேவியின் கை மலராகிய படுக்கையில் இருந்து கண்கள் மூடி உறக்கம் கொண்டு மகிழ்ச்சி அடைகின்ற மழலை மொழி பேசும் குழந்தையானவனும், மலர்கள் நிறைந்து மணம் கமழ்கின்ற ஐந்து மரங்களின் நிழலில் வாழும் இந்திரனின் மகளாக வளர்ந்த தெய்வயானையுடன் புதுமையான கலவியில் மூழ்குகின்ற கணவனும், வணங்கும்

தன்மை உடைய சரசுவதிதேவி புகழ்ந்துரைக்கும் முருகப்பெருமானும், அடியார்களுக்கு இனிமையான கவிபாடும் வாக்கினை அருள்கின்ற தலைவனாகிய கந்தனை காத்தருளவேண்டும்.

தன்னுடைய உடம்பு வளைந்திருக்கும் இளம் பிறையினையும், கங்கைநதியினையும், பாம்பினையும் கொண்டிருக்கின்ற செம்மை நிறமான சடைக் காட்டினை உடையவரும், உமையம்மையின் முலைகள் குழையுமாறு தழுவிக் கொண்ட தூய்மையானவரும், நல்ல சொற்களைத் தொடுத்துப் பாடி வணங்குகின்ற அடியவர்களைக் காத்தருள்பவர். அலைகள் வீசுவதும் சுறா மீன்கள் வாழ்கின்றதுமான பாற்கடலில் தோன்றிய ஆலகால விடத்தைக் கழுத்தளவு ஏற்றிய நீலநிறமான கழுத்தை உடையவரும், மாணிக்கம் முதலான சிறிய மணிகளை முத்துக்களாகக் கொண்ட பொன் சிலம்பு ஒலி எழுப்ப ஒருமுறை கால்மாற்றி ஆடியருளிய நடன சபாபதி ஆகியவரும், வடதிசையில் இருக்கின்ற மேரு மலையின் முதுகு வளையுமாறு வளைத்து வில்லாகக் கொண்டு அதில் திருமாலாகிய அம்பினைத் தொடுத்தவரும்.

குற்றமற்ற முழுநிலவின் ஒளிபோலத் தோன்றும் தம் பற்களின் புன்னகையினால் தோன்றிய ஒளி ஆணவம் கொண்டிருந்த திரிபுராசுரர்களின் கோட்டைகளை அழியுமாறு செய்தவரும்.

உலகப் பொருள்களில் எல்லாம் நிறைந்திருக்கும் உருவத்தை உடையவரும், வடமொழியும், தென்மொழியும் நலம்பெறும் பொருட்டு அவற்றை வளர்த்தவரும், மதுரையில் கோயில் கொண்டிருப்பவரும், வெள்ளியம்பலத்தில் திருநடனம்புரிந்தவருமாகிய சிவபெருமானின் இணையான அடிகளை வணங்கி போற்றுவோம்.

## உமையவள்

அரிபிரம்மா சந்ததம்பு கடிந்திடு
பரசுடைய நம்பர் பங்கின் மென்கோடி
யகில லோகமு மாதரத் தாற்படைத்தவன்
அரிவைமட மங்கை மென்க னங்குழை

திரிபுரைய ணங்கு கங்கை யம்பிகை
யகளபுரைய ணங்கு கங்கை யம்பிகை
யகிலமுமா யனுபூதியிற் பூத்த பொற்கொடி
பின்வை முகுந்தர் தங்கை அந்தரி

யுரகபண பந்தி கொண்ட கங்கணி
அமுத மூறிய பாடலுங் கேற்ற சொற்குயி
லறுசமய முங்க லந்து நின்றவள்
மறலிபர வும்ப்ர சண்ட சங்கரி

யழகெ லாமிது தானெனப் போற்று சித்தர
முரிபுருவ வஞ்சி திங்க டங்கிய
திருமுகம லர்ந்த பைங்க ருங்கிளி
முதல்வி பூரணி ஞானவித் தாய்க்கி ளைத்தவள்

முருகுவிரி கொத்தளம் பிறங்கிய
மணிமவுலி மண்ட லங்கொள் செஞ்சடை
முடிம னோண்மணி வாலைவற்றாக்கு ணக்கடன்
முகின்முலைசு மந்து நொந்த சைங்குறு

மிறுமென் வண்டீரங்கு மிண்புறு
முறுவ லாடிய கோமளத் தாற்பெ ருத்தவள்
முறைமுறைமு ழங்கு கின்ற கிண்கிணி
பரிபுரம லம்பு செம்ப தம்புரை

முனிவு தாண்மலர் வாழ்வேன் போற்றி நிற்குது
பதினெண்க ண்கருஞ் சதுமறை
முனிவருற புரிந்து நின்கழ லுறுதி
தானென நாவெடுத் தேற்றிநிற்றலு

உளமகிழ்ந்து செங்கரங்களில் மலர்கொடு
வணங்கி யஞ்ச லென்றெமை
யுடைமை யாயரு ணீயெனக் காற்ற
நட்பினை யுடுமுகட திர்ந்து விண்ட

லங்கரு மரியபகி ரண்ட மும்பி ளந்திட
வுதறு தோகைம யூரனைத் தோற்ற
முற்றெமு முபநிடத மந்த்ர தந்தி ரந்தனி
லசபையில டங்கு மைம்பு லன்களி

லுவகை கூரும னோகரத் கூத்த னைப்பொரு
தரியலர்நெ ருங்கு செங்க ளம்புகு
நிசிசரந்து ணிந்த வேம்ப றந்தலை
தழுவு பாடல்வி சாகனைப் பாற்க டற்றரு

தரளநகை செங்க ருங்க ணிந்திரை
குறமகன்ம ணம்பு ணர்ந்த திண்புய
சயில மோகன மார்பனைத் தொட்டி தழ்ப்பொதி
தழைமுகையு டைந்து விண்ட ரும்பிய

புதுநறவு சிந்து பைங்க டம்பணி
தருண சீதள மாறனைக் கொட்ட கத்துயர்
சரவணமி லங்க வந்த கந்தனை
முருகனைவி ளங்கு செந்தில் இன்புறு
சமர மோகன வேனைக் காத்த ளிக்கவே. 4

(தெ.உரை) வணங்கும் உரிமை உடைய பதினெட்டு வகையான தேவர்களின் கூட்டமும் நான்கு வேதங்களையும் ஓதி உணர்ந்த முனிவர்களும் பக்தியுடன் உன்னுடைய திருவடிகளே எங்களுக்கு அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களும் ஆகும் என்று தம்முடைய நாவினால் புகழ்ந்துரைத்துத் தினம்தோறும் மிகுதியான மனமகிழ்ச்சி கொண்டு தம்முடைய சிவந்த கைகளில் புதிய மலர்களைக் கொண்டுவந்து வணங்கி எங்களை அடிமையாகக் கொண்ட தெய்வமே.

அருள்புரிவாயாக என்று வேண்டியவர்களைக் காத்தருளிய அன்பும் அருளும் நிறைந்த குணமுடையவன். நட்சத்திரங்கள் ஒளிர்ந்து கொண்டிருக்கும் வானம் அதிர்ச்சி யடைந்து அத்துடன் மற்ற தேவலோகங்களும் அரிதான வெளி அண்டமும் பிளவுபட்டுத், தன்னிலை இழக்குமாறு வீசுகின்ற தோகையினைக் கொண்டிருக்கின்ற மயிலை வாகனமாக உடைய முருகப்பெருமானை, இயல்பாகவே பிறரால் படைக்கப்படாமல் தானாகத் தோன்றி எழுந்த உபநிடதங்களில் சொல்லப்படுகின்ற மந்திர தந்திரங்களில் அசபை என்றும் மந்திரத்தில் அடங்கியிருக்கும் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலன்களில் மகிழ்ச்சி பெருகுகின்ற அடியார்களின் மனத்தைக் கவருமாறு நடனமாடுகின்ற பொருளானவன்.

போர் புரிகின்ற பகைவர்கள் நெருங்கிப் போரிட்ட இரத்தத்தால் சிவந்த போர்க்களத்தில் புகுந்து சண்டையிட்ட இரவுக் காலத்தில் உலவுகின்றவர்களாகிய அசுரர்கள் வெட்டுப்பட்டு வீழ்ந்த வெம்மையான போர்களமாகிய நிலம் பற்றிய பாடல்களை விரும்பி ஏற்றுக்கொள்ளும் விசாக நட்சத்திரத்திற்கு உரிமையுடைய முருகப்பெருமானவன்,

பாற்கடலில் பிறந்த முத்துக்களை ஒத்த பற்களும் செம்மை நிறமான கோடுகள் படர்ந்த கண்களையும் உடைய இந்திரனின் மகளாகிய தேவசேனையும், குறவர்களின் குலத்தில் வளர்ந்தவளாகிய வள்ளியும், வந்து அணைந்த வலிமையான தோள்களையும் மலைகளை மயக்கம் கொள்ளச் செய்யும் வலிமையான மார்பினை உடையவன் குமரன்.

இதழ்களும் தோடுகளும் குவிந்த மொட்டு இதழ்கள் விரிந்து மலர, அதில் இருந்து தோன்றிய புதுமையான தேன் துளிகள் சிந்துகின்ற பசுமையான கடம்பமலர் மாலையை அணிந்திருக்கின்ற இளமையும், குளிர்ச்சியும் பொருந்தி யிருக்கின்ற தோள்களை உடையவன்.

கரையானது உயர்ந்து விளங்கும் நாணல் காட்டில் உலகம் சிறக்கத் தோன்றிய கந்தனும் முருகனுமாகிய கடவுளை, புகழ் நிறைந்த திருச்செந்தூரில் கோயில் கொண்டிருப்பவனும், போரில் தன்னை எதிர்த்தவர்களை மயக்கம் கொள்ளச் செய்யும் வேலினை ஏந்தியிருக்கின்றவனு மாகிய செந்தில் குமரனை காப்பாற்றுபவளாக விளங்குபவள்.

திருமாலும், பிரம்மாவும் தினந்தோறும் போற்றி புகழ்ந்து வணங்கும் மழுப்படையினை உடைய சிவபெருமானின் இடதுபாகத்தில் அமர்ந்திருக்கும் மென்மையான பூங்கொடி போன்றவளும், எல்லா உலகங்களையும் தன்னுடைய அன்பினால் பெற்றெடுத்த வளும், அரிவைப் பருவம் உடையவளும். இளமையான மங்கைப் பருவத்தை உடையவளும் மெல்லிய கனமான குண்டலங்களை அணிந்திருக்கின்ற காதுகளை உடையவள்.

தி ரிபுரங்களை எரித்த தேவியாகியவளும், தேவர்களின் மகளும், கங்கையும் பார்வதியும் ஆனவளும் வெளித் தோற்றத்தால் அல்லாமல் மனத்தால் அறியப்படும் பொருளாக இருப்பவளும், சிவானுபவத்தில் தோன்றுகின்ற பொன் கொடியை ஒத்தவளும், புதியவளும், திருமாலின் தங்கையும், அழகிய உருவம் உடையவளும், அரவப்பட்ட வரிகளை உடைய கங்கணத்தை அணிந்திருக்கின்றவள்.

அமுதம் பெருக்கெடுக்கின்ற அருள் செயல்களுக்குப் பொருந்தி சொற்களை அருள்கின்ற குயில் போன்றவள். ஆறு மதங்களிலும் கலந்து நிற்பவள் இயமன் போற்றி வணங்கும் வலிமை உடைய சங்கரி என்னும் பெயர் கொண்டவள்.

அழகு என்று சொல்லப்படுவனவற்றுள் எல்லாம் இதுவே அழகு என்று போற்றுமாறு தீட்டிய ஓவியமானவளும், வளைந்த புருவத்தையுடைய வஞ்சிக்கொடி போன்றவளும், சந்திரன் போன்ற அழகான முகம் மலர்ச்சி பெற்ற பசுமையும் கருமையும் கலந்த கிளி போன்றவள். முதற்பொருளான

வளும், எங்கும் நிறைந்ததிருக்கின்றவளும், ஞானத்தின் மூலப் பொருளாக வளர்ந்தவளும், இயற்கையிலேயே மணமுடைய கூந்தலைக்கொண்டு விளங்குகின்றவள். வட்டவடிவமான இரத்தின கற்கள் பதித்த கிரீடத்தை அணிந்த செம்மை நிறமான சடைவளர்த்த மேன்மையான முடியினை உடைய மனோண்மணி என்னும் பெயரை உடையவள். என்றும் இளமை பொருந்தியவளும், வற்றாத நற்குணங்களைச் சுமந்து வாடி அசைந்து ஒடிந்து விடுமோ என்று இடை துன்பம் கொள்ளுமாறு இரங்க இன்பம் மிக்க புன்னகை செய்தவள் அழகே உருவமாக அமைந்த பெருமை உடையவள் ஆகிய பார்வதி தேவியின் ஒலி எழுப்புகின்ற சலங்கையும் சிலம்பும் உடைய தாமரை மலர் போன்ற இத்தகைய சிறப்புகளை எல்லாம் உடையப் பார்வதி தேவியின் சிவந்த அடிகளை வணங்கி நிற்போம்.

## விநாயகர்

கருணையின் வழிபடு முதியவ டனையுயர்
கயிலையி னொளுமுறை யுய்த்த விதத்தினர்
கனவட கிரிமிசை குருகுல மரபினர்
கதைதனை யெழுதிமு டித்த கருத்தினர்

கலைமதி யினையிரு பிளவுசெய தொருபுடை
கதிரெடி நிறுவிய வொற்றை மருப்பினர்
கடுறுகர் பரமனை வலமுறை கொடுநிறை
கனிகவர் விரகுள புத்தி மிகுத்தவர்

பொருவரு இமகிரி மருவிய பிடிபெறு
பொருகளி றெனமிகு பொற்பு விளைத்தவர்
பொதியவிழ் நறுமல ரணைமிசை தமதுடல்
புளகம தெடிவொரு சக்தி தரித்தவர்

பொதுவற விடுசுடர் முழுமணி யொளிவிடு
பொலிவெழு பவளம தித்த நிறத்தினர்
புகர்முக முடையவர் குடவயி றுடையவர்
புகழிரு செவியினி றுத்தி வழுத்துது

இருமையும் முதவிய சிவபர சமயமு
மிமையவ ருலகும ளித்த களிப்பனை
யிசை முரல மதுகர முறைமுறை பெடையுட
னிடறிய முகைவிரி செச்சை வனப்பனை

இளகிய புளகித மலைமுலை யரமக
ளிகரிய புலவிய கற்று மழுப்பனை
யிகல்புரி பரநிசி சரர்குல கலகனை
யெனைவழி யடிமைப டைத்தி டுநட்பனை

அருமறை யுரைதரு பிரமனை யமரரு
மடிதொடி விடுசிறை விட்ட திறத்தினை
யடியவர் கொடுவினை துகள்பட நடமிடு
மழகிய சரணம ளித்த வரத்தனை

யளவறு கல்வியில் மூழ்கிய குறமக
ளடிகினி லொழுகியி ருக்கு மயக்கனை
அலையெறி திருநகர் மருவிய குமரனை
யறுமுக முருகனை நித்தல் புரக்கவே. 5

இம்மையும், மறுமையும் என்ற இரண்டு வகையான பேறுகளையும் தந்தருளிய சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொள்ளும் பெருமையுடைய சைவ சமயத்தையும், இமைக்காத கண்களை உடைய தேவர்களின் உலகத்தையும் காத்தருளிய இன்ப உருவம் உடையவன் முருகப்பெருமான். இசைபாடுகின்ற வண்டுகள் முறைப்படியாகத் தம்முடைய பெண் துணையுடன் தங்கள் கால்களை மிதித்து நடந்து அரும்புகள் மலர்ந்த வெட்சி மாலையினால் அழகு பெற்று விளங்கும் பெருமானை நெகிழ்வான சாந்தினை அணிந்திருக்கும் மலைபோன்ற முலைகளை உடைய தேவயானை கொண்ட ஊடலை போக்குகின்ற சமாதனத்தில் சிறந்தவன். மேலும் போர்புரிகின்ற அயலவர்களாகிய அசுரர்களின குலத்தை அழித்தொழித்த போர் வீரன்.

என்னை வழிவழியாக அடிமையாக ஏற்றுக்கொண்ட அருள்தன்மை உடையவனாகிய முருகப்பெருமானை, அரிதான நான்கு வேதங்களை ஓதிய பிரம்மனைத் தேவர்களும் வணங்கியதனால் தானே இட்ட சிறையில் இருந்து விடுவித்தருளிய திறம் உடையவன்

தன்னை வணங்கும் அடியார்களின் கொடிய தீவினைகள் அழியும் வண்ணம் திருநடனம் புரிகின்ற திருவடித் தாமரைகளைக் கொடுத்தருளிய வரங்கள் உடையவன்.

புணர்ச்சி இன்பத்தில் அசைவற்று மூழ்கிய குறவர் பெண்ணாகிய வள்ளி நாயகியின் அழகில் ஈடுபாடு கொண்டிருக்கும் மயக்கம் உடையவன். அலைகள் எழுந்து வீசுகின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கின்ற ஆறுமுகங்களை உடைய முருகப்பெருமானைத் தினம் தோறும் காப்பாற்றுவாராக என்று அருளினால் தன்னைப் போற்றி வணங்கிய ஒளவையை உயர்வு மிக்க கயிலாய மலையில் ஒருமுறை கொண்டு சேர்த்த திறமுடையவர்.

மேகங்கள் படிந்திருக்கின்ற மகாமேரு மலையில் குரு வம்சத்தில் பிறந்த பாண்டவர்கள் திருதாஷ்டிரர்களின் வரலாறாகிய மகாபாரதத்தை எழுதி நிறைவேற்றிய மேன்மைமிக்க மனத்தை உடையவர் கலைகளை உடைய பிறைச்சந்திரனை இரண்டாகப் பாகுபடுத்தி ஒருபுறம் ஒளி வீசுமாறு நிறுத்தியது போன்ற ஒற்றைக் கொம்பினை உடையவர். ஆலகால விடத்தை உண்ட சிவபெருமானை வலம்வந்து நன்றாக முதிர்ந்து பழுத்த மாங்கனியை கவர்ந்து கொள்ளும் தந்திரம் மிக்க அறிவை உடையவர். ஒப்புமை கூற இயலாத இமயமலையில் வளர்ந்த பெண் யானை போன்ற பார்வதிதேவியார் பெற்ற போர்த்திறம் மிகுந்த ஆண் யானை என்று கூறுமாறு மிகுந்த அழகுடையர்.

அரும்பு மலர்ந்த மணம் மிகுந்த மலர்களால் அமைந்த படுக்கையின்மேல் தன்னுடைய உடல் மகிழ்ச்சி கொள்ள வல்லபை என்ற ஒப்புமை கூற இயலாத சக்தியை தரித்துக் கொண்டவர்.

சிறப்பாக ஒளிவீசும் கதிர்களை உடைய நிறைந்த அழகிய ஒளிவீசுகின்ற அழகு மிக்க பவளம் போன்ற நிறமுடையவர். புள்ளிகளின் பொருந்தியிருக்கின்ற யானை முகத்தை உடையவர். குடம் போன்றதொரு வயிற்றை உடையவர். இப்படிப்பட்ட விநாயகப் பெருமானின் மேன்மை மிக்க புகழை இரண்டு செவிகளிலும் நிறுத்தி வணங்குவோமாக.

## கலைமகள்

அவனி பருகிய மாறிரு வுந்தியி
லமரு மொருபிற மாவெனு மந்தண
னரிய சதுமறை நாவிலி ருந்தவ
ளளவில் பலகலை யோகியு ணர்ந்தவள்

தவள முளரியில் வாழ்வுபு ரிந்தவள்
தவள மணிவட மாலைபு னைநிதவள்
தவள வடிவுள வாணிசு மங்கலி
தனது பரிபுர பாதமி றைஞ்சுது

உவரி முதுதிடர் பாயவி டம்பொதி
யுரகன் மணிமுடி தூள்படமந்தர
முலைய வெறிசுழன் மாருத மெங்கணு
முதறு சிறைமயில் வாகன னின்புறு

கவரி வரிவளை சூழ்கொடு நல்கிய
கமட முதுகினி லேறகெ டுந்திரை
கதறு கடலலை வாய்முரு கன்பெறு
கருணை தருகவி மாலைவி ளங்கவே. 6

அகன்ற கடல்கள் பழமையான மேடாக விடம் நிறைந்திருக்கும் ஆதிசேடனின் மாணிக்க கல் விளங்குகின்ற தலை தூளாகுமாறும், மந்தர மலை நிலை குலையுமாறும் வீசுகின்ற சுழல் காற்றை எங்கும் வீசுமாறு செய்கின்ற சிறகுகளை உடைய மயில் வாகனம் உடைய முருகப்பெருமான் கோயில் கொண்டிருக்கின்ற, வெடிப்பில் இருந்த வரிகளை உடைய சங்குகள் கரு முதிர்ந்த ஆமையின் முதுகில் ஏற, பெரிய அலைகள் எழுந்து ஒலிக்கின்ற சிறப்புடையது திருச்செந்தூர்.

எம்பெருமான் ஏற்றருளியதும் அவனுடைய அருளால் தோன்றியதுமாகிய கவி மாலையான இச்செய்யுள் தொகுப்பு நிலைபெற்று விளங்குமாறு, உலகங்களை எல்லாம் விழுங்கித் தன் வயிற்றில் அடக்கிய திருமாலின் தொப்புளாகிய தாமரையில் வீற்றிருக்கின்ற, ஒப்புமை கூற இயலாத பிரம்மனின் அரிதான பொருள் பொதிந்திருக்கின்ற நான்கு வேதங்களையும் அறிந்து, நாவில் அமர்ந்திருப்பவள். மேலும் அளவில்லாத சாத்திரங்களையும் தானே கற்றறிந்தவள். வெண்மை நிறமான தாமரை மலரில் வாழ்வதில் விருப்பம் உடையவள். வெண்மை நிறமான முத்துமாலைகளும், படிகமாலைகளும் அணிந்தவள். வெண்மை நிறமான திருமேனியை உடையவள். இத்தகைய மங்களச் செல்வியாகிய கலைவாணி முருகப்பெருமானைக் காத்தருள வேண்டும். அதனால் அவளுடைய சிலம்புகள் அணிந்த திருவடிகளை வணங்குவோம்.

**அரிகர புத்திரன்**

வரியு நீர்சடி லத்திடை மகுட ராசித ரித்தவர்
வளையு நீடுக ரும்புவில் மதுர வாளிதொ டுத்தவர்
அரிய பூரணை புட்கலை யரிவை மாரிரு பக்கமு
மழகு கூரும கிழ்ச்சிய ரடிவி டாமல்வ முத்துது

முரிய நான்மறை நிற்றலு முறுதியார் விருப்புனு
வுவகை யாசுக வித்துறை யுகவு நாவலன்முற்றிய
பரிய வாளைகு தித்தெழு பறவை சூழந கர்க்கிறை
பழனி வேலவ னைப்புகழ் பனுவன்
மாலைதழைக்கவே.7

(தெ.ரை) தனக்கு உரிமையாகிய ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களையும் தினந்தோறும் மன உறுதியுடன் ஓதியவர். படிப்பவர்களுக்கு மன மகிழ்ச்சியை உண்டாக்கும் தன்மை உடையதாகிய விரைந்து பாடும் செய்யுள் அமைதி முறையை அருளியவர். தன்னை எதிர்த்தவர்களை நா வன்மையினால் வெல்லும் திறமுடையருமாகிய பகழிக் கூத்தர். வாளை மீன்களானது குதித்துப் பாய்கின்ற கடல் சூழ்ந்த திருச்செந்தூரில், கோயில் கொண்டிருக்கும் தெய்வமாகிய முருகப்பெருமானைக் குறித்துப் பாடி நிறைவேற்றிய செய்யுள் மாலையாகிய இந்நூல், நிலைபெற்று விளங்குமாறு வரிந்து கட்டப்பட்டிருக்கும் நீண்ட சடைமுடியின் மேல் கிரீடங்களை அணிந்திருக்கின்றவர். வளைந்து நீண்டிருக் கினற கரும்பு வில்லின் தேன் நிரம்பிய மலர்களை அம்புகளாகக் கொண்டு தொடுத்தவர். அரிய குணங்கள் உடைய பூரணகலா, புட்கலா என்னும் தேவியர்கள் தம் இருபுறங்களிலும் அமர்ந்திருக்க மகிழ்ச்சியை உடையவராகிய அரிகரபுத்திரரின் அடிகளை இடைவிடாமல் வணங்குவோம்.

## பகவதி

விளையுஞ் செழித்தே னுடைந்துமுகை விண்டெழுகு
வெண்டா மரைப் பொருட்டு
வேதர் முடித்தலை முடிக்குஞ் சடாடவியர்
வெங்கொலை மடங்கலேறி

வளையும் பனிப்பிறை மருப்புக் குனுங்கணெடு
மயிடா சுரன்சிரத்தில்

**வலியநட மிடுகுமரி பகவதி சரோருக**
**மலர்தாள் வணக்கமுறுவா**

**முளையுந் தடந்திரைத் திமிரதம ரக்குழி**
**யுவர்ப்பறா மகரவேலை**
**யொலியிடுங் குண்டகழி சுவறிமே டாகவே**
**லுள்ளுறை கழித்துநிருதக்**

**களையுங் களைந்துகல லணிபுலோ மசைதன்மங்**
**கலநா ணளித்த பெருமாள்**
**கடியமயில் வாகனப் பெருமா ளுவந்தெனது**
**கவிமாலை கொண்டருளவே. 8**

ஓரிடத்தில் நிலையில்லாமல் அலையும் பெரிய அலைகளை உடையதும், இருளும் முழக்கமும் கொண்டதும் தன்னிடம் பெரிய குழிகளை உவர்ப்பு நீங்காத தன்மை கொண்டதும், சுறா மீன்கள் கொண்டதுமாகிய கடலானது நீர் வற்றி மேடாகுமாறு தன்னுடைய வேலாயுதத்தை உறையில் இருந்து எடுத்து அசுரர்கள் என்கிற களைகளை அழித்து அணிகலன்களை அணிந்திருக்கும் இந்திராணி தாலியைக் காத்தருளிய பெருமாள்.

வேகமாகச் செல்லும் மயில் வாகனத்தில் பயணிக்கும் பெருமாள். இத்தகைய முருகப்பெருமான் மன மகிழ்ச்சி கொண்டு நான் தொடுத்த கவிகளால் ஆகிய மாலையை ஏற்றுக்கொண்டு அருளுமாறு; இயற்கையாக விளைகின்ற செழிப்பான தேன், அரும்புகள் இதழ்விரித்து மலர்வதனால் ஒழுகுகின்ற வெண்தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம்மனின் சடைமுடியோடு விளங்கும் தலையைச் சூடியிருக்கின்ற சடையை உடையவளும்; கொடுமையாக கொலைபுரியும் தன்மைகொண்ட சிங்கவாகனத்தில் அமர்ந்து வளைந்த குளிர்ச்சி பொருந்திய பிறைபோன்ற கொம்புகளையும், சிறிய கண்களையும் உடைய நீண்ட உருவமுடையவள். மேலும் எருமை உருவம் கொண்டு தன்னை எதிர்த்துப் போர் செய்த

மகிடாசுரனின் தலையின் மேல் வலிமையுடன் நடனமாடிய குமரியாகிய பகவதி அம்பிகையின் தாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்குகிறோம்.

**காளி**

**காயுங் கொடும்பகைத் தாருக விநாசினி**
**கபாலிகங் காளிநீலி**
**காளிமுக் கண்ணியெண் டோளிமா தரிவீரி**
**கவுரிகலை யூர்தி கன்னி**

**பாயுந் தழற்புகைப் பாலைக் கிழத்திவெம்**
**பண்ணம் பணத்திமோடி**
**பரசுதர னுடனடன மீடுசூலி சாமுண்டி**
**பாதார விந்த நினைவாம்**

**ஆயும் பெருபனுவ லாசுகவி மதுரகவி**
**யரியசித் திரக விதைவித்**
**தாரகவி யிடுமுடிப் புக்குள மயங்காம**
**லடியவர்க் கருள் குருபரன்**

**றேயும் பனிப்பிறைத் திருநுதற் கடன்மகளிர்**
**தெண்ணித் திலங் கொழித்துச்**
**சிற்றில்விளை யாடல்புரி யுந்திருச் செந்தில்வரு**
**சேவகன் புகழ் பாடவே. 9**

ஆய்வதற்கு தகுந்த சிறப்புடைய ஆசுகவி, மதுரகவி, சிறந்த அமைப்புடைய சித்திரகவி, வித்தாரகவி ஆகியவற்றுக்கு மனம் மயங்காமல் தன் அடியார்களுக்கு அருள்புரியும் பெரும் குருவானவன்.

தேய்ந்ததும் குறை வடிவம் உடையதுமான பிறைச் சந்திரன் போன்ற, அழகிய நெற்றியினை உடைய கடல் துறையில், உள்ள நுளைச்சியர்கள் தெளிந்த முத்துக்களைக் கொழித்துச் சிறு வீடுகளில் விளையாடுகின்ற திருச்செந்தூரில்

கோயில் கொண்டிருக்கும் தலைவனாகிய முருகப் பெருமானின் மேன்மை மிக்க புகழ் பாடுவதற்கு ஆற்றல் பெறும் பொருட்டு; வெறுத்த கொடுமையான பகைவனாகிய தாருகா சுரனை அழித்தவள். கையில் மண்டை ஓட்டினை ஏந்தி யிருப்பவள், எலும்புகளை அணிகலாக அணிந்தவள், நீல நிறம் உடையவள். கருமை நிறம் உடையவள். மூன்று கண்களை உடையவள். எட்டுத் தோள்களை உடையவள். அழகு பொருந்தியவள். வீரம் உடையவள். கவிர நிறமுடையவள். மான் வாகனத்தை உடையவள். என்றும் இளமையான தோற்றம் கொண்டவள். பாய்ந்து எரியும் நெருப்பும் புகையினை உடைய பாலை நிலத்துக்கு உரியவள். பெரிய உருவம் உடையவள். காட்டுக்குரிய தெய்வமாக இருப்பவள். மழுப்படை ஏந்தியிருக்கின்ற சிவபெருமானும் திருநடனம் புரிந்த சூலம் ஏந்திய காளி என்ற தன்மைகளை உடைய இத்தேவியின் திருவடித் தாமரைகளை மனதில் தியானிப்போம்.

## ஆதித்தர்

வெள்ளிப் பெருந்துளி யிறைக்கும் பெருங் காற்று
வெண்டிரையின் மூழ்கியேழு
வெம்புரவி யொற்றையா ழித்தடந் தேரேறி
வேதபா ரகரிறைஞ்சப்

பள்ளக் கடற்றிரை கலக்கியூ ழியினிருட்
படலமுழு துத்துடைத்துப்
படர்சுடர் விரித்துவரு பன்னிரு பதங்கர்பொற்
பாதமலர் சென்னிவைப்பாம்.

உள்ளக் களிப்பறா வரிவண்டு பண்பாட
வோதிம நடிக்க முள்வாய்
உட்குடக் கூன்வலம் புரிமுத்த முமிழநீ
ரோடையிற் ருகுரு காணக்

**கள்ளக் கருங்கட் சிவந்தவாய் வெண்ணகைக்**
**கடைசியர் நுளைச்சியருளங்**
**களிகூரு மலைவா யுகந்தவே லனையெங்கள்**
**கந்தனைக் காக்கவென்றே** ***9***

(தெ. ரை) பூக்களில் உள்ள தேனைக் குடித்ததனால் மனதில் உண்டான மயக்கம் நீங்காத வரிகளை உடைய வண்டுகள் இசைபாடவும், அன்னப்பறவைகள் நடனமாடவும், வெளிப்புறம் முட்களும் உள்புறம் வளைந்த தன்மை உடையதுமாகிய வலம்புரிச் சங்குகள் முத்துகளை உமிழவும், நீர் நிறைந்த ஓடைகளில் நாரைகள இக் காட்சியைக் காணவும், கள்ளம் நிறைந்த கருமை நிறமான கண்களையும் சிவந்த வாயினையும் வெண்மை நிறமான பற் களையும் உடைய உழத்தியர்களும், பரத்தியர்களும் மகிழ்வு கொள்ளவும், திருச்சீரலைவாய் என்று அழைக்கப்படும் திருச்செந்தூரில் மன விருப்புடன் கோயில் கொண்டிருக்கும் வேலனை, எங்களை அருள் தன்மையால் ஆட்கொண்ட கந்தனை காப்பாற்றுவாராக என்று போற்றினர்.

நீர்ப்பெருக்கின் பெரிய நீர்த்துளிகளை வீசுகின்ற காற்றையும், வெண்மை நிறமான அலைகயையும் உடைய கடலில் மூழ்கி, மிக வேகமாகச் செல்லும் ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட ஒற்றைச் சக்கரமுடைய பெரிய தேரின்மேல் ஏறி வருபவர்கள். வேதங்களை கற்றறிந்த அந்தணர்கள் போற்றி வணங்குமாறு ஆழமானதும், நான்கு திசைகளிலும் உள்ள கடல்களின் அலைகளைக் கலக்கிக்கொண்டு ஊழிக் காலத்தில் தோன்றிய இருள் பிழம்பு முழுவதையும் நீக்கி, மிகுதியான ஒளியைப் பரப்பி வருகின்ற பன்னிரண்டு ஆதித்தர்களின் பொன் நிறம் உடைய திருவடிகளை தலைமேல் வைத்து வணங்குவோம்.

**பொதுவி லாடு மத்தற்கு நீடு**
**பொருளை யோதி யொப்பித்த சீலர்**
**புணரி தோய்ந கர்க்குச்ச காயர்**
**புலமை யோடு யொப்பற்ற கேழ்வர்**

குதலை வாய்மொ ழிச்சத்தி பாலர்
குருதி பாவை சொற்கத்தின் மோகர்
குறவர் பாவை சொற்கத்தின் மோகர்
குமரர் காவ லுக்கொத்த காவன்

மதுர கீத விற்பத்தி வாணர்
மகுட வேணி முத்துத்த ரீகர்
மவுனமோன பத்திக்க லாபர்
மனையில் வாழ்வு வைப்புற்ற நேயர்

முதுமை யான சொற்பெற்ற நாவர்
முனிவர் வேள்வி யிச்சிக்கு முணர்
முடிவிலாத கற்பத்தி லூழி
முதக்வர் தேவர் முப்பத்து மூவபர 10

(தெ-ரை) சுவை பொருந்திய இசைக் கலையில் புலமை மிக்கவர்கள். சடை முடியினையும், முத்துமாலையையும் அணிந்திருப்பவர்கள். மேன்மை மிக்க தியான நெறியைக் கைக்கொண்டிருக்கும் அடியார்கள் கூட்டத்தினர். இல்லற வாழ்வில் விருப்புடைய அன்புள்ளம் கொண்டவர்கள். பழமையான தேவமொழியைப் பேசும் நாவினை உடையவர்கள். முனிவர்கள செய்கின்ற யாகங்களை விரும்பும் உணவினை உடையவர்கள். இவர்களெல்லாம் முடிவு கூறுவதற்கு அரிதான கற்பகால வாழ்வினை உடைய யுகம் தோறும் வாழ்கின்ற தலைவர்களுமாகிய முப்பத்து மூன்று தேவர்கள் சிற்சபையில் நடனமாடுகின்ற சிவபெருமானுக்கு உயர்ந்த பிரணவ மந்திரத்தை உபதேசித்து அருளிய சிறந்த குணமுடையவன் முருகன் . கடற்கரைக்கு அருகில் உள்ள திருச்செந்தூருக்குதட் துணைவன், புலமையிலும் நீதியிலும் ஒப்புமை கூற இயலாத தலைவருமானவன்.

மழலை மொழி பேசும் உமையம்மையின் புதல்வன். இரத்தம் பாயும் ஒளிமிக்க வெற்றி வேலினை ஏந்தி யிருக்கின்றவர். குறவர் பெண்ணாகிய வள்ளியின் இன்பத்தில் ஆசையை உடைய முருகப்பெருமானுடையக் காப்புக்குச் சிறந்த காவலர்கள் ஆவர்.

காப்புப் பருவம் முற்றும்.

## செங்கீரைப் பருவம்

**வெங்காள கூட விட மெழுகு பற்பகுவாய்**
**விரித்த மாசுணமு மிழ்ந்த**
**வெண்கதிர் மணிக் கற்றை யூழியிருளை பருக**
**கங்காளர் முடிவைத்த கெங்கா நதிக்கதிர்**
**கடுப்பக் குறுங்க வைகாற்**
**கவுரியின் முலைக் கண்டீறந் தொழுகுபால்**
**கதிர் வெயிற் படமு ரிந்து.**

**மங்காமல் இரசதத் தகடெனச் சுடர்விட**
**மலைக்குறவர் கண்டெ டுத்து**
**வண்தினைக் கெருவிடுஞ் சாரலிற் கரியகுற**
**மகளிருள மூசலாடச்**
**செங்காவி விமுபருக பன்னிருகை மேகமே**
**செங்கீரை யாடி யருளே**
**திரை யெறியும் மலைவா யுகந்தவடி வேலனே**
**செங்கீரையாடி யருளே. 1**

(தெ-ரை) கொடுமையான கால கூடம் என்னும் விடம் ஒழுகுகின்ற நச்சுப் பற்களைக் கொண்ட பிளந்த வாயினை அகலமாகத் திறந்து, பெரிய பாம்பானது கக்கிய வெம்மையான ஒளியினை உடைய மாணிக்கக் கல்லின் ஒளி ஊழிக்கால இருள் போன்ற இருளை போக்கவும், மூங்கில் மரத்தில் இருந்து உதிர்ந்த முத்துக்கள் நிலத்தில் சிதறி ஒளிபரப்பவும்.

முழு எலும்புகளை அணிகலனாக அணிந்திருக்கின்ற சிவபெருமான், தன் தலையில் அணிந்திருக்கும் கங்கை

நதியின் ஒளியிளை ஒத்து விளங்கும், சிறிய பிளவு பட்டிருக்கின்ற குளம்புடைய கால்களை உடையதான கவரிமானின் முலையின் கண் திறந்து ஒழுகுகின்ற பால், சூரிய ஒளியினால் காய்ந்து வெள்ளித் தகடுபோல் ஒளிகுறையாமல் ஒளிவிடவும், மலையில் வாழ்கின்ற குறவர்கள் அதனை எடுத்துத் தினைப் பயிர்களுக்கு உரமாகப் பயன்படுத்துகின்ற தன்மையது மலைச்சாரல்.

கரிய நிறமுடையவர்களானக் குறவர் பெண்கள் மனம் தாங்கள் காவல் மேற்கொண்டிருக்கும் தினைப் பயிரின் மேலும், முருகப்பெருமானின் மேலும் என இரண்டுப் பக்கமும் ஊசலாடிக் கொண்டிருக்கும்.

அவர்களின் செம்மை நிறமான குவளை மலர் போன்ற கண்களைக் கொள்ளை கொண்ட பன்னிரண்டு கைகளை உடைய மேகமே, உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சிறு சொற்களைச் சொல்லியருள்வாயாக. அலை வீசுகின்ற திருச்சீதலைவாயை விரும்பிய கூர்மையான வேல் படையினை உடைய முருகப்பெருமானே உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சில சொற்களை சொல்லி யருள்வாயாக.

கறைகொண்ட முள்ளெயிற் றுத்துத்தி வரியுடன்
கட்செவிப் பகுறலை நெடுங்
காகோ தரச்சிர நெளிக்கவட பூதரங்
கால்சாய மகர மெறியுங்

துறைகொண்ட குண்டகழ்ச் சலராகி யேழுஞ்
சுறுக்கெழ முறுக் கெயிற்றுச்
சூரன் பயங்கொளச் சந்திர சூரியர்கள் செந்
தூளியின் மறைந்திடத்திண்

பொறைகொண்ட சூரர் மருவும் மண்டகோ ளகைமுகடு
பொதி ரெரிய நிருதருட்கப்

**பூச்சக்ர வாளகிரி கிடுகிடென வச்சிரப்**
**புருகூதன் வெருவி வேண்டுந்**

**திறைகொண்ட ளக்கவொரு மயிலேறி சேவகர்**
**செங்கீரை யாடியருளே.**
**திரை யெறிவு மலையவா யுகந்த வடிவேலனே**
**செங்கீரை யாடியருளே.** **2**

**(தெ.உரை)** கருமை நிறம் உடையதும் முள் போன்ற பற்களை உடையதும் கண்ணே காதாக உடையதும் பல தலைகளை உடையதுமான பெரும்பாம்பான ஆதிசேடன் தலை அசைக்கவும். வடதிசையில் உள்ள மேருமலை அடியோடு சாயவும், சுறாமீன்கள் துள்ளிக் குதிக்கும் பல துறைகளை உடையதும் ஆழம் மிக்கதுமாகிய ஏழு கடல்களும் வெப்பத்தின் காரணமாகக் காய்ந்து நீர் வற்றவும். கோரமான பற்களைக் கொண்டிருக்கும் சூரன் அச்சம் கொள்ளவும். சந்திரனும் சூரியனும் போர்களத்திலிருந்து எழுந்த புழுதியில் மறையவும் உறுதியான பொறுமை மிக்க தேவர்கள் வாழ்கின்ற வான மண்டலத்தில் உச்சிப்பகுதி நடுக்கங்கொள்ளவும், அசுரர்கள் நடுக்கங்கொள்ளவும். உலகத்தைச் சுற்றி அமைந்திருக்கும் சக்கரவாள மலை கிடுகிடுவென்று ஆடவும், வச்சிராயுதம் தாங்கிய இந்திரன் திறைப்பொருள்களை வேண்டிய அளவு கொண்டுவந்து கொடுக்கவும். சூரனை அழிக்கும் போருக்குப் புறப்பட்டு வரும் மயில் வாகனத்தில் அமர்ந்திருக்கின்ற வீரனே உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சிறு சொற்களைச் சொல்லியருள வேண்டும். திருச்சீரலைவாய் என்னும் திருத்தலத்தை விரும்பிய வேல் படையினை உடையவனே உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சிறு சொற்களைச் சொல்லியருள்வாயாக.

**இந்திரனும் சசியும் பரவும்படி**
**யிங்கே வந்தார் காணிந் திரையில்**
**கரசங்க முகுந்தனு மிந்தார்**
**வந்தார் பாரந்த ணனுங்**

கலை மங்கையு நின் சரணேஞ்
சேர்கின்றார் போயிண்டருடன்
பல தொண்டர் பணிந்தானாஞ் சேரலன்றாளய
முந்து முதடந்திரையும் வலம்புரி
மொண்டே கொண்டேகு முன்றில்
தொறுந்தா ளங்களும் முழங்கிடு
முந்தூர்நந்தூரும் செந்தில் வளம்பதி
வந்தருறாங்குக செங்கோ
செங்கீரை தென்றலுடன் கமழ்
குன்று புரந்தவா செங்கோ
செங்கீரை யாடி யருளே. *3*

(தெ-ரை) இந்திரனும் அவன் தேவி இந்திராணியும் உன்னை வணங்கிப் புகழ்வதற்காக இங்கு வந்திருக்கிறார்கள் காண்பாயாக. திருமகளும் தன் கரத்தில் சங்கினைக் கொண்டிருக்கின்ற திருமாலும் இதோ வந்திருக்கிறார்கள் காண்பாயாக. பிரம்மனும் கலைமகளும் உன்னுடைய திருவடிகளை அடைகின்றார்கள். தேவர்களுடன் உன் அடியார்கள் பலரும் வணங்கினார்கள் அவர்களுக்கு அருகில் சென்று அச்சம் கொள்ள வேண்டாம் என்று கூறி அவர்களை அருள் தந்து ஆட்கொள்ள வேண்டும். முன்னே வந்து பாய்கின்ற பெரிய அலைக் கொண்டு வந்து தள்ளிய வலம்புரி சங்குகள் ஊர்ந்து வரவும் வாசல்கள் தோறும் முத்துக்கள் சிந்திக் கிடக்கவும் முன்புறம் ஊர்ந்து வந்த நத்தைகள் அவற்றின்மேல் ஊர்ந்து செல்லும் வளம் மிக்க திருச்செந்தூரில் வந்தருளிய முருகப்பெருமானே உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சிறு சொற்களைச் சொல்லியருள வேண்டும். தென்றல் காற்றில் நல்ல மணம் வீசுகின்ற தென்னாட்டு மலைகளில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சில சொற்களைச் சொல்லியருள வேண்டும்.

உரையசெய வரையா மகளிர் முறை
முறை யுன் பேர் கொணடாட

வுலகு மிமைய வருலகு மாகா
வுய்ந் தோமென குட

வரை செயவன் முலை மகளிரெழு
வருந்தே பண்பாட மலைய
முனியோடு பிரம முனிதொழ
வந்தார் கண்டாயே

கரையில் மணலிடு கழியில் நேம
யகலஞ் செருசார்விற் கரிய
முது பனையடியில் வலைஞ்ஞர்
கண்ஞ் சூடி மென்கிவிற்

றிரையில் வளை தவளநகரில் வரு
குக செங்கோ செங்கரை
செருவில் நிசித சாரதிமிர் தினகர
செங்கோ செங்கீரை 4

(தெ.ரை) உன்னைப் புகழ்ந்து பாடுகின்ற மலையில் வாழும் தேவப் பெண்கள் வரிசைப்படி உன்னுடைய பெயர்களைக் கூறி வாழ்த்தவும், மண்ணுலகமும் தேவர் உலகமும் நாம் மீட்சி பெற்றோம் என்று கூறி ஆடவும், மலை போன்ற அழகிய முலைகளை உடைய பெணகள் எழுவர் உன் முன்வந்து பாடல்கள் இசைக்கவும், பொதியமலை முனி அகத்தியனுடன் பிரம்மனும் வணங்க வந்தார்கள் காண்பாயாக. கரையில் மணலைக் கொண்டு வந்து தள்ளுகின்ற உப்பங்கழிகளிலும் பெரிய மரக்கலங்கள் வந்து சேரும் இடங்களிலும் பெரிய முதிர்ந்த பனை மரத்தின் அடியிலும் வலைஞர்களின் கூட்டம் சூழ்ந்த மென்மையான காடுகளிலும் அலைகள் கொண்டுவந்த சங்குகள் தவழ்ந்து திரியும் செந்தில் நகரில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானே உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சில

சொற்களைச் சொல்லியருள வேண்டும். அசுரர்களாகிய இருளை அழித்த சூரியன் போன்றவனே உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சில சொற்களைச் சொல்லியருள வேண்டும்.

வரையொரு புளகித மலைமுலை அரிவையர்
வந்தார் பந்தாடி
மிந்த கட லிரைதரு நவமணி வடமது
வண்டார் தண்டார் பா
ருரைபொரு கவிஞரு முனிவரு அமரரும்
உன்போலு லுண்டோதா
னுரையே மால்விழி வழியடிமை
யிதுள வென் அன்பர் வன்பரனார்

கரை பொருத கடாதிட ரெழ
மயில்மிசை வருகந்தா செந்தூரா
களிமட வனமொடு முதுகுரு
கொடு படைகண் சாய தனகாளரா
திருக்கா மருவிய சிவனுட குருவா
செங்கோ செங்கீரை செருவினி
எதிர் பொரு நிசிசரா தினகர
செங்கோ செங்கீரை 5

(தெ-ரை) சாந்து அணிந்திருக்கின்ற மலைபோன்ற முலைகளை உடைய இளம் பெண்கள் பந்து விளையாடுவதற்காக வந்தார்கள். அலைமோதுகின்ற கடலுக்குத் தலைவனாகிய வருணன் கொடுத்த மணி மாலை தேன் உண்ணும் வண்டுகள நிறைந்த குளிர்ச்சியான மாலைபோல விளங்குகின்றது. சொல்லும் பொருளும் சிறக்க கவிபாடுகின்ற புலவர்களும் முனிவர்களும் மரணம் இல்லாதவர்களாகிய தேவர்களும் உனக்கு ஒப்புமையாகக் கூறக் கூடிய ஒரு தெய்வம் இருக்கின்றதோ. நீயே சொல்லியருள வேண்டும். எம்மைப் போன்றவர்கள் உனக்கே வழி அடிமைகளாவோம். இது உண்மை என்று கூறி உன்னிடம் அன்பு கொண்டனர். கரையில் வந்து மோதும்

அலை மேடாகுமாறு மயில் வாகனத்தில் அமர்ந்து வருகின்ற கந்தனே. திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகவேளே, மிகவும் இளம் பருவமுடைய நாரைகள் ஒருபுறம் துயில் கொண்டிருக்கும் குளிர்ந்த கடற்கரைச் சோலைகளை உடை அலை மோதும் அழகிய நகரில் வாழ்கின்ற குமரக் கடவுளே உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சில சொற்களைச் சொல்லியருள வேண்டும். போரில் எதிர்த்துப் போர் புரிந்த அசுரர்களாகிய இருளை ஒழிக்கும் சூரியன் போன்றவனே, உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சில சொற்களைச் சொல்லியருள வேண்டும்.

வெங்குரு முகைவிண்ட நெட்டிலைத் தாழை
அடியில் விளைந்த முட்குடக்காயினி
குணலை பூரிந்த கற்பகச் சோலை நிழலில்
நிழலிடு பந்தரிட்ட பொற்த்தூணி
அளவர் குடிலில் வாசலில் நின்றோடுந்தோணி
குழுவொடு விட்டிளைப்பாறு துறையிலிள
மணலில்
வண்டலிட்டு வற்றாத பழைய குமிழி
வாவியில் வாண்டானந்தரவு குலையில்

நெருங்கு மேக்கரிககான கழனியி
பரமரு நெற்குலைத் தாவி
இளைய குமாரருர
திண்டோ மென காலிலிறுகு குரும்பை
யொத்த பொறப்பார் நசில் மகளிர்
கழந்த வைத்தனலுப் பூசல
அருகில் இசை விடாவரி வண்டர்
தண்டர் முரிலெவரு மகிழ்ந்த சித்திரச்
சாலை நிழலில் நவமணி ஒன்று
பொற்தேவர் மகுடமிடவ முனி
யிலவங்காளஞ் சீனமென
மொழிது தங்கு மற்புதத் தீவில்

வணிகர் விலையிடுகின்ற மிக்கப்பட்டாடை
வகை யிலேறி மார்வடம் பூணும்
இரை வாஞெண்டு முக்குழித்தாரும்
அளறு கொழுது விகடங்கலவித்
திலவித்தார் தாவிவிடு முள்
வெயிலில் வெங்கா மனங்காண

முறுக வளைந்து முத்தி முத்தேறு
கரிய வெளிய கரும்பூசி சுற்று
சிற்றாலை நிலையில் முதிய
தாழியில் வெந்தானும் பாகில்

முடியை விளம்பிவைத்து முட்டாது
கடைசி கொடு வருகின்ற கட்
குடப் பானை முதுகில்
முளைகோள் சாலியின்மென் பூகந்தோறும்

முருகு துழும்பு கொத்துடைப்
பானல் சிதறி மணிகருதிர்ந்த
வித்தி கைப்பிட மறுகில் முதல்வ
தேவி பந்தாடு காவில் முனிவர் விரும்பு

கற்புடைப் பான்மை மகளிர்
தெளிபுனல் மொண்டொடுத்தர் கைச்
சாலில் மடுவில் மூழ்கு மேதியிலவம்பே
செஞ்செல பாயச் சேதவில்

விளைந்த நெற்குலைக் காயிலுமுத்
தெளி யிலுடைந்த கட்டியிற்ப்
பாரம் தரு நெரியு மெரில் மண்டூகம்
பானல் செருமி முளங்கு கற்பிள

பொன் மேடையில் விழும் பெரும்புனல்
நற்பெருக்கான தமர் திமிர் வாரியிலே
எங்கனுந் தாவுந் திரையில்

வலம்புரியிக் கனத்தோடு
பூணில முத்தும் வளந்த பட்டினக் காவில்
முருகல் தெரியுஞ் செலவ
செங்கோ செங்கீரை

தினகராஞ்சவிட புலத்தேவர்
மறுக மகபதிமுன் குவிந்த
முத்தார மிவுலித்திரை கொள்ளே
சேவக செங்கோ செங்கீரை. 6

(தெ-ரை) சிறிய அரும்புகள் மலர்ந்திருக்கின்ற நீண்ட இலைகளை உடைய தாழம்புதரின் அடியில் நன்கு முதிர்ச்சி பெற்று விளைந்திருக்கின்ற முள்குடம் போன்ற உருவமுள்ள காய் இருக்கின்ற இடங்களிலும், இனிமையான மணம் கமழ்கின்ற குவளை மலர்கள் மலர்ந்திருக்கும் ஓடைகளிலும், தேவர்கள் கூத்தாடிய வானளாவிய கற்பக மரம் வளர்கின்ற சோலையில் நிழல் படர்கின்ற பூம் பந்தலாக அமைந்த பொன் தூண்களின் இடையிலும், நெய்தல் நில மக்கள் வாழ்கின்ற குடிசைகளிலும், வாசல்களில் நின்று ஓடுகின்ற தோணிகளைக் கூட்டமாக வந்து நிலத்தின் அருகில் கட்டிவிட்டு இளைப்பாறுகின்ற கடல் துறையின் மணலில் பெண்கள் வண்டல் இழைத்து விளையாடி வற்றாமல் நிறைந்திருக்கும் பழமையான சிறு குமிழிகளை உடைய தடாகத்திலும்,

நீர் நாரைகள் தாவுகின்ற, குராமரங்கள் நெருங்கி வளர்கின்ற மேடுகளிலும், கடல்துறையில் உள்ள காடுகளை உழுகின்றவர்களின் நிலங்களில் குலை குலையாக நெற்கதிர்கள் நிறைந்திருக்கும் இட்ங்களிலும், இளம் சிறுவர்கள் செலுத்துகின்ற வலிமையான சிறிய தேர்கள் உடைய சோலைகளிலும், ஒன்றோடு ஒன்று நெருங்கிய தென்னங் குலைகள் போலக் காணப்படும் பொன் அணிகலன்கள் அணிந்திருக்கும் முலைகளை உடைய பெண்கள் அமைத்த ஊஞ்சல்களின் அருகில் இளம் பருவமுடைய இளைஞர்களின் ஊடல் விளையட்டுகளிலும்,

வண்டுகள் சூழ்ந்த குளிர்ச்சி மிக்க மாலைகளால் அனைவரும் கண்டு மகிழ்ந்த ஓவியச் சாலைகளில் ஒளிமிக்க மணிகள் பதிக்கப்பட்ட திண்ணைகளிலும், தேவர்களின் கிரீடங்கள் வீழ்கின்ற நிலத்திலும், வங்கம் சீனம் என்னும் மொழிகள் பேசப்படுகின்ற அழகான இயற்கை அழகுமிக்க தீவுகளில் இருந்து வணிகர்ளால் கொண்டு வரப்பட்ட பட்டாடைகளின் வகைகளிலும் ஒளிவீசும் முத்து மாலைகளை அணியும் அணிகலன்களிலும் தனக்குரிய உணவுகளைக் கவர்ந்து கொள்ளும் நண்டுகள் நீரில் மூழ்கி ஊதுகின்ற சேறு நிறைந்த இடங்களிலும், விதைகள் விதைக்கப்பட்டிருக்கும் முள் வேலிகளிலும், விருப்பத்தை உண்டாக்கும் மன்மதன் காணும் பொருட்டு நன்றாக விளைந்து முதிர்ந்து முத்துக்களோடு விளங்கும் பெரிய கரும்புகளைச் சாறு எடுக்கும் பொருட்டுக் கொண்டு செல்லும் சிறிய ஆலைகள் உள்ள இடங்களிலும், பெரிய பாத்திரங்களில் காய்ச்சி ஆலைகளில் ஆறவைக்கப் படும் இனிய பாகு உள்ள இடங்களிலும், அளவைக் கூறிக் குறையாமல் வாயில் இருந்து ஊற்றுகின்ற பெரிய கள் பானைகளின் பக்கங்களிலும் முளை கிளம்பி இருக்கும் நெல்லின் அருகாமையிலும், பாக்கு மரங்களில் எல்லாம் மணம் வீசும் பாக்குக் கொத்துகளை இடையில் கொண்ட பாலைகள் காற்றால் விழ அவற்றைக் கொண்டு அமைக்கப் பட்ட சிறு, சிறு பகுதிகளை உடைய திண்ணைகளைக் கொண்டிருக்கும் நீதிகளிலும்; தலைவர்களின் தேவிகள் பந்து விளையாடும் சோலைகளிலும், அந்தணர்கள் விரும்பும் கற்புத்திறமுடைய பெண்கள் நீரை மொண்டு எடுத்த சிறிய மண் பாண்டங்களிலும் ஆழமான நீர் நிலைகளில் மூழ்கிக் குளிக்கின்ற எருமைகளிலும், புதுமையாகச் செம்மை நிறமாகத் தோன்றுகின்ற கெண்டை மீன்கள் பாய்கின்ற வயல்களில் விளைந்திருக்கின்ற நெற்கதிர்களின் இடையிலும், உழவு செய்ததன் காரணமாக உடைந்த மண் சட்டியிலும், பெரிய மதகுகள் அமைந்திருக்கின்ற ஏரிகளிலும், தவளைகள் ஆம்பல் வேர்களை உண்டு ஒலி எழுப்புகின்ற கல்பிளவு உள்ள பாறையின் பக்கங்களிலும், மழை பெய்தால் வந்த நீர்ப்

பெருக்கினால் ஒலி மிகுந்த குளங்களிலும், எங்கும் தாவி அலைகின்ற அலைகளிலும், வலம்புரிச் சங்குக் கூட்டங் களுடன் இடம்புரிச் சங்குகளும் கலந்து ஒலி எழுப்புகின்ற இடங்களிலும், என எல்லா இடங்களிலம், பட்டினத்தின் காவலை ஏற்றிருக்கும் ஆணைச் சக்கரத்தைக் கொண்டிருக்கும் முருகப்பெருமானே உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சில சொற்களைச் சொல்லியருள வேண்டும். பன்னிரண்டு சூரியர்கள் அச்சம் கொள்ளவும், வானுலகில் வாழ்கின்ற தேவர்களின் தலைவனாகிய இந்திரன் முந்நாளில் கை குவித்துத் தலையில் சூட்டிய பெரிய கிரீடத்தைத் திறையாகக் கொண்ட வீரனே, உன் திருவாய் திறந்து தலைசாய்த்துச் சில சொற்களைச் சொல்லியருள வேண்டும்.

**கந்தமலி நெடிதட குறுமுகைப் பாசடைக்**
**கமல மலரைக் கறித்துக்கடை வரிய**
**குதட்டும் புனிற்றெருமை தன்குழற்**
**கண்ணுணிக் கிரங்கி யோடக்**

**கொந்தவளக் கருங்குவளை யோடைத்**
**தடாகக் குரம்பைக்கடந்து**
**சென்னெற் குலை வளைக்கும்**
**பழக்குலை மடற் கதலிகுருத்தர மிதித்து மீளப்**

**பந்தரிடு சூலம்ப் பலவுதரு முக்குடப்**
**பழமெல மிடறி வெள்ளைப்**
**பணிலஞ் சொறிந்த நித்திலமுறுத்தப்**
**பதைபதைத்து முலைப்பாலுடைந்து**

**சிந்தை மகராழியலை யாடு பொருத**
**செந்தூர செங்கீரையாடி யருளே**
**சென்னிற நற்குடுமி வெண்சேவற்**
**பதாண்யா செங்கீரையாடி யருளே. 7**

(தெ-ரை) மணம் மிக்க பெரிய இதழ்களையும் சிறிய அரும்புகளையும், பசுமை நிறமான இலைகளையம் உடைய தாமரை மலரைக் கடித்துத் தன்னுடைய கடைவாயில்

அதக்குகின்ற கன்றை ஈன்றெடுத்த எருமை தன்னுடைய இளமை பொருந்திய கன்றுக்காக மனம் இளகிப் பால் கொடுக்கும் பொருட்டு, பூக்கள் கொத்தாக மலர்ந்திருக்கும் கருங்குவளைச் செடிகளை உடைய ஓடைகள் குளங்களின் கரைகளைக் கடந்து சென்று செம்மை நிறம் பொருந்திய நெற்கதிர்களை வளையுமாறு செய்கின்ற, பழக் குழைகளையும் குருத்து இலைகளையும் உடைய வாழை மரங்களின் குருத்துக் கிழியுமாறு, மிதித்துப் பந்தல்போல வளர்ந்திருக்கின்ற வேர்ப்பலா மரத்தின் மேற்பகுதியின் முட்கள் அமைந்த குடம் போன்ற கனிகளைக், கால்களால் இடறிக்கொண்டு, வெண்மை நிறமான சங்குகள் ஈன்ற முத்துக்கள் கால்களில் அழுத்த மிகுதியான துன்பம் கொண்டு மடியில் இருந்து பால் ஊற்றவும்; சுறா மீன்கள் நிறைந்த கடலின் அலையோடு எதிர்த்துச் சென்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே! உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சிறு சொற்களைச் சொல்லியருள வேண்டும். செம்மை நிறமான சேவல் கொடியை கொண்டிருக்கும் முருகப்பெருமானே உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சிறு சொற்களைச் சொல்லியருள வேண்டும்.

மகரசல ராசிதன்னில் வருணன் வந்தடி பரவி
வைத்த மணிமுத்து மாலை
வட பூதரத்தில் விழு மருவியென
உத்தரிக மார்பி லுடாட மன்னுந்

தகர மலரின் முருகு கொப்பிளிக்குஞ்
சிகத்த மணயச் சுட்டியாடத்
தவளமுழு மதிய முத்துளி யெனச்
திருமுகத் தரள வெயராடமுழுதும்

பகரவருமுறை முனிவர் கொண்டாட
மழுவாளி பங்காளி திருமுலைப்பால்
பருகக் குழைந்த சிறு பண்டியுந் தண்டையும்
பாதமும் புழுயாடச்

*சிகர வரையாம் மகளிர் சிறுமுறுவலாட*
*நீ செங்கீரை யாடி யருளே*
*சென்னிறற் குடுமி வெண்சேவற் பதாகையாய்*
*செங்கீரை யாடி யருளே.* 8

(தெ-ரை) சுறா மீன்கள் நிறைந்த கடலில் வருண தேவன் வந்து திருவடிகளை வணங்கிப் புகழ்ந்து கொடுத்தருளிய அழகான முத்துமாலை வட திசையில் உள்ள மேரு மலையில் இருந்து விழுகின்ற அருவிபோல விளங்குகின்ற ஆடை தவழுகின்ற மார்பில் அசைந்து கொண்டிருக்கவும், பூசப்பட்டிருக்கும் மயிர் சாந்தும் மலர் இதழ்களும் மணம் வீசுகின்ற குஞ்சியில் இருக்கின்ற பொன் மயமான சுட்டி என்னும் அணிகலனும் அசைந்தாடவும், வெண்மை நிறமான முழு நிலவில் இருந்து துளிர்க்கும் அமுதம் போல அழகான முகத்தில் அரும்பிய முத்துப் போன்ற வியர்வைப் புள்ளிகள் அசையவும், தம்முடைய உள்ளத்தில் உள்ளவற்றை எல்லாம் சொல்ல வருகின்ற வேதத்தில் சிறந்த முனிவர்கள் பாராட்டுமாறு, மழுவாயுதத்தை ஏந்தியிருக்கின்ற சிவபெருமானின் இடது பாகத்தில் வீற்றிருக்கும் பார்வதி தேவியின் திருமுலையில் பால் அருந்துவதற்கு உள்ளம் விரும்பிச் சிறிய வயிரும், காலில் அணிந்த அணியும் மேன்மை மிக்க அடிகளும் புழுதி படியுமாரு சிகரங்கள் பொருந்தி யிருக்கின்ற மலைகளில் வாழ்கின்ற தேவலோகப் பெண்கள் மெல்லிய சிரிப்புடன் விளங்க, முருகப்பெருமானே உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சிறு சொற்களைச் சொல்லியருள வேண்டும் செம்மை நிறமான கொண்டையுடன் விளங்கும் வெண்மை நிறமான சேவல் கொடியைக் கொண்டிருக்கும் முருகப்பெருமானே உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சிறு சொற்களைச் சொல்லியருள வேண்டும்.

*கொண்ட பொய்கைதனில் நிற்குமொரு*
*பேரரசினிலை கீழ்விழிற் பறவையா*
*மிது நிற்க நீர்விழிற் கயலா*
*மிதன்றி யோரிலை யங்கு மிங்குமாகப்*

பார்கொண்ட பாதியும் பறவைதானாகவப்
பாதியுஞ் செலதாகப்
பார்கொண் டிழுக்கவதை நீர்கொண் டிமுக்கவிப்
படிக் கண்ட ததிசயமென

நீர்கொண்ட வாவிதனில் நிற்குமொரு
பௌவாய் நெடும்பூதமது கொண்டுபோய்
நீழவரையடுத் ததின்வைக்கும் மதுகண்டு
நீதி நூல் மங்காமலே

சீர்கொண்ட நற்சீரளை சிறைவிடுத்தவ
செங்கீரை யாடியருளே
திரையெறியு மலைவாயு கந்த வடிவேலனே
செங்கீரை யாடி யருளே. 9

(தெ-ரை) குளத்தின் கரையில் வளர்ந்து நிற்கும் பெரிய அரசமரத்தின் இலைகளில் ஒன்று நிலத்தில் விழுந்தால் அது பறவையாக மாறிப் பறந்துபோகும். அந்த இலை நீரில் விழுந்தால் மீனாக மாறி நீருக்குள் சென்றுவிடும். இப்படி இல்லாமல் அவ்விலை நீரிலும் நிலத்திலுமாக விழுந்தால் நிலத்தில் விழுந்த பகுதி பறவையாகவும், நீரில் விழுந்த பகுதி மீனாகவும் மாறி மீன் நீருக்குள் இழுக்க, பறவை வெளியிலுமாக இழுக்க, இவ்வாறு கண்ட காட்சி அதிசயம் என மயக்கம் கொண்டிருந்த வேளையில்; நீர் நிறைந்த அந்தக் குளத்தில் இருந்த பிளந்த வாயினை உடைய பெரிய பூதம் நக்கீரரை எடுத்துக்கொண்டு போய்ப் பெரிய மலையில் உள்ள பாறை ஒன்றை எடுத்து அதன் கீழே உள்ள குகையில் சிறையிட்டு அடைத்து வைத்த கொடுமையைக் கண்டு நீதி நூல்கள் கூறிய நீதி பொய்க்காமல் நக்கீரரை சிறையில் இருந்து விடுவித்துக் காத்தருளிய முருகப்பெருமானே; உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சிறு சொற்களைச் சொல்லியருள வேண்டும். திருச்சீரலைவாய் என்னும் திருத்தலத்தை விரும்பியவேல் படையினை உடையவனே! உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சிறு சொற்களைச் சொல்லியருள வேண்டும்.

வீறாடல் வெங்கதிர் புகர்முகக் கூரிலை
மிகுத்த வேலுறை கழிக்க
வெள்வாய் பிளந்து சிறுகட் பேரிடாகினியவள்
விளையாட வெங்க வந்த

மாறாட முதுபகட்டு யாமடற்கரிய
நிறமறலி இருகை சலித்து
மன்றாட உடல் விழிக் குரிசில் கொண்டாட
நெடுமாக முகடிடை வெளியநாய்

பாறாட அம்பொற் கிரீடம் பறித்தலகை
பந்தாட விந்தாடவிப்
பாலைக் கிழித்திமுக்கவ நிலைச் சூலம்
பசுங் கொழுங் குருதி வெள்ளச்

சேறாட வென்றுகுறு சிறுமுறுவலாடுங்
குமார செங்கீரை யாடி யருளே
திரையெறியு மலைவாயு கந்த வடிவேலனே
செங்கீரை யாடி யருளே. *10*

(தெ-ரை) கொடிய வாயினைப் பிளந்துகொண்டு சிறிய கண்களை உடைய பெரிய இடாகினிப் பேய்கள் விளையாடிக் கொண்டிருக்கவும், கொடுமையான தலை இல்லாத முண்டங்கள் அவற்றுக்கு எதிராக நின்று ஆடிக் கொண்டிருக்கவும், பெரிய எருமைக் கடாவின் உயர்ந்த பிடரியின் மேல் அமர்ந்திருந்த கரிய நிறமுடைய இயமன் தன்னுடைய இரண்டு கரங்களும் சோர்ந்துவிட என்னால் இனியும் இத்தொழிலைச் செய்ய இயலாது என வேண்டி நிற்கவும். தன் உடலில் ஆயிரம் கண்களைக் கொண்ட தேவர்களுக்குத் தலைவனான இந்திரன் மகிழ்ச்சி அடைந்து பாராட்டவும், நீண்ட வானுலகின் உச்சியில் இடைவெளி இல்லாமல் எங்கும் கழுகுகள் பறக்கவும், அசுரர்களின் அழகான பொன்னாலாகிய கிரீடங்களை அவர்களின் தலையில் இருந்து பற்றிக் கொண்டு போய்ப் பேய்கள்

பந்தாடிக் கொண்டிருக்கவும். விந்த மலைக்காட்டில் கோயில் கொண்டிருக்கின்ற பாலை நிலத் தெய்வமான துர்க்கையின் மும்மையாகப் பிளவுபட்ட சூலம் பசுமையும் கொழுமையும் உடைய இரத்தமாகிய சேற்றில் ஆடவும். வெற்றி தோன்றுமாறு சூரியன் போன்ற செம்மை நிறமுடையதும் முன்பகுதி கூர்மை பொருந்தியதுமாகிய வேலாயுதத்தை உறையில் இருந்து எடுத்துப் புன்னகை புரிந்த முருகப் பெருமானே! உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சிறு சொற்களைச் சொல்லியருள வேண்டும். செம்மை நிறமான கொண்டையுடன் விளங்கும் வெண்மை நிறமான சேவல் கொடியினைக் கொண்டிருக்கும் முருகப்பெருமானே உன் திருவாய் திறந்து தலையசைத்துச் சிறு சொற்களைச் சொல்லியருளவேண்டும்.

செங்கீரைப் பருவம் முற்றும்

## தாலப் பருவம்

அடரும் பருநவ முடியமாற்கிறவாறு
நீட எகனாரதியும் ஈரொன்பதும்
மாருமறை முனிவோருஞ்
சுடருந் தருமிரு கூடரும் பரவிய
தோகைய ரெமுவரு முத்தொழில்
முக்கடவுளர் வாதங் குறை
சொல்லித் துதி செய்தார்
படருங் கிரணப் பருதி நெடுஞ்சுடர்
பாயும் பகிரண்டம் பழமா
மென்னப் பனையென நிமிரும்
பாழிக் கைய நீட்டித் தடவும்
புகர் முகத் தந்திக் கிளையர்
தாலோ தாலேலோ
சந்தமணங்கமழ் செந்திப் பதியர்
தாலோ தாலேலோ 1

**(தெ-ரை)** நவரத்தினங்களால் நெருக்கமாக இழைக்கப் பட்ட அழகுபடுத்தப்பட்ட கிரீடங்கள் அணிந்திருக்கின்ற தேவர்களும் தேவர்களின் தலைவனாகிய இந்திரனும், அகன்று விளங்கும் நகரமாகிய அளகாபுரியின் தலைவனாக விளங்குகின்ற குபேரனும், பதினெண் கணத்தவர்களும், அரிதான வேதத்தைக் கற்றறிந்த முனிவர்களும், உலகிற்கு ஒளி வழங்குகின்ற சூரியனும், சந்திரனும் புகழ்ந்துரைக்கும் இயல்பு உடையவர்களாகிய ஏழு கன்னிமார்களும், படைத்தல் தொழிலைச் செய்யும் பிரம்மனும் காத்தல் தொழிலைச் செய்கின்ற திருமாலும், அழிக்கின்ற தொழிலைச் செய்கின்ற சிவபெருமானும் என மூவரும் தத்தமக்கு உள்ள குறைகளைக் கூறி வணங்கினார்கள். உலகெங்கும் பரவுகின்ற கதிர்களை உடைய சூரியனின் நீண்ட ஒளிக்கதிர்களாகிய கரங்கள் பாய்ந்து செல்கின்ற பகிரண்டத்தைக், கனிகள் பழுத்திருக்கும் ஆலமரம் என்று நினைத்துப் பனைமரம்போல் உயர்ந்திருக்கின்ற தும்பிக்கையை நீட்டத் தடவுகின்ற புள்ளிகள் நிறைந்த முகத்தை உடைய விநாயகப் பெருமானுக்கு இளமையான பெருமானே. தாலாட்டுப் பாடலைக் கேட்டுக்கொண்டு கண்ணுறங்குவாயாக, சந்தனம் மணக்கும் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே கண்ணுறங்குக.

**கங்குல் பொருந்திய குவளைக் குழியிற்**
**கழியிற்ப் பழனத்திற் கரையிற்**
**கரை பொரு திரையில் வளைந்த**
**கவைக்கால் வரியலவன்**

**பொங்கு குறுந்துளி வாடையினொந்து**
**பொறாதே வெயில் காயும்**
**புனத்திடரிற் கவரித்துரவிப்**
**புன்னை நறுந் தாதிற்**

**கொங்கு விரிந்த மடற் பொதித் தாழைக்**
**குறுமுட்கரிய பசுங்கோலச்**
**சிறிய குடக்காயிற் புயல்**
**கொழுதுஞ் செய் குன்றில்**

சங்கு முழங்கிய செந்திற் பதியாய்
தாலே தாலேலோ
சமய விரோதிகள் திமிர திவாகர
தாலோ தாலேலோ 2

(தெ-ரை) இரவுப் பொழுதில் குவிந்திருக்கும் இதழ்களையுடைய குவளை மலர்கள் நிறைந்த குழிகளிலும், உப்பங்கழிகளிலும், அதன் அருகாமையில் இருக்கின்ற வயல்களிலும், கடற்கரையிலும் கடற்கரையில் வந்து மோதுகின்ற அலைகளிலும், வளைந்த உருவத்துடன் பிளவுபட்ட கால்களை கொண்டுள்ள வரிகளை உடைய நண்டுகள் சிறிய நீர்த்துளிகளைச் சிதறச் செய்கின்ற வாடைக்காற்றால் துன்புற்று அதனைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் குளிர்காய்கினற மணல் மேட்டிலும், வெடிப்புகளிலும் கிணறுகளிலும் புன்னை மரத்தின் மணம் மிகுந்த மகரந்தத்தூள் உதிர்வதினால் மணம் மிகுந்திருக்கின்ற மடல்கள் நிறைந்த தாழையின் சிறியதான முட்களோடு கூடிய கருமை நிறமுள்ள பசுமை பொருந்திய குடத்தின் வடிவாக உள்ள தாழைக் காய்களிலும், மேகங்கள் வந்து மோதிக் கலைகின்ற சிறிய குன்றுகளிலும் சங்குகள் ஒலி எழுப்பி திருச்செந்தூர்த் தலத்தில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே கண்ணுறங்குவாயாக. சைவத்திற்கு பகைவர்களாகிய சமணர்கள் என்னும் இருளுக்கு சூரியன் போன்றதொரு முருகப்பெருமானே கண்ணுறங்குவாயாக.

தண்டே னொழுகு மொழி மடவார்
தாமங் கொழுகிச் சுருண்டிருண்டு
தமர்க்கழி வண்டைக் கிடந்து
தழைத்து நெறித்த குழற்பாரங்

கொண்ட மெலிந் தல்லாது குரும்பைக்
களப முலை சுமந்து
கொடிபோல் மருங்குல் குடி
வாங்கக் குழையிற் குதித்த விழிக் கயலைக்

கண்டே வெருவிக் கயல் மறுக்கக்
கனகமணி மாளிகை யுடுத்துக்
கனகந் தடவுங் கோபுரத்தைக்
கருதி வட வெற்பெனக் கதிரோன்

திண்டேர் மறுகு திருச்செந்தூர்க்
செல்வா தாலோ தாலேலோ
தெய்வக்ககளிரதை மணம்
புணர்ந்த சிறுவா தாலோ தாலேலோ. 3

(தெ-ரை) இனிமையானதொரு தேன் துளிர்க்கின்ற மொழிகளைப் பேசுகின்ற இளம்பெண்களின் மாலைகளில் துழாவி அங்கு மயக்கம் கொண்டு இசைக்கின்ற மதம் கொண்ட வண்டுகள் தங்கி இருக்கும் வளமான கூந்தலைத் தாங்கியதனால் மெலிவடைந்ததுடன், தென்னங் குரும்பை போன்றதும் சந்தனக் கலவை பூசப்பட்ட முலைகளைச் சுமந்ததனாலும் கொடி போன்றதொரு இடை இருந்த இடம் தெரியாமல் மறையவும், செவிகளில் அணிந்திருக்கும் பொன் குண்டலங்களை நோக்கி பாய்ந்த கண்களாகிய கெண்டை மீன்களைக் கண்டு அச்சம் கொண்டு கெண்டை மீன்கள் மனக் கலக்கம் கொள்ளவும், பொன் நிறமான மஞ்சள் வெயில் படுகின்ற மாளிகைகளால் சூழப்பெற்று வானைத் தொடுமளவு உயர்ந்த கோபுரத்தை மேருமலை என்று நினைத்துச் சூரியனின் உறுதியான ஒற்றைச் சக்கரம் உடைய தேர் மேலே தொடர்ந்து செல்வதற்கான வழியறியாமல் கலக்கம் கொள்கின்ற திருச்செந்தூர் நகரில் எழுந்தருளியிருக்கும் செல்வனே கண்ணுறங்குவாயாக. தெய்வயானையை மணம் கொண்ட இளமை பொருந்திய குமரக் கடவுளே கண்ணுறங்குவாயாக.

பாம்பா லுத்தி தனைக் கடர்ந்து
படருங் கொடுங்காற் சொறி மழைக்குப்
பரிய வரையைக் குடை கவித்து
பசுக்குள் வெருவிப் பதறாமற்

காம்பாலிசை மின் றொனி யழைத்துக்
கதறுந் தமர்க் காளிந்தி நதிக்
கரையினிரைப் பின்னே நடந்த
கண்ணன் மருகா முகையுடைக்கும்

பூம்பா சடைப்பங் கயத்தடத்துப்
புனிற்றுக் கவரி முலை நெரித்துப்
பொழியும் முகந் தனைக் கண்டு
புனலைப் பிரித்துப் பெட்டேகினந்

தீம்பால் பருகுந் திருச்செந்தூர்
செல்வா தாலோ தாலேலோ
தெய்வக் களிற்றை மணம்
புணர்ந்த சிறுவா தாலோ தாலேலோ. 4

(தெ-ரை) பாற்கடலை வாசுகி என்னும் பெரிய பாம்பினால் கடைந்து கொடுந் தன்மையான மேகங்கள் படர்ந்து பொழிந்த மழையின் போது கோவர்த்தன மலையைக் குடையாகக் கொண்டு பசுக்கள் அச்சம் கொள்ளாதவாறு புல்லாங்குழலின் இசையினால் மகிழ்வித்து ஒலி நிறைந்த யமுனை நதிக்கரையில் பசுக்களின் பின் நடந்து சென்ற கண்ணபிரானின் மருமகனே; அரும்புகளை மலரச் செய்யும் அழகான பசுமையான இலைகள் நிறைந்த தாமரைத் தடாகத்தில், மிக அண்மையில் கன்றினைப் பெற்றெடுத்த எருமைகள் குளத்தில் புரண்டு பொழிகின்ற பாலைக் கண்டு, நீரைப் பிரித்துப் பாலை உண்ணும் அன்னப் பறவைகள் நிறைந்த வளமான திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானே. கண்ணுறங்குவாயாக தெய்வ யானையை மணம்புரிந்த முருகப்பெருமானே கண்ணுறங்கு வாயாக.

மங்கல மங்கல நூலெங்கு மொழிந்தனர்
காணோ வானோரேனோர் போய்வந்து
வணங்கினர் மேவந்தத் துரந்தர
மீகேழ்வர் குடராடாதே

**கொங்கை சுமந்திடை நூலஞ்சு**
**மனங்கணையார் கூடாதூடாரோ**
**கொண்ட வரந்தரு வாயண்டர்**
**பெருந்தவமே கொறா மரம் நீ**

**செங்கமலந் தனிலே பைங்கு முந்தனிலே**
**சேல்பாய வானாடா தென்றலுடன்**
**தமிழ் தேர்தென் பொதியம் பிலவாய்**
**தேனார் தார் மார்பா**

**சங்கு வலம்புரி சூழ் செந்திவளம்பதியாய**
**தாலோ தாலேலோ**
**சங்கரிதன் குமார மங்கையர் தன்கணவா**
**தாலே தாலேலோ** **5**

(தெ-ரை) நன்மை தருகின்ற சிவப்பேற்றினை உலக உயிர்களுக்கெல்லாம் விளக்கமாகக் கூறும் வேத சாத்திரங்களைத் தேவர்களும், மற்றவர்களும் நாடெங்கும் படித்தார்கள். தம்முடைய நாடுகளில் இருந்து போவதும் வருவதுமாய் இருந்து உன்னை வணங்கினார்கள். வானுலகில் ஒலி எழுப்புகின்ற துந்துபியின் ஓசையை நீ கேட்பாயாக. கச்சு அணி இடையில் அசையாமல் இருந்து முலைகளைத் தாங்கிக் கொண்டிருப்பதனால் இடையாகிய மெல்லிய நூல் அறுந்து விடுமோ என்று அச்சம் கொள்கின்ற தெய்வப் பெண்களைப் போன்ற பெண்கள் அவர்கள் கேட்ட வரங்களைக் கொடுக்காமல் நீ இருந்தால் உன்னோடு கூடாமல் ஊடல் கொள்ளமாட்டார்களா, தேவர்களின் பெரிய தவத்தால் பெற்ற பேறாக வந்தவனே அவர்கள் கேட்ட வரங்களைத் தந்தருள வேண்டும். அவர்களின் தலைவனாக இருக்கின்ற நீ கொடுக்காமல் இருக்கலாமா செந்தாமரை மலர்களிலும் பசுமையான அல்லி மலர்களிலும் கெண்டை மீன்கள் பாய்கின்ற வளமுடைய பாண்டிய நாட்டின் தெய்வமே தென்றல் காற்றுடன் தமிழ் மொழியை கொடுத்தருளியவனே. தென்திசையில் உள்ள பொதிகை மலையில் வாழ்கின்ற தேன்

துளிர்க்கும் மாலை அணிந்த மார்பினை உடையவனே. இடம்புரிச் சங்குகளும், வலம்புரிச் சங்குகளும் சூழ்ந்து விளையாடுகின்ற திருச்செந்தூர்த் திருத்தலத்தில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே, கண்ணுறங்குவாயாக. உலக உயிர்களுக்கு நலத்தை வழங்குகின்ற உமையம்மை பெற்றெடுத்த குமாரனே வள்ளி தெய்வயானையின் தலைவனே கண்ணுறங்குவாயாக.

மரகத வடிவுஞ் செங்கதிர் வேலா
நவாரா வாடாதோ
மதிமுக முழுதுந் தண்டுழி
தரவே வாராவோ சோராதோ

கரமலதணை தந்தின் புறுமடவார்
காணாதே போபோகன
மணிகுலவு குண்டலஅரைஞா
ணோடே போனால் வாராரார்

பொருமிய முலையுந் தந்திட வுடனே
தாய்மார் தேடாதோ புலவரு
மெவருங் கண்டடி தொழுவார்
போதாய் போதாநீள்

சரவண மரவுந் தண்டமிழ் முருகா
தாலோ தாலேலோ
சதிமறை பரவுஞ் செந்திலை யுடையாய்
தாலோ தாலேலோ 6

(தெ-ரை) உன் தாயாகிய உமையம்மையின் மரகதக்கல் போன்ற பசிய வடிவம் உன்னைத் தேடி அலைவதனால் சிறிது சிறிதாக வாடாதோ, நிலவு போன்ற அவளுடைய முகம் முழுவதும் குளிர்ச்சியான துளிகள தோன்ற வழிகின்ற வியர்வை பெருகாதோ.

தங்களுடைய கரங்களை உனக்கு அணையாகக் கொடுக்கின்ற கார்த்திகைப் பெண்கள் காணாதவாறு செல்லலாமா? மணிகள் கொண்டு செய்யப்பட்ட குண்டலமான காதணியுடனும் இடையில் உள்ள அரைஞாண் கயிறோடும் நீ வெளியே சென்றால் கச்சினுள் அடங்காமல் இருக்கின்ற முலைகளிலிருந்து பெருகுகின்ற பாலை உனக்கு கொடுத்தல் பொருட்டு செவிலித் தாயார்கள் உன்னைத் தேடமாட்டார்களா, நாட்டை ஆளுகின்ற மன்னர்கள் பலரும் உன் அடிகளில் வணங்கி நிற்பார்கள். வந்தருள்வாயாக, பெரிய நாரைகள் இருக்கின்ற சரவணப் பொய்கையில் விளையாடியவனே. தன்மைமிக்க தமிழ் மொழியினை அறியும் முருகக் கடவுளே. கண்ணுறங்கு வாயாக. நான்கு வேதங்களும் புகழ்ந்து வணங்குகின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருப்பவனே, கண்ணுறங்குவாயாக.

அரைவடமுந் தண்டையு மின்புரை
யரை மேனியுங் கிண்கிணியுங்
கலனணியு மாறார் வீறார் சீரா

அறுமுகந் தொங்கு கல் சுமந்த
பன்னிரு புயமுங் குண்டலமும்
குழையழகு மாரார் பாரார் தார

விரைபோல் மென் குஞ்சி யலம்பிய
பழுதியு மங்கங்குழை பண்டியின்
மெலிவின் மீதே வீழ்வார்

நீர் வெருவிதமுங் கொண்டு
தவழ்ந்திடி லவர்வர் தங்கண்கள்
படும் பிழை விழையுமே தேனே காதே

வரை மணியுந் தங்கமு மொன்றிய
கென்பறிய ஏகந்தனி யின்புறு
கண்வளர வாராய் வாழ்வே நீ

**மணிநகையுங் கொண்டு துயின்றிலை**
**விரல்முதங் கொண்டு கிடந்தனை**
**மதுரமாய்நீ பேசாயோ**

**திரைபொரு தென் செந்தில் வளபதி**
**வளரவருங் கந்த சிவன் பெறு**
**சிறுவா தாலோ தாலேலோ**

**திசை முகனுஞ் சங்கரி யுஞ்சது**
**மறையு மிறைஞ்சும் பிறை யம்பிகை**
**சிறுவா தாலோ தாலேலோ. 7**

(தெ-ரை) இடுப்பில் அணியும் அரைஞாண் கயிறும், காலில் அணியும் தண்டையும், இடையில் கட்டுகின்ற சதங்கையும், காலில் அணியும் சலங்கையும், பிற அணிகலன்களும் நீங்காத பெருமை மிக்க சிறப்புடைய ஆறு திருமுகங்களும், கடம்ப மலர் மாலையைத் தாங்கி இருக்கின்ற பன்னிரண்டு கைகளும் குண்டலமும், காதணியும் பொருந்தியிருக்கின்ற அத்தனை அழகையும் பார்த்து மகிழ்ச்சியடையாதவர்கள் யார் இருக்கிறார்கள்.

மணமுடைய மென்மையான குஞ்சியைப் பற்றி யிருக்கின்ற புழுதியும், உடம்பில் சூழ்ந்திருக்கும் சிறிய வயிறும் வாடும், உன்மேல் பலரும் அன்பு கொள்வார்கள்.விதவிதமாக நீ தவழ்ந்து விளையாடினால் அங்கு வருபவர்களின் கண் படும் அதனால் ஏதேனும் துன்பம் உண்டாகும். அதனால் நீ செல்லாதே மலையில் பிறந்த மாணிக்கக் கற்களும் பொன்னும் பொருந்தியிருக்கின்ற பெரிய கட்டிலில் துயில் கொள்ள வந்தருள்வாயாக.

உலக உயிர்களுக்கெல்லாம் நல் வாழ்க்கையை அருள்கின்றவனே நீ அழகான புன்னகையுடன் துயிலவில்லை உன்னுடைய காலின் பெருவிரலைச் சுவைத்துக் கொண்டே துயில்கின்றாய், இனி நீ பேசமாட்டாயா? அலைகள் வந்து மோதுகின்ற திருச்செந்தூர் என்ற வளம் பொருந்திய நகரில்

கோயில் கொண்டிருப்பவனே சிவபெருமான் பெற்றருளிய குமரனே , கண்ணுறங்குவாயாக. பிரம்மனும், சங்கினை ஏந்தியுள்ள திருமாலும், நான்கு வேதங்களும் வணங்கு கின்றவனே உமையம்மை பெற்ற குழந்தையே கண்ணுறங்குவாயாக.

**கூருமிகதுல சாய்த்த வீரா தீரா**
**தார்மார்பா - கூறுமியல்**
**பார்த்துன் மேலே யாரார் பாரார் தார்**

**மேருவரை நாட்டு வாழ்வார்**
**வானாடாழ்வார் போல வேளை**
**யென மீட்டுன் மேலே வீழ்வார் சூழ்வார்பார்ப்**

**பாருமிரை பாத்து நீனீருடே**
**தாரார் மேயானகளி நீக்கி**
**மேலே நாவாயொடு செல**

**செருமலை வாய்க்கு நாதா**
**தாலே தாலேலோ**
**தேவர்சிறை மீட்ட தேவர்**
**தாலே தாலேலோ**

(தெ-ரை) அசுரர்களுடைய பகையை அழித்து ஒழித்த வீரமும், உறுதியும் உடையவனே மாலை அணிந்த மார்பினை உடையவனே, உலகம் கூறுகின்ற உன்னுடைய நற்குணங்களைக் கண்டு உன்னைப் பாடாதவர்கள் யார் இருக்கின்றார்கள்.

மேருவை தங்களுடைய உரிமையாகக் கொண்டி ருக்கும் பாண்டிய நாட்டில் வாழ்கின்றவர்கள் தேவர்களின் உலகத்தை ஆள்கின்ற தேவர்களைப் போல, இதுவே தகுந்த காலம் என்று வேறு வழியில்லாமல் வழியில் சென்ற, தங்கள் மனத்தை மீட்டு உன்மேல் அன்பு கொள்வார்கள். இதுமட்டுமின்றி அவர்கள் உன்னையே சுற்றிவந்து வணங்குவார்கள்

தனக்குப் பொருத்தமான இரையைக் கண்டு நீருக்குள் தாராப் பறவைகள் இரைதேடும் உப்பங்கழிகளை விட்டு விட்டுக், கடலில் செல்லும் மரக்கலங்களுடன் கெண்டை மீன்கள் பாய்ந்து செல்கின்ற திருச்செந்தூருக்கு உரிமை உடைய தலைவனே கண்ணுறங்குவாயாக. அசுரர்களின் பகையை ஒழித்து தேவர்களைச் சிறையிலிருந்து மீட்டருளியவனே கண்ணுறங்குவாயாக.

அரவுசிறு பிறையிதழி திருபதகை பொதிசடையர்
பாலா வேலாதேர்
அருணவெயில் விரவி சூழலி மகிரியி லருவைபெறு
வாழ்வே வாழ்வாய் நீ

குரவருள் மகிழ்வுயர் குருவடிவு தருபெருமை
கொண்டாய் தாடாளா
குமர சரவண முருக்கு தலைமொழி
தெரியுமுறை கூறா

இரவலரும் முனிவர்களும் இமயவரும் உனதடிமை
ஆமே ஆமேநீ
எமைமுனியில் ஒரு துணையும் இலையடிமை யடிமையென
வீழ்வார் சூழ்வார்பார்

பரசமய குலகலக சிவசமய குலதிலக
தாலோ தாலே லோ
பணில முழுமணியை யலையெறியு நகர்வரு கடவுள்
தாலோ தாலே லோ 9

(தெ-ரை) பாம்பு, இளம்பிறை, கொன்றைமலர், கங்கைநதி ஆகியவற்றைச் சடைமுதல் அணிந்திருக்கும் சிவபெருமானின் குமரனே, வேல் படையை உடையவனே. ஒற்றைச் சக்கரம் உடைய தேரில் வருகின்றவனும், செம்மை நிறமான வெயிலை உடையவனுமாகிய சூரியன் வலம் வருகின்ற இமயமலையில் பிறந்த பார்வதிதேவி பெற்ற பெரும் பேறாக வாழ்கின்ற முருகப்பெருமானே.

தந்தையான சிவபெருமானின் உள்ளம் மகிழ்ச்சி கொள்ளுமாறு உயர்வுமிக்க குருவளி உபதேசம் செய்த பெருமை உடையவனே. குமரனே பரமகுருவே. முருகப்பெருமானே என்னிடம் கோபம் கொள்ளாமல் இனிய மழலைச் சொல் விளங்குமாறு பேசுவாயாக.

இரந்து நிற்பவர்களும், முனிவர்களும், தேவர்களுமாகிய நாங்கள் உன்னுடைய அடிமைகள் என்பது உண்மையாகும். நீ எங்களை வெறுத்தால் எங்களுக்கு வேறு துணை இல்லை. என்று உன்னை வணங்கி வலம் வருவார்கள் காண்பாயாக. சமணம் முதலான பிற சமயக் குலங்களை அழித்த முருகப்பெருமானே சைவ சமயத்தின் திலகமே கண்ணுறங்குவாயாக. சங்குகள் ஈன்ற முத்துக்களை அலைகள் வீசி எறியும் நகரில் கோயில் கொண்டிருக்கும் தெய்வமே கண்ணுறங்குவாயாக.

பங்கயன் முதலோர் இந்திரன் இமையோர்
பாரோர் ஏனோர்பார்
பண்புடன் உனையே சிந்தையின் நினைவார்
பாலா நீ மால்கூரைய

வேங்கிட கிரிசூழ் எண்திசை நிறைவார்
வீணாள் காணாதே
மின்பரி புரதாள் பொன்புரை முடிமேல்
வெய்வார் வீறாலே

செங்கனி மணிவாய் நகைதா தேவா
சீறாதே திண்டிறல்
முருகாதண்டமிழ் விறகா
சேரார் போரேறே

சங்கரி மருக சங்கரிமுருகா
தாலே தாலேலோ
சந்தத மியலதோ செந்திலை யுடையாய்
தாலே தாலேலோ 10

(தெ-ரை) பிரம்மன், திருமால், சிவன் என்ற மூவரும், இந்திரன் முதலான தேவர்களும், பூவுலகில் வாழ்பவர்கள் என அனைவரும் வந்து பக்தியுடன் உன்னையே வணங்குவார்கள் காண்பாயாக. அவர்களிடம் அன்பு கொள்வாயாக: கொடிய மதம் கொண்ட திசை யானைகளால் சூழப்பட்டிருக்கும் எட்டுத் திசைகளிலும், வாழ்கின்ற திசைக் காவலர்கள் தம்முடைய வாழ்நாட்களை வீணாக்காமல் ஒளிமிக்க சிலம்பை அணிந்திருக்கும் உன்னுடைய திருவடிகளைத், தம்முடைய பொன் போன்ற தலைகளில் அணிந்து கொள்வார்கள் தேவனே. கோபம் கொள்ளாமல் சிவந்த கனி போன்ற உன் அழகிய வாயினால் சிரித்தருள்வாய்.

வலிமை மிக்கவனே முருகக்கடவுளே குளிர்ச்சி பொருந்திய தமிழை அறிகின்ற பெருமானே. பகைவர்களான யானைகளை ஒழிக்கின்ற சிங்கம் போன்றவனே கையில் சங்கினை ஏந்தியிருக்கின்ற திருமாலின் மருமகனே உமாதேவியார் பெற்றெடுத்த திருக்குமரனே கண்ணுறங்கு வாயாக. இயல் தமிழை எப்போதும் ஆராயும் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகக்கடவுளே கண்ணுறங்கு வாயாக.

தாலப் பருவம் முற்றும்.

## சப்பாணிப் பருவம்

பரவரிய நவமணி யழுத்து கலனுக்கு
பாலித்து வீறுபெற்ற
பன்னிரு புயமு குலுங்காமல் குழைதோறும்
பருவயிர குண்டலங்கால்
இரவி யொளி மடக நின்றாசையாமல் அமுதொழுகு
இந்துமுக மண்ட லத்தில்

எழுதரிய திருநுதற் புண்டரங் குறுவேர்
விறைகச் சிதைந்தி டாமல்
கழிவண்டலம்புங் கருங்குவளை யோடை சூழ்
கழிதொறுங் கானல் தொறும்

தரளமணி முழுநிலவு தருசெந்தில் வேலவர்
சப்பாணி கொட்டி யருளே
சமர முகரணவீர பரசமைய திமிராரி
சப்பாணி கொட்டியருளே. 1

(தெ-ரை) புகழ்வதற்கு அரிதான நவரத்தினங்களைப் பதித்த தோள் வளைக்கு அழகு கொடுத்துப் பெருமை பெற்ற உன்னுடை பன்னிரு தோள்கள் குலுங்காமலும், ஆறுமுகங் களிலும் அணிந்திருக்கும் நீண்ட காதணிகள் தோறும் பெரிய வயிரக்கற்கள் பதித்த குண்டலங்கள் சூரியனின் ஒளியேங்கு மாறு நின்று அசையாமலும், அமுதம் ஒழுகுகின்ற நிலவு போன்ற முகத்தில் எழுதுவதற்கு அரிதான அழகினை உடைய நெற்றியில் அணிந்திருக்கும் திருநீறு சிறு வியர்வை படிவதனால் அழியாமலும், கையாகிய தாமரை மலரில் இருக்கின்ற விரல்கள் செந்நிறம் அடையாமலும், கையில் அணிந்திருக்கும், கடயங்களும் கங்கணங்களும் ஒலி எழுப்பாமலும், மிகுதியான வண்டுகள் சுற்றித் திரியும் கருங்குவளை மலர்கள் மலர்ந்த ஓடைகளால் சூழப்பெற்றி ருக்கும் உப்பங்கழி களிலும், கடல் ஓரத்தில் இருக்கின்ற நிலங்களிலும், முத்துக்கள் ஒளி வீசுகின்ற திருச்செந்தூர் முருகக் கடவுளே சப்பாணிக் கொட்டியருள்வாயாக.

அண்டர் தந்துய ரோத்தன மென்ற கொண்டாடி
பாவலர் கொட்ட மன்னு
அயிராணி அமுதுண்டம் எனத் தேவர்
சிறு கரங்கள் கொட்டத்

துண்ட வெண்பிறை எயிற்று வெஞ்சூழ்ந்
துண்ணெனப் பறைகொட்ட
நீழ்சுருதி அந்தணரிடம் தொறுமங்கலம்
பெருந்தூரியங் கொட்ட முட்டப்

பண்டரும் பெருங் கவிப்புலமைக்கு நீசொன்ன
படிதிண்டி மங் கொட்டவெம்

**பகை நிசா சரர்வளம் பதிமுழுதும் நெய்தலம்**
**பறை கொட்ட வேள் தண்டளர்**

**மலர் மொண்டு கொண்டு நகர்வேலவா**
**சப்பாணி கொட்டியருளே**
**மாமுகர் ரணவிர பரசமைய திமிராரி**
**சப்பாணி கொட்டி யருளே. 2**

(தெ-ரை) தேவர்கள் அசுரர்களால் தங்களுக்கு ஏறபட்ட துன்பங்கள் அனைத்தையும் இல்லாமல் செய்து விட்டோம் என்று மகிழ்ச்சி கொண்டு வணங்கி கை கொட்டவும், நிலை பெற்ற இந்திராணியின் புணர்ச்சியாகிய அமுதத்தை உண்பது உறுதி என்று தேவர்களின் தலைவனை இந்திரன் இரண்டு கரங்களைக் கொட்டவும்; வெண்மை நிறமான இளம்பிறை போன்ற உடைந்த தந்தங்களை உடையகொடுமைத் தன்மை உடைய சூரபத்மனின் மனம் நடுக்கம் கொண்டு பறை அறையவும், வேதங்களை ஓதிய அந்தணர்கள் வாழ்கின்ற இடங்களில் எல்லாம் பெருமை மிக்க மங்கள இசைக் கருவிகள் ஒலி எழுப்பவும்; பிறர் அறிவுக்கு எளிதில் பொருள் விளக்கிக் கொள்ள இயலாத இறையனார் அகப்பொருளுக்கு நீ ஏற்றுக் கொண்டவாறே அதுவே உண்மை உரையாகும் என்று உன் வெற்றிக்கு அறிகுறியாக திண்டிமம் என்னும் பறை முழங்கவும், கொடிய பகைவர்களாகிய அசுரர்களின் நகரம் முழுவதும் அவர்களின் மரணத்தை அறிவிக்கும் சாப்பறை முழங்கவும், வெண்மை நிறமான சங்குகள் ஈன்ற குளிர்ந்த முத்துக்களை அலைகள் அள்ளிக்கொட்டுகின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் தலைவனே, சப்பாணிக் கொட்டியருள்வாயாக.

**பௌவமெறி கடலாடை யுலகிலொரு வேட்டுவன்**
**பறவைக்கு நிறை புகுந்த**
**பார்த்திபன் பாவையு மிக்குலச் சிறையும்**
**பளித்தருள் மதுரை புக்குத்**

தெவ்வரிடு திருமடற் றெறி செழியனுட லுறச்
சென்று பற்றலும் எவற்குந்
தீராத வடவையனல் வெப்பு முதுகூனுந்
திருத்தி யொருவாது வென்று

வெவ்வனலி லெழுதியிடு மெடும் பெருங்காத்தில்
விட்ட தமிழேடு மொக்க
வேகாம லெதிரே குடற்கேற வெங்கழுவில்
வெய்ய சமண முகரேறச்

சைவநெறி யீடேற வருகவுணியக் குழவி
சப்பாணி கொட்டி யருளே
தாளமெறி கரையில் வளைதவள செந்திவேலவா
சப்பாணி கொட்டி யருளே. 3

(தெ-ரை) அலை வீசுகின்ற கடலாகிய ஆடையை அணிந்திருக்கின்ற உலகில் ஒரு வேடன் தொடர்ந்த பறவைக்காக தராசில் ஏறி நின்ற சிபிச் சக்கரவர்த்தியின் மரபில் பிறந்த மங்கையர்க்கரசியாரும், நல்ல குணங்கள் நிறைந்த குலச்சிறை நாயனாரும், தூதர்கள் மூலம் அழைத்ததனால் மதுரை நகரில் புகுந்து பகைவர்களாகிய சமணர்கள் எரித்த திருமடத்தின் தீச்சுடர் பாண்டிய மன்னனின் உடலில் வெப்பு நோயாகப் பற்றியது.

முன்பே அவன் உடலில் இருந்த கூனலையும் போக்கியருளி வாதத்தில் சமணர்களை வென்று வெப்பம் மிக்க நெருப்பில் எழுதிப் போட்ட ஓடும் ஆற்றில் இட்ட ஏடும் ஒரே நேரத்தில் எரியாமல் இருக்கவும், ஏடுகள் நீரை எதிர்த்து மேலேறி வரவும் கொடிய சமணர்கள் கழுவில் ஏறவும், சைவ சமயம் உயர்வு பெறவும் பிறந்தருளியவனே; திருஞான சம்பந்தப் பெருமானே சப்பாணி கொட்டியருள்வாயாக பிற சமயங்களாகிய இருளை விலக்கும் சூரியன் போன்றவனே சப்பாணிக் கொட்டியருள்வாயாக.

பைந்தாள் தழைச்சிறைக் கானவா ரணமருவு
பந்திரிடு முல்லை வேலி
பாயுமுட் பணைமருப் பேறுதழு வியுமுடைப்
பாலாறா மேனி மடவார்

கொந்தார் குரும்பையிள வனமுலை முகக்கோடு
குத்தச் குருந்தொசித்துங்
குறுங்கழைத் துண்டந் தனில்சிறு துளைக்கருவி
குன்றுருக நின்ற ழைக்குஞ்

செந்தா மரைக்கைவிரல் கொடுபுதைத் துஞ்சுருதி
தெளியவிரல் முறையில் விட்டுந்
தேறுவின் பிறகே திரிந்துங் கவிடகுழி
திறந்து மதமாரி சிந்துந்

தரசலந் தனக்குதவு திருமால் மருக
சப்பாணி கொட்டி யருளே
தாளமேறி கரையில் வளை தவளை செந்தில் வேலவர்
சப்பாணி கொட்டியருளே. 4

(தெ-ரை) பசுமையானதானப் பாதங்களையும் வளரும் சிறகுகளையும் உடைய காட்டுக் கோழிகள் வாழ்கின்ற பந்தலாக வளரும் முல்லைக் கொடிகள் நிறைந்த முல்லை நிலத்தில் பாயும் இயல்பினை உடைய முள்போன்ற கூர்மையான கொம்புகளை உடைய காளைகளைத் தழுவியும், பால் மணம் வீசுகின்ற ஆயர்களின் பூக்களால் அலங்கரிக்கப்பெற்ற தென்னங்குரும்பை போன்ற அழகான முலைகளாகிய கொம்புகள் தோன்றக் குருந்த மரத்தை முறித்தும்; சிறிய மூங்கில் துண்டில் துளைகள் அமைந்த புல்லாங்குழல் என்னும் இசைக் கருவியை மலைகளும் உருகுமாறு விரல்களைக் கொண்டு ஒருபோதும் அடைத்தும் ஏழு இசைக் குறிப்புகளும் நன்றாக ஒலிக்குமாறு விரல்களை முறைப்படி விடுவித்தும்; பசுக்களின் பின்பு அலைந்தும், கன்னங்களில் மதநீர் சிந்துகின்ற கசேந்திரன் என்னும் யானைக்கு அருள் புரிந்தவனாகிய திருமாலின் மருமகனே சப்பாணி கொட்டியருள்வாயாக. அலைகள் முத்துக்களை

வாரி வீசுகின்ற கடற்கரையில் சங்குகள் ஊர்ந்து செல்லுந் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானே சப்பாணி கொட்டியருள்வாயாக.

**கார் கொண்ட பேரண்ட கூடமோ ரேழுநீ**
**கற்பிக்கு மந்திர சாலை**
**கற்பதா ருவுநின் புயத்தினுக் கணிமாலை**
**கட்டவளர் நந்தவனம்**

**சீர்கொண்ட புருகூத னுந்தேவர் குழுவுநின்**
**திருநாம மறவாத பேர்**
**சிகரகன காசலமும் உனதுதிரு வாபரண**
**சேர்வைசேர் பேழை கடல்நீர்**

**போர்கொண்ட வேலின் புலால் குழவு நீரெழு**
**போலு மத்தனைதீ வுமோர்**
**பொலிவினுட னேநின் கலாபமயில் வையாளி**
**போய் மீளும் வீதியெனவே**

**தார் கொண்ட மணிமார்ப செந்தில் வடிவேலவா**
**சப்பாணி கொட்டி யருளே**
**சமர்முக ரணவீர பரமைய திமிராரி**
**சப்பாணி கொட்டி யருளே, 5**

**(தெ-ரை)** மேகங்கள் சூழப்பெற்றிருக்கும் ஏழு உலகங்களுக்கும் நீ பிரணவ மந்திரத்தின் பொருளைக் கற்றுக் கொடுக்கும் மந்திரச் சாலைகளாகும். கற்பக மரம் உன்னுடைய தோள்களுக்கு அழகான மாலை தொடுக்கும் பொருட்டு வளர்கின்ற நந்தவனமாகும்.

மேன்மை மிக்க இந்திரனும், தேவர்களின் கூட்டமும் உன் பெயரை மறக்காத அடியார்களாவர். பொன் கோட்டையினை உடைய மேருமலை உன் அழகான பூண்களைச் சேர்த்து வைக்கும் அணிகலன்களுடைய பெட்டியாகும்.

கடல் நீர் நீ அசுரருடன் போர் புரிந்த போது எய்த வேலில் உள்ள மாமிசத்தைக் கழுவும் நீராகும். ஏழு உலகங்களும் ஏழு தீவுகளும் ஒப்புமை கூற இயலாத அழகுடைய உன் தோகை மயில் ஓடி விளையாடும் வீதிகளாகும், மாலை அணிந்த மார்பினை உடையவனே, திருச்செந்தூரில் கோயில் கொண்டிருப்பவனே, சப்பாணி கொட்டியருள்வாயாக.

**கருதிய தமனிய மணியரை வடமொடு**
**கட்டு வடத் தொடுங்**
**கற்பரிபுர ஒலியெழவே மணிகைக்**
**கடயப்பூணு மிகுசுடரொளிபெற**

**மருவிய தரளநடையிட்டு மதிப் பாகவே**
**வெழுமதி புரைகுமுத மலர்**
**குறுவெயர் விட்டு வரத் தாமஞ் சொருகிய**
**நறுமலர் முகையவிழ் சிகையிடு**

**சுட்டி நுதற் நாடித் தொழுதுனை வழிபடும்**
**அடியவர் இளையவர் சொற்படி தப்பாமற்**
**குருமணி யலையெறி திருநகர் வருகக்**
**கொட்டுக சப்பாணி**
**குருபர சரவண பவசிவ மடிவிடை**
**கொட்டுக சப்பாணி. 6**

(தெ-ரை) தேர்ந்தெடுக்கப்பெற்ற பொன்மொழிகளால் அமைந்த அரைஞாணாக அணியப்பெற்ற தொங்கல் வடத்தோடும் அடிகளில் அணிந்த சிலம்புகளில் ஒலி உண்டாகவும், அழகு மிக்க நவரத்தினங்கள் இழைத்த கையில் அணியும் பூண், கடகம் என்னும் அணிகலன்கள், சூரியன், சந்திரன் போன்று ஒளிவீசவும், தளர்நடை நடந்து பெருமையாக உதிக்கின்ற சந்திரன் போன்ற அழகிய முகமாகிய தாமரை சிறு வியர்வைத் துளிகள் துளிர்க்கவும்; தலையில் அணிந்த சுட்டி என்னும் அணிகலன் நெற்றியில் தாழ்ந்து விளங்கவும், உன்னை வணங்கி வழிபடும் அடியார்களாகிய அடிமைகளின் வேண்டுகோளுக்கு

இணங்கவும்; பல நிறம் தோன்றும் முத்துக்களை அலைகள் கரையில் வீசுகின்ற திருச்செந்தூரின் தலைவனே, சப்பாணி கொட்டியருள்வாயாக. நாணல் காட்டில் பிறந்த குழந்தையே, சிவபெருமானின் குழந்தையே சப்பாணி கொட்டி யருள்வாயாக;

**வரைபுரை புயமிசை யிடுகொடி அணிகலன்**
**மற்றுள முத்தாரம்**
**மணிமுடி குழையிடும் இருசிகை யழகெழ**
**மைக்குவ ளைப்பொதின்**

**விரைசெறி குழலியர் செவிலியர் அவரவர்**
**மிக்கவி ருப்பனார்**
**விபுதரு முனிவரும் உனதடி பரவியுன்**
**வெற்றியும் உரைப்பார்கே**

**அரைமணி யுடைமணி கணகண கணவென**
**அத்திமு கத்தோனும்**
**அரிபிர மருமுமை கணவனும் மனமகிழ்**
**அற்புதம் விளைத்தார்பார்**

**குரைகடல் அலையெறி திருநகர் ரதிபதி**
**கொட்டுக சப்பாணி**
**குருபர சரவண பவசிவ மழவிடை**
**கொட்டுக சப்பாணி 7**

(தெ-ரை) மலையையொத்த தோள்களின் மேல் அணிந்த தோள்வளை என்னும் அணிகலனும், முத்து மாலைகளும், அழகிய திருமுடியில் குழைவாகச் சுருட்டி அமைக்கப்பெற்ற முன்னும், பின்னுமாக அமைந்த இரண்டு சிகைகளும் அழகோடு விளங்க.

கருமை நிறமான நீலோத்பவ மலர்களின் மணம் மிகுந்த கூந்தலை உடைய பெண்கள் ஆகிய கார்த்திகைப் பெண்கள், ஆறுபேரும் உன்னிடம் மிகுந்த விருப்பம் கொண்டனர். தேவர்களும், முனிவர்களும் உன்னுடைய மேன்மையான அடிகளைப் புகழ்ந்து உன் சிறப்புகளைப் பேசுவார்கள்.

இடையில் கட்டிய மணியும், உடையில் இருக்கின்ற மணியும் முழக்கம் செய்ய நீ வருகின்ற காட்சியைக் கண்டு யானை முகமுடைய விநாயகக் கடவுளும், திருமாலும், பிரம்மதேவனும், உமையம்மையின் தலைவனாகிய சிவபெருமானும் மனம் மகிழ்கின்ற அன்பை உன்னிடம் கொண்டிருக்கின்றனர் காண்பாயாக. ஒலிமிக்க கடல் அலைகள் வீசுகின்ற திருச்செந்தூரின் தலைவனே, சப்பாணி கொட்டியருள்க, குருவே, நாணல் காட்டில் பிறந்தவனே, சிவன் பெற்றெடுத்த இளங்கன்றே சப்பாணி கொட்டியருள்க.

கவளமத வெற்பினிலை யுலகு பரவபரவகோள்
கைத்தா மரைக் கடம்பூண
கதிரொளி விரிக்கவளர் சுட்டிமிசை
கட்டாழி முத்தொளிரவே

பவளவிதழ் புத்தமுக மொழுக மழலைக் குதலைப்
பாதி சொற் தெரியவே
பரிபுர மொலிக்க வொரு குளிர்நகை யெழுப்பியிடு
பைச்சேடன் உச்சி குளிரப்பா

உவளகம் அனைத்துமின வரிவளை முழக்கவெடி
யுற்றே பருத்த கயல்
ஒருபுடை குதிக்கவரி யலவனளை யிற்புகுத
உப்புறு கெட்டகழி தோய்

தவளமணி முத்தயலை எறியுநக ருக்கதிப
சப்பாணி கொட்டியருளே
சருவிய புரச்சமைய விரதிய குலக்கலக
சப்பாணி கொட்டி யருளே. 8

(தெ-ரை) பெரிய உருண்டைகளாக உண்ணும் மதம் கொண்ட திசையானைகளால் நிலைபெற்ற உலகில், வாழ்கின்ற உயிர்கள் எல்லாம் புகழுமாறு ஒளி பொருந்திய கையாகிய தாமரை மலரில் உள்ள பொன் கடகம் என்னும்

அணிகலன் சூரியன் போல் ஒளிவீசவும், மேன்மேலும் வளர்கின்ற குஞ்சியில் அணிந்துள்ள சுட்டி என்னும் அணிகலன் மேல் கட்டித் தொங்கவிடப்பட்ட முத்துக்கள் ஒளிவீசவும்; பவளம் போன்ற சிவந்த நிறமுடைய இதழிலிருந்து வரும், அமுதம் போன்ற குழந்தைக்குரிய மழலைச் சொல் முழுமை பெறாத சொற்களாக விளங்கவும், சிலம்பு ஒலி எழுப்பவும், தோன்றுகின்ற புன்னகையை எழுப்பிவிடுகின்ற ஆயிரம் படங்களை உடைய ஆதிசேடனின் உச்சி குழியுமாறு பாய்கின்ற நீர் நிலைகளில் இளமையான கோடுகளை உடைய சங்குகள் ஒலியெழுப்பவும்; பெரிய கடல் மீன்கள் எழுந்து பாய்ந்து ஒரு பக்கத்தில் குதிக்கவும், வரிகளை உடைய நண்டுகள் வளைகளில் நுழையவும், உப்பு விளைகின்ற கடலில் உள்ள வெண்மை நிறமான முத்துக்களை அலைகள் வீசுகின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் தலைவனே, சப்பாணி சொட்டியருள் வாயாக. நெருங்கி வந்த சமணத் துறவிகளின் குலத்தை அழித்தொழித்த சைவ ஆசாரியான முருகா சப்பாணி கொட்டியருள்வாயாக.

கந்தத் தகட்டினர் விந்தத்தனிக் கடவுள்
கற்பா யெனச் சுருதியால்
கண்டித் துரைத்திடவும் இந்தக் கரத்திலுரைக்
கற்பா லுரைத்தி யெனவே

அந்தப் பொருட்பகுதி யுந்தித் தினைப் பகரும்
அப்போ வெறுத்து முனிவர்
அஞ்சத் திருக்குமயன் அஞ்சச் சிறைக்குளிரும்
அப்பா சிறக்கும் அமலா

பந்தப் பிறப்பொழிய வந்தித் திருக்குமவர்
பற்றாக நிற்கு முதல்வர்
பண்டைக் குடத்திலுறு முண்டச் சிறுத்தமுனி
பத்தாசை யத்து மிகவாழ

சந்தப் பொருப்பிறைவ செந்திப் பதிக்கதிப
சப்பாணி கொட்டி யருளே
சங்கத் தமிழ்ப்புலவ துங்கக் கடக்குமர
சப்பாணி கொட்டியருளே. 9

(தெ-ரை) மணமிகுந்த இதழ்களையுடைய தாமரை மலரில் எழுந்தருளி இருக்கும் பிரம்மனானவன் முருகனே நீ கற்றுக் கொள்வாய் என்று வேதங்களை ஆசிரியர் மாணவர்களுக்குக் கற்பிக்கும் முறையில் கண்டித்துக் கற்றுக்கொடுக்க, அதனைக் கேட்டு பிரம்மனை நோக்கி இந்த ஓர் எழுத்தின் பொருளை உன் கல்வித்திறன் துணைகொண்டு சொல்வாயாக என்று கேட்டு பிரணவ மந்திரத்தின் பொருள் பாகுபாட்டின் முடிவைப் பிரம்மன் கூற, அது பொருத்தம் இல்லை என்ற கோபம் கொண்டு; அன்ன வாகனத்தின் மேல் வீற்றிருக்கும் பிரம்மன் அச்சம் கொள்ளுமாறு அவனைச் சிறையில் அடைத்தவனே, அப்பனே, சிறப்பு மிக்கவனே பாசத்தலைகளால் ஏற்படும் பிறப்பு அழியுமாறு அடியார்கள் பற்றிய பொருளாக இருப்பவனே. குடத்தில் பிறந்த அகத்தியமுனிவர் மிகுதியான ஆசை கொண்டு வாழ்கின்ற பொதிகை மலையின் தலைவனே, திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானே சப்பாணி கொட்டியருள்வாய் சங்கத் தமிழ் பயின்ற புலவனே, கொடை வள்ளலே சப்பாணி கொட்டியருள்வாயாக.

முதுமொழி நினைவு தெரிந்த நாவலர்
முட்டா துனைப்பு கழவே
முளரியில் மருவியிருந்த நான்முகன்
முக்காலு மிச்சை சொலவே

புதுமலர் சிதறி மகிழ்ந்து வாள்வர்
பொற்றா ளினைப்ப ரவவே
புகலரும் இசைதெரி தும்பு ராதியர்
புக்கர் தெரித்து வரவே

மதுகரம் இடறிய தொங்கல் மாலிகை
மற்பூத் தசையவே
மணியொளி வயிரம் வலம்புரி தோள்வரை
மட்டாய் நெருக்கம் உறவே

சதுமறை முனிவர்கள் தங்கள் நாயக
சப்பாணி கொட்டி யருளே
சரவண பவகுக செந்தில் வேலவே
சப்பாணி கொட்டியருளே. 10

(தெ-ரை) பழமையான மொழிகளின் நினைவுடைய நாவன்மையுடையவர் உன்னை சிறப்பித்து புகழவும். தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம்மன் முக்காலமும் இச்சை சொல்லவும்., தேவர்கள் அன்றலர்ந்த மலர்களைத் தூவி மகிழ்ச்சி கொண்டு பொன்னிறமான உன் திருவடிகளை வணங்கவும்; பிறரால் சொல்வதற்கு அரிதான பெருமை உடைய இசை நுட்பங்களை எல்லாம் உணர்ந்து பாடும் தும்புரு, நாரதர் முதலான முனிவர்கள் உன் சன்னதிக்கு வந்து வணங்கவும்; வண்டுகள் துழல்ந்து மலர்ந்த மலர்கள் நிறைந்த மாலை, வலிமை மிக்க மலைபோன்ற தோள்களில் புரளவும் அழகிய ஒளிமிக்க வயிரங்கள் ஒளிமிக்க தோள் வளைகள் நெருங்கித் தோன்றவும், நான்கு வேதங்களையும் ஓதி உணர்ந்தவனே முனிவர்களின் தலைவனே, சப்பாணி கொட்டியருள்வாயாக.

சப்பாணிப் பருவம் முற்றும்.

## முத்தப் பருவம்

கத்துந் தரங்கம் எடுத்தெறியக்
கடுஞ் சூழலுலைந்து வலம்புரியளக
வாயிற் றவழ்ந்து வாலுகத்திற்
கான்ற மணிக்கு விலையுண்டு

தத்துங் காடலி கடதடத்தந்திப பிறைக்கூன்
மருப்பில் விளை தாளந்

தனக்கு விலையுண்டு தழைத்துங்
கழித்து வளைத்த் மணிக்

கொத்துஞ்ச மருதப பசுஞ்சாலி குளிர்
முத்தினுக்கு விலையுண்டு
கொண்டல் தருநித் திலந்தனக்குக் கூறுவந்தா
முண்டு னக்குக் குனவானி

வாய் முதற் தனக்கு விலையில்லை முருகா
முத்தந் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய் முதல்
முத்தந்தருகவே. 1

(தெ-ரை) ஒலி எழுப்புகின்ற அலைகள் எடுத்து வீசி முதிர்ந்த கருப்பத்தால் வருத்தம் கொண்டு வலம்புரிச் சங்குகள் கடற்கரையில் ஊர்ந்து சென்று மணல் மேடுகளில் ஈன்ற முத்துக்கு விலை உண்டு, பாய்ந்து ஓடும் மத நீர்ப் பெருக்கமுடையதும், மாறுபாடான குணமுடையதுமாகிய பெரிய யானையின் பிறைபோல வளைந்த தந்தத்தில் விளைந்த முத்தின் வகைக்கும் குறிப்பிட்டுச் சொல்லக் கூடிய விலை உண்டு; வளர்ந்து தலை சாய்த்திருக்கும் நெல்மணிகளைச் சுமந்த கதிர்களில் தோன்றிய அரிசியாகி குளிர்ந்த முத்துக்களுக்கும் விலை உண்டு. மேகத்தில் பிறக்கின்ற முத்திற்கும் சொல்லத்தக்க விலை உண்டு.

ஆனால் முருகா உன்னுடைய கொவ்வை கனி போன்ற வாயில் இருந்து நாங்கள் பெறத்தக்க முத்தாகிய முத்தத்திற்கு விலை மதிப்பு என்னவென்று கூற இயலாது. முருகப் பெருமானே, முத்தம் தந்தருள்வாயாக. முத்துக்களைச் சிதறுகின்ற கடற்கரையின் அருகில் இருக்கின்ற திருச்சீரலைவாய் என்னும் தலத்தில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே முத்தம் தந்தருள்வாயாக.

வளைக்குந் தமரக் கருங்கடலின்
வளைவாய் உகுத்த மணிமுத்துன்
வடிவேற் கறை பட்டுடல் கறுத்த
மாசு படைத்த மணிமுத்தம்

துளைக்குங் கழையிற் பருமுத்தந் துளைத்
தொடைமால் இதழ் பருகித்
தூற்றுந் திவலை தெறித்த முத்தம்
சுரக்கும் புயலிற் சொரிமுத்தந்

திளைக்கு கவனமயிற் சிறையிற்
சிறுதூட் பொதிந்த குறுமுத்தஞ்
செந்நெல் முத்தங் கடைசியர்கால்
தேய்த்த முத்தஞ் செழுந்தன்தேன்

முளைக்குங் கமலக்கனி வாயால்
முருகா முத்தந் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலை வாய்
முருகா முத்தம் தருகவே. 2

(தெ-ரை) இந்தப் பூமியைச் சுற்றி வளைந்திருக்கும் ஒலிமிகுந்த பெரிய கடலில் இருக்கின்ற சங்குகள் ஈன்ற அழகிய முத்துக்கள், உன்னுடைய கூர்மையான வேலின் கறைபட்டு உடல் கருமை நிறமடைந்து குற்றம் உடைய முத்தாகும். துளைக்கப்பெறும் மூங்கில் மரத்தில் பிறந்த பெரிய முத்து துளசிமாலை அணிந்த கண்ணனின் இதழில் ஊறுகின்ற நீரைப் பருகி அங்கிருந்து சிதறிய துளிகள் படிந்த முத்தாகும்.

மழை பொழியும் மேகங்களிலிருந்து பிறக்கும் முத்து விளையாடுவதும் வேகமுடையதுமாகிய உன் மயிலின் சிறகில் இருந்து விழுந்த சிறிய முத்தாகும். செம்மை நிறமான நெல்லில் இருந்து பிறந்த அரிசியாகிய முத்து உழத்தியர்கள் காலால் தேய்த்த முத்தாகும். அதனால் அவற்றை நாங்கள் விரும்பமாட்டோம்.

செழுமையும், குளிர்ச்சியும் மிகுந்த தேன் தோன்றுகின்ற தாமரை மலர் போன்ற அழகிய வாயினால் முருகப் பெருமானே, முத்தம் தருவாயாக முத்துக்களை அலைகள் எடுத்து வீசி எறியும் கடற்கரையின் அருகில் உள்ள திருச்சீரலைவாயிலில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானே, முத்தம் தந்தருள்வாயாக.

**கத்துங் கடலெனும் நெடும் படகிற்**
**கழியிற் சுழியிற் கழிநீரிற்**
**கானற் கரையிற் கறைதிகழுங்**
**னகதைப் பொதும்பிற் சுரும்பினங்கள்**

**தத்துங் கமலப் பசும்பொகுட்டீற்**
**சாலிற் குலையில் சாலடியிற்**
**தழைக்குங் கதலி அடிமடல்**
**தலைவாழை வைத்து முதழுது குரம்பைக்**

**குத்துந் தரங்க புனற் கவரிக்**
**குவளைத் தடத்தில் மடவாயிற்**
**குடக்கூன் சிறுமுப்பணில மொடு**
**கோடிகோடி யீற்றுளைந்து**

**முத்தஞ் சொரியுந் திருச்செந்தூர் முருகா**
**முத்தந் தருகவே**
**மொழியுஞ் சமய மனைத்தினுக்கு**
**முதல்வா முத்தந்தருகவே.** *3*

(தெ-ரை) அலைகள் ஒலி எழுப்பும் கடலிலும், கடல்தனில் அருகில் அமைந்திருக்கும் உப்பங்கழிகளிலும், உப்பங்கழிகளில் மலர்ந்திருக்கும் கழுநீர் மலர்களிலும், கழிகளில் தோன்றுகின்ற நீர்ச் சுழிகளிலும், கடற்கரையை அடுத்திருக்கும் சோலைகள் இருக்கின்ற கரைகளிலும்; கரைகளில் வளர்ந்திருக்கின்ற தாழை மரங்கள் அடர்ந்த புதர்களிலும், வண்டுகள் விளையாடுகின்ற தாமரையின் இளம் கொட்டைகளிலும், நெற்கதிர்களிலும், உழவு செய்கின்ற

சால்களின் கீழும், தழைத்து வளர்கின்ற வாழைக்குருத்தின் அடியிலும், தழைகளை எருவாகப் இட்டு உழவு செய்த பெரிய வயல் வரப்புகளை மோதுகின்ற அலை நீரால் அமைந்த வெடிப்புகளிலும்; குவளை மலர்கள் மலர்ந்திருக்கும் குளங்களிலும், நீர் பாய்கின்ற மடைகளிலும், குடம்போல் வளைந்த சிறிய முட்களை உடைய சங்குகள் கோடிக் கணக்காக வருத்தம் கொண்டு பெற்ற முத்துக்களைக் காணலாம். அத்தகைய வளமுடைய திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் பெருமானே, முத்தம் தந்தருள்வாயாக, மதங்கள் அனைத்திற்கும் தலைவனாக விளங்கும் முருகப்பெருமானே முத்தம் தந்தருள்வாயாக.

கலைப்பால் குறைத்த பிறைமுடிக்குங்
கடவுள் உடலின் விளைபோகங்
கனலில் கரத்தில் அளிக்க அந்தக்
கனலி பொறுக்க மாட்டாமல்

மலைப்பால் விளங்குஞ் சரவணத்தில்
வந்து புகுதவோ ஓராறு
மடவார் வயிறு சூலுரைத்து
மைந்தர் அறுவர்ப் பயந்தெடுக்க

கொலைப்பால் விளங்கும் பரசுதான்
குன்றில் வரை கோடுறுதி செல்லக்
கூட்டி யணைத்துச் சேரவொரு
கோலமாக நிக்கவுந் திரு
முலைப்பால் கொடுத்த கனிவாயால்
முத்தந்தருக முத்தமே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முதல்வா முத்தந் தருகவே. 4

(தெ-ரை) குறைந்த கலைகளை உடைய இளமையான பிறையை தன் தலையில் சூடியிருக்கும் சிவபெருமான் தன் உடலில் விளைந்த சக்தியை அக்கினிதேவன் கையில்

கொடுக்க, அவன் அதனை தாங்கிக் கொள்ளும் சக்தி அற்றவனாக மலைக்கு அருகில் உள்ள சரவணப் பொய்கைக்கு வந்து அதனை விடுவிக்க, ஆறு கார்த்திகைப் பெண்களும் அதனைக் கருவாகத் தாங்கி வருத்தம் கொண்டு ஆறு குழந்தைகளைப் பெற்றெடுத்தனர்.

கொலைத் தன்மை மிகுந்த மழுப்படையைக் கொண்டிருக்கும் சிவபெருமான், கயிலாய மலையில் அந்த ஆறு குழந்தைகளையும் எடுதது்க் கொண்டு செல்ல அவற்றை இறைவி மார்போடு அணைத்து உருவம் ஒன்றான முருகப்பெருமானாக்கினாள்.

இவ்வாறு ஓர் உருவமாகி இறைவியின் மேன்மை மிக்க முலையில் பால் அருந்திய அழகிய வாயினால் முருகப்பெருமானே முத்தம் தந்தருள்வாயாக. முத்துக்களை அலைகள் எடுத்து வீசும் கடற்கரையில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே, முத்தம் தந்தருள்வாயாக.

வயலுஞ் செறிந்த கதலினை
மாடம் செறிந்த கதலின
மலர்க்கா வெங்குந் தென்னிரை
மாலை தோறுந் தேனினிரை

புயலுஞ் செறிந்த கனகவெயில்
புடையே பரந்த கனகவெயில்
பொழுதும் பலதோறு பொதிமரமென
புளினந் தொற மோதிமஞ்செங்

கயலுஞ் செறிந்த கடகடையார்
கலவிக் கரும்போர் கட்கடையார்
கருணை புரியும் அடியாருன்
காதல் புரியும் அடியார்சீர்

முயலும் படிவாழ் திருச்செந்தூர்
முருகா முத்தந் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலை வாய்
முதல்வா முத்தந் தருகவே. 5

(தெ-ரை) வாழை மரங்கள் வயல் வெளிகளில் அதிகமாக வளர்ந்திருக்கின்றன. மாடங்களிலெல்லாம் கொடிகள் கூட்டமாக விளங்குகின்றன. சோலைகளில் எல்லாம் பெரிய பெரிய தேன் இறால்கள் வரிசையாக உள்ளன. மாலைகளில் வண்டு கூட்டங்கள் சூழ்ந்திருக்கின்றன.

மேகங்கள் படிந்திருக்கும் கல்மலையாகிய அரண் மதிலுக்கு அருகில் பொன் நிறமான வெயில் பரவியிருக்கின்றது. சோலைகளில் எல்லாம் பனி நிறைந்திருக்கின்றது. மென்மையான மணல் மேடுகளெல்லாம் அன்னப் பறவைகள் இருக்கின்றன.

கெண்டை மீன் போன்ற கண்களைக் கொண்டிருக் கின்ற உழத்தியர்கள் புணர்ச்சிக் காலத்தில் தம் கணவர்களுடன் கொள்கின்ற ஊடலில் சமாதானம் அடையமாட்டார்கள். உன்னை வந்து அடைக்கலமாக அடைந்தவர்களுக்கு அருளபுரியும் திருவடிகளை உடையவனே, உன்மேல் அன்பு கொண்டிருக்கும் அடியார்கள் நற்கதி அடைய வழிகாட்டும் திருச்செந்தூர் முருகப்பெருமானே, முத்தம் தந்தருள்வாயாக. அலைகள் எடுத்து வீசும் கடற்கரையில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே முத்தம் தந்தருள்வாயாக.

தொழுதுந் துதித்துந் துயரகத்திச்
சுரருக் கிறையுஞ் சுரருடனே
சூழ்ந்த கடம்பாட புவியுலுறை
சொக்கக் கடவுள் தனைமூன்று

பொழுதும் பரவி எழுத்துஞ் சொற்
போலப் பொருளும் புகறியெனப்

புகலும் மாறஞ் சிரட்டி தனை
பொருட் சூத்திரத்தின் வினை மயங்கா
வெழுதும் பனுவற் பரணன் முதல்
ஏழேழ் பெருமைக் கவிப்புலவர்
இதயங் களிக்க விருப்பமுடன்
இறையோன் பொருட்டு பொருள் விரித்து
முழுதும் பகர்ந்த கனிவாயால்
முத்தந் தருகவே, முத்தறவம்
முத்தஞ் சொரியுங் கடலைலைவாய்
முதல்வா முத்தந் தருகவே. 6

(தெ-ரை) வணங்கியும், பாடல்களால் வழிபட்டும் தங்களுடைய துன்பங்களைப் போக்கிக் கொணடு தேவர்களின் தலைவனான இந்திரனும், தேவர்களும் வணங்குமாறு கடம்பவனத்தில் கோயில் கொண்டுள்ள சொக்கநாதப் பெருமானை மூன்று காலங்களிலும் புகழ்ந்து போற்றி, எழுத்திலக்கணமும், சொல் இலக்கணமு; வழங்குவது போலப் பொருளியலக்கணமும் சொல்லியருள்வாய் என்று பாண்டிய மன்னன் வேண்டிக் கொண்டதனால் இறையனார் அருளிய அறுபது அகப்பொருள் சூத்திரங்களின் மெய்யான பொருள் மயக்கமின்றி, உரை இயற்றிய பரணர் உள்ளிட்ட நாற்பத்து ஒன்பது பெருமை மிக்க தமிழ்ப் புலவர்களின் மனம் மகிழ்ச்சி கொள்ளுமாறு, விருப்பமுடன் இறையனார் அருளிய நூலுக்குப் பொருளை முழுவதுமாக விளக்கிக் கூறிய அழகு பொருந்திய வாயினால் முருகப்பெருமானே, முத்தம் தந்தருள்வாயாக. முத்துக்களைச் சிதறுகின்ற கடற்கரையின் அருகில் இருக்கின்ற திருச்சீலைவாய் என்னும் தலத்தில் கோயில் கொணடிருக்கும் முருகப்பெருமானே முத்தம் தந்தருள்வாயாக.

கடுந டைச்சிந் துரம ருப்பின்
கதிர் கொள் முத்தஞ் சொரிவைநீழ்
கடல ளிக்குப் பணில் முத்தங்
கழையில் முத்தந் தருகவோ

உடுமு கட்டம் புயல்கருக்கொண்
டுமிழு முத்தம் கருகல்தேன்
ஒழுகு பொற்பங் கயம டல்தந்
தொளிரு முத்தந் திருகல்காண்

படுக ரைக்குண் டகழி நத்தின்
பரிய முத்தந் தெரியவே
பரவை யொற்றுந் திரைகொ ழிக்கும்
படியில் முத்தஞ் சிறுமகார்

கொடுப ரப்பும் பதிபுரக்குங்
குமர முத்தம் தருகவே
குறுமு னிக்குள் தமிழு ரைக்குங்
குழவி முத்தம் தருகவே. 7

**(தெ-ரை)** விரைந்து நடக்கும் யானையினது கொம்பில் தோன்றுகின்ற ஒளிமிக்க முத்தின் வகையும், சரவை என்னும் குற்றத்தை உடையது. நீணட கடல் கொடுக்கின்ற சங்குகள் ஈன்ற முத்திற்கும், கரும்பு தரும் முத்திற்கும் கரடு என்னும் குற்றம் உள்ளது.

வான் வெளியில் உள்ள நட்சத்திர மண்டலத்தில் திரியும் மேகங்கள் நீரைக் கவர்ந்து சிந்துகின்ற மழையாகிய முத்துக்களுக்குக் கருகல் என்னும் குற்றம் உள்ளது. தேன் துளிர்க்கும் பொன்னிறமான தாமரை இதழ்கள் தந்து ஒளி வீசும் முத்துக்களுக்குத் திருகல் என்னும் குற்றம் உள்ளது.

இயற்கையிலே அமைந்த கரையை உடைய கடலில் சங்குகள் ஈன்ற முத்துக்களைக் கடல் அலைகள் கொழிக்கின்றன. அவற்றைச் சிறுவர்கள் எடுத்துக்கொண்டு சென்று பரப்பும் திருச்செந்தூரில் ஆட்சிபுரியும் முருகப்பெருமானே, முத்தம் தந்தருள்வாயாக அகத்திய முனிவனுக்குத் தமிழ் இலக்கணம் சொல்லியருளிய குமரக்கடவுளே, முத்தம் தந்தருள்வாயாக.

பருவ முத்துங் குடவ யிற்றொண்
பணில மொய்க்குந் துறையெலாம்
பருவ முறசெங் கயல் குதிக்கும்
பலபற தெண்திரை முன்னீர்

பொருது குத்துந் திடர னைத்தும்
புறவ மொய்க்கும் புறவுசேர்
புளின வெற்பொங் கணுநி ரைக்கும்
புளின மொய்க்குங் குவளைவாய்

அரும டற்கண் டினமெ னச்சென்
றளிகண் மொய்க்கும் புதியசூ
லலவன் மொய்க்குங் குழிவ ழிச்சென்
றலை கொழிக்குங் கரையெலாங்

குருகு மொய்க்கும் பதிபு ரக்கும்
குமர முத்தந் தருகவே
குருமுனிக்குந் தமிழு ரைக்குங்
குழவி முத்தந் தருகவே. 8

(தெ-ரை) பருவம் முதிர்ந்ததும் குடம் போன்ற வயிற்றை உடையதுமான சங்குக் கூட்டங்கள் மொய்த்திருக்கும் துறைகளிலெல்லாம் பெரிய உருவமுடைய வலிமையுடைய செந்நிறக் கயல் மீன்கள் துள்ளிக் குதிக்கும். பலவாக எழுந்து வரும் அலைகள் கரைகளில் மோதும், மேடுகளில் புறாக்கள் கூட்டமாக நெருங்கி விளையாடும்.மணல் மேடுகளாகிய குன்றுகளிலெல்லாம் வரிசை வரிசையாகப் பறவைக் கூட்டங்கள் கூடியிருக்கும். குவளைச் செடியில் இருக்கின்ற அரிதான மலர் இதழைக் கண்டு இது தம் இனம் என்று கருதி வண்டுகள் சூழ்ந்து மொய்க்கும். புதிய கருவை தாங்கிய நண்டுகள் சூழ்ந்திருக்கும் பள்ளங்களிலெல்லாம் அலைகள் சென்று மோதிவரும், கடற்கரை எங்கும் நீர் நாரைகள் மிகுதியாக இருக்கும், உயர்வு மிக்க வளமான திருச்செந்தூர் நகரைக் காத்து வரும் முருகப்பெருமானே, முத்தம் தந்தருள்வாயாக. அகத்திய முனிவனுக்கும் தமிழ் இலக்கணம் சொல்லியருளிய முருகப்பெருமானே, முத்தம் தந்தருள்வாயாக.

இறுகல்கரு குலமுருவில் லட்சுமி புடாய முள்ளேறள்
புகை யேறல் செம்மண்
ஏறல்வெச் சுந்திருகல் மத்தகக் குழிலலவன்
இரவியொளி யிற்க ரத்தல்

மறுவறுத கட்டிலோ ரத்திலுயர் தூக்கத்தின்
மன்னுமா தளைகவிற்பு
பூமாந்துளிர் முயக்குருதி செவ்வரத் தங்கோப
மருவுமணி வகையழியுமேழ முறு

கலவழி யேறல்கல் லோலசிப் பிப்பத்து
முரிதறிரு குதல்சிவப்பு
முருந்திற் குருத்துச் சொருந்துருவி யிடையாடி
முரிகுதை வடிவெதுங்கல்

துறுமுகங் கக்கலொளி மடகல்கர டென்னாத
துகிரில்விளை முத்த மருளே
தோகைமே காரவா கனசெந்தி லாயுனது
துகிரில்விளை முத்த மருளே. 9

(தெ-ரை) நெகிழ்வுத் தன்மையின்மை, கறுமை நிறம் பெற்றிருப்பது, உடைந்திருப்பது, ஒளிக்குறைவுடையது, முள் ஏறியிருப்பது, புகை நிறம் படிந்திருப்பது, செம்மண் படிந்திருப்பது. எச்சம், திருகல் என்னும் குற்றம் கொண்டிருப்பது, தலைப்புறம் பள்ளமாக இருப்பது, சூரிய ஒளியின் முன் ஒளி குறைதல், மேற்புறத்திலும், ஓரத்திலும் மேடான பகுதியிலும் மாதுளை முத்தின் நிறம் தோன்றுதல்,

மாந்தளிரின் நிறம் காணப்படுதல் முயல் இரத்தத்தின் நிறம் காணப்படுதல், இரத்தம் போன்று செந்நிறம் உண்டாதல், இந்திர கோபப் பூச்சியின் நிறம் இடை இடையே தோன்றுதல், மணிகளுக்கே இயற்கையாக உள்ள வண்டு படிவு என்னும் குற்றம் முறுகுதல், காற்று ஏறியிருத்தல், கல்லேறு, சிப்பி பற்றியதால் உண்டான குற்றம் மயில் இறகின் அடிக்குருத்து போன்ற தோற்றம், செருந்து என்னும் குற்றம் பாய்ந்திருப்பது.

பள்ளம் உண்டாதலால் நல்ல வடிவம் அமையாமல் இருத்தல், துறுமுகம், கக்கல், ஒளிக்குறைவு, கரடு என்றும் குற்றங்கள் கொண்டிருத்தல் போன்ற குற்றங்கள் ஏதும் அமையாமல் முருகப்பெருமானே, உன் இதழில் தோன்றும் முத்தம், உனது பவளம் போன்ற வாய் மலரில் விளையும் முத்தத்தைத் தந்தருள்வாயாக. நீண்ட தோகையினை உடைய மயிலை வாகனமாக உடையவனே, திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் குமரக்கடவுளே முத்தம் தந்தருள்வாயாக.

**பையரவின் உச்சிகுழிப் பொருங் குண்டகட்**
**படுகடற் பணில முத்தம்**
**பார்வையா னுஞ்சிறிது பாரோம் இதன்றிப்**
**பசு பவழல் வெடித்த முத்தஞ்**

**செய்யசிந் தையினுமிது வேணுமென் றொரு பொழுது**
**சிந்தியோ முந்தி வட்டத்**
**திரைமுழங் கக்கொழுந் திங்கள்வட் டக்குடைச்**
**செழுநிழற் சம்ப ராரி**

**எய்யுமலர் வாளியை எடுத்துத் தெறிந்துநாண்**
**இறுகப் பிணித்த வல்வில்**
**ஈன்றகுளிர் முத்தத்தை முத்தமென் றணுகோம்**
**இதழ்க்கமல முகையு டைக்குந்**

**துய்ய மணி முந்தந் தனைத்தொடேம் உன்னுடைய**
**துகிரில்விளை முத்த மருளே**
**தோகைமே காரவா கனசெந்தி லாயுனது**
**துகிரில்விளை முத்தம் அருளே.** ***10***

(தெ-ரை) படத்தை உடைய ஆதிசேடனின் உச்சியானது குழியாகுமாறு அலைகள் மோதுகின்றதும், இயற்கையிலேயே பெரும் பள்ளங்களையும் உடைய கடலில் தோன்றுகின்ற முத்தக்களைக் கண்களால் சற்றும் விருப்பம் கொண்டு பார்க்கமாட்டோம். இதுமட்டுமல்லாது பசுமையான மூங்கிலில் இருந்து வெடித்த முத்துக்களை

நேர்மையான வழியில் செல்லும் எம்முடைய மனத்தினால் இது எமக்கு வேண்டும் என்று ஒருபோதும் நினைக்க மாட்டோம்.

கடலில் எழுந்த வளைவுடைய பெரிய அலைகள் ஒலி எழுப்ப நிலவு என்னும் குடை தருகின்ற ஒளியுடைய மன்மதனின் மலர் அம்புகளை எடுத்து நாணால் இறுக்கமாகக் கட்டியிருக்கும் கரும்பில் பிறந்த முத்துக்களை மனத்தால் நினைத்தும் நெருங்கமாட்டோம்.

இதழ்களை உடைய தாமரை மொட்டு மலர்ந்து வெளிப்படும். தூய்மையான முத்தினைத் தொடமாட்டோம். முருகா, உன் பவள வாயிலிருந்து பிறக்கும் முத்தத்தைத் தந்தருள்வாயாக. தோகைதனை உடைய மயிலை வாகனமாக உடைய முருகப்பெருமானே, திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகக் கடவுளே, முத்தம் தந்தருள்வாயாக.

**கோதிவரி வண்டுமது உண்டுகுடி கொள்ளுமெல்**
**குழலுக் குடைந்து விண்ணிற்**
**குடிகொண்ட கொண்டற் குறுந்துளியின் நித்திலக்**
**கோவையொரு கால் விருப்பேம்**

**காதிலுறும் வள்ளிமக ரக்குழை கடக்கும்மெம்**
**கண்ணுக் குடைந்து தொல்லைக்**
**கயத்திற் குளித்தசேல் வெண்தரள மென்னிலொரு**
**காலமுங் கருதி நயவேம்**

**போதிலுறு பசுமடற் பாளைமென்பூகம்**
**பொருந்துமெங் கந்த ரத்தைப்**
**பொருவுடு வேள்வலம் புரியாரம் இன்புறேம்**
**பொற்றோள் தனக்கு டைந்த**

**சோதிவேய் முத்தந் தனைத்தொடேம் நின்னுடைய**
**துகிரில்விளை முத்தம் அருளே**
**தோகைமே காரவா கனசெந்தி லாயுனது**
**துகிரில்விளை முத்தம் அருளே.** *11*

(தெ-ரை) மலர்களை வருடிய வரிகளை உடைய வண்டுகள் தேன் உண்டு குடிகொண்டிருக்கின்ற எம்முடைய கருமையான கூந்தலுக்குத் தோல்வியுற்று, வானுலகில் போய் வாழ்கின்ற மேகத்தின் சிறு மழைத் துளிகளுடன் வருகின்ற முத்துமாலையை ஒருபோதும் விரும்பமாட்டோம்.

எம்முடைய காதில் உள்ள வள்ளை மலரை ஒத்த மகரக் குழையின மேல் பாய்கின்ற எம்முடைய கண்களுக்குத் தோல்வியுற்று, பழமையான குளத்தில் மூழ்கி மறைந்த மீன் வயிற்றில் தோன்றும் வெண்ணிறமான முத்தை ஒரு காலமும் மனத்தால் நினைத்து விருப்பம் கொள்ளமாட்டோம்.

குறித்த காலத்தில் தோன்றுகின்ற பசுமையான பாலைகள் கொண்ட பாக்கு மரத்தின் கழுத்தைப் போன்ற எம்முடைய கழுத்துக்கு நிகராகாத வெண்ணிறமான வலம்புரிச் சங்குகளில் தோன்றுகின்ற முத்தை இன்பம் கொண்டு விரும்பமாட்டோம். எம்முடைய அழகான தோள்களுக்குத் தோற்ற ஒளிமிக்க மூங்கில் தரும் முத்தினைத் தொடவும் மாட்டோம். முருகா உன் வாயில் இருந்து முத்தம் தந்தருள்வாயாக, தோகை மயிலை வாகனமாகக் கொண்டவனே, திருச்செந்தூரில் எழுந்தருளியிருப்பவனே, முத்தம் தருவாயாக.

முத்தப் பருவம் முற்றும்.

## வருகைப் பருவம் (வாரனைப் பருவம்)

மூரிப்ப கட்டு வரிவாளை
முழங்கிக் குதிக்கக் கால்சாய்ந்து
முதிர விளைந்து சடைபின்னி
முடங்கும் பசுங்காய்க் குலைச்செந்நெல்

சேரிக் கருங்கை மள்ளர் குயந்
தீட்டி அரிந்த கொத்தினுக்குத்
தெண்முத் தளக்கச் சிறுகுடிலிற்
சேரக் கொடுபோய் அவர்குவிக்க

வேரி குவளைக் குழியில்வரி
வெண்சங் கினங்கள் ஈற்றுளைந்து
மெட்டில் உகுத்த பருமுத்தை
வெள்ளோ திமந்தன் முட்டையென

வாரிக் குவிக்குந் திருச்செந்தூர்
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பை முலை
வள்ளி கணவா வருகவே. 1

(தெ-உரை) கோடுகளை உடைய பெரியதான ஆண் வாளைமீன் பெரிய ஒலியுடன் குதித்ததனால் அடிப்புற மானது சாய்ந்து முற்றி விளைந்து சடை மாதிரி பின்னி வளைந்திருக்கின்ற, பசுமையான நெல் கதிரை சேரியில் வாழ்கின்ற பெரிய கையினை உடைய மள்ளர்கள், அரிவாளை தீட்டி அறுத்துக் குவித்த குவியலுக்குக் கூலியாகத் தெளிவான ஒளியுடைய முத்தினை அளக்க; மள்ளர்கள் அதனை எடுத்துச் சென்று தங்களின் சிறிய குடிசையில் குவித்துவைப்பார்கள். மணம் மிக்க குவளை மலர்கள் மலரும் பள்ளங்களில் கோடுகளை உடைய வெண்மை நிறமான சங்குக் கூட்டங்கள் கருக்கொண்டு வருத்தமுற்று மேட்டில் ஈன்று சென்ற பெரியதான முத்துக்களைத் தங்களுடைய முட்டைகன் என்று அன்னப் பறவைகள் வாரிக் குவிக்கும்.

அத்தகைய வளமான திருச்செந்தூர்த் தலத்தில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே வருவாயாக. கூர்மையான வேலைத் தாங்கியிருக்கின்ற முருகப் பெருமானே வருவாயாக. வளர்கின்றதும் சந்தனக் குழம்பு பூசியதுமான தென்னங்குரும்பை போன்ற முலைகளை உடைய வள்ளியின் தலைவனே வருவாயாக.

புள்ளம் தீர்ந்தகதிற் சென்றனர்
போரிற் பகடுதனை நெருங்கப்
பூட்டி அடித்து வைகளைந்து
போதக் குவித்த பொலிக்குவையை

வில்ள அரிய குடகாற்று
வீசப் பகடு தனைநீக்கி
வெள்ளிக் கிரிபோற் கனகவட
மேரு கிரிபோல் மிகத்தூற்றிக்

கள்ளம் எறியுங் கருங்கடைக்கட்
கடைசீ பிறித்த மணிமுத்தைக்
களத்தி லெறிய அம்முத்தைக்
கண்டுகுடித்த கட்குவிலை

மள்ளர் அளக்குந் திருச்செந்தூர்
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 2

(தெ-ரை) அரிவாளால் அறுவடை செய்த செம்மை நிறமான நெல் கதிர்களைக் குவித்து வைத்த போரில் காளைகளைப் பூட்டி நெருக்கமாக ஓட்டி நெல் தனியாக, வைக்கோல் தனியாக பிரித்துக் குவித்துவைத்து நெல் குவியலை மேற்கிலிருந்து வீசுகின்ற மேலக் காற்றில் தூற்றி, வெள்ளி மலைபோலவும், பொன் மயமாக வடதிசையில் உயர்ந்திருக்கின்ற மேருமலை போலவு குவித்து, நன்றாகத் தூற்றி, உள்ளத்தில் இருக்கின்ற கள்ளக் குணத்தை வெளிப்படுததுகின்ற, கருமை நிறமான கண்களை உடைய உழத்தியர்கள், நெல்லில் இருந்து பிரித்து எடுத்து அழகான முத்து மணிகளைக் களத்தில் எறிந்துவிட்டுச் செல்ல, அதனைக் கண்ட உழவர்கள் தாம் குடித்த கள்ளுக்கு விலையாக அளக்கும் வளம் மிக்க திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே, வருவாயாக. வளர்கின்ற தன்மை உடைய முலையில் வந்தனம் பூசிய தென்னங் குரும்பை போன்ற முலையினை உடைய வள்ளியின் கணவனே வருவாயாக.

**தேட அரிய மணியரைஞாண்**
**சேர்க்க வருக விரற்காளி**
**செறிக்க வருக திலகநுதல்**
**தீட்ட வருக மறுகில்விளை**

**யாடவருக மடியிலெடுத்**
**தணைக்க வருக புதுப்பனிநீர்**
**ஆட்ட வருக நெறிதருமுலை**
**அமுதம் பருகமுடி சூடவருக**

**உடற் புழுதி துடைக்க வருக**
**ஒருமாற்றஞ் சொல்ல வருக**
**தள்ளி நடை தோன்ற**
**வருகச் சோதி மாடம்**

**நெருங்குந் திருச் செந்தூர்**
**வடிவேல் முருகா வருகவே**
**வளருங் களபக் குரும்பைமுலை**
**குறவள்ளி கணவா வருகவே.** *3*

*(தெ-ரை)* நவரத்தினங்கள் பதிக்கப்பட்ட தேடிப் பெறுவதற்கு அரிதான அரைஞாண் கயிற்றை அணிவிப் பதற்கு வருவாயாக. உன்னுடைய மேன்மை மிக்க விரல்களில் மோதிரம் அணிவிப்பதற்காக வருவாயாக.

வீதியில் விளையாடுவதற்காக வருவாயாக, மடியில் எடுத்து மார்புடன் அணைத்துக் கொள்வதற்காக வருவாயாக. முலைப்பாலை அருந்துவதற்காக வருவாயாக. முத்தால் செய்யப்பட்ட அணிகலன்களை அணிவதற்காக வருவாயாக.

உன் உடம்பில் படிந்த புழுதியை துடைப்பதற்காக வருவாயாக. உன் மழலைச் சொற்களைச் சொல்வதற்காக வருவாயாக. தளர்நடை தோன்றுமாறு வருவாயாக. ஒளிமிக்க இரத்தினக் கற்கள் பதிக்கப்பட்ட மாடங்கள் நெருங்கி யிருக்கும் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் வடிவேல் ஏந்திய முருகப்பெருமானே , வளர்கின்ற தென்னங் குரும்பை போன்றதான முலையில் சந்தனம் பூசியிருக்கின்ற வள்ளியின் கணவனே வருவாயாக.

வள்ளலே மறைஞாணினிபட்ட
இலங்கும் மகரகுண்டடத்தை
யெடுத்து குழையின் மீதணியேன்
இனியுள் முகத்துக் கேற்ப ஒரு

சிறுகுந் திலதந் தீட்டேன்
திருகண் மலர்க்கு மையெழுதேன்
செம்பொற் கமலத் தாளடிக்குச்
சிலம்பு திருத்தோள் நெறித்துவிம்மி

முறுகும் முலைப்பால் இனிதூட்டேன்
மொகம் பார்திருந்து மொழிபகரேன்
முருகா வருக சிவசமய
முதல்வா வருகத் திரைகொழித்து

மறுகு மலைவாய்த் திருச்செந்தூர்
மழைலைச் சிறுவா வருகவே
வளருங் களபக் குரும்பை
வள்ளிக் கணவா வருகவே. 4

(தெ-ரை) வள்ளலே, முருகப்பெருமானே நீ வரவில்லை என்றால் உன்னுடைய இடையில் இறுகுகின்ற அரைஞாணை இனி நான் அணிவிக்கமாட்டேன். உன் காதில் மகரமீன் உருவில் இருக்கின்ற குண்டலத்தை அணிவிக்க மாட்டேன். உன்னுடைய முகத்துக்கு பொருந்துமாறு சிறிய பொட்டினைக் கூட உன் நெற்றியில் வைக்கமாட்டேன்.

உன் மலர் போன்ற அழகான கண்களுக்கு மை தீட்ட மாட்டேன். செம்பொன் நிறமான தாமரை மலர் போன்ற சிறிய அடிகளுக்கு இனி நான் நலம் மிக்க சிலம்பை அணிவிக்க மாட்டேன். விம்மிப் பெருத்த முலையில் சுரக்கின்ற பாலை உனக்கு ஊட்டுதற்குத் துணியமாட்டேன். உன் முகத்தைப் பார்த்துக்கொண்டு ஏதும் பேசுவதற்குத் துணியமாட்டேன் முருகப்பெருமானே வருவாயாக.

சைவ சமயத்தின முதற் பொருளாக விளங்குபவனே, வருவாயாக. அலைகள் மோதித் திரும்பி விழுகின்ற திருச்சீரலைவாய்க் கடற்கரையில் கோயில் கொண்டிருக்கும் மழலை மொழி பேசும் குழந்தையே வருவாயாக. தென்னங் குரும்பை போன்ற முலையில் சந்தனம் பூசியிருக்கும் வள்ளியின் கணவனே வருவாயாக.

வெண்மைச் சிறைப்புள் ஓதிமங்கள்
விரைக்கே தகையின் மடலெடுத்து
விரும்புங் குழவி மென்மடியின்
மீதே இருத்திக் கோதாட்டித்

திண்மைத் சுரிசங் கின்றிருக் குவளை
தென்றல் முகந்து பாலூட்டி
செழுந்தாமரைநெட்டி தாழ்விரித்துச்
சேர்த்துத் துயின்றித் தாலாட்டப்.

பெண்மைக் குருகுக் கொருசேவற்
பெரிய குருகு தன்வாயிற்
பெய்யும் இரையைக் கூரலகு
பிளந்து பெட்டுக் கினிதளிக்கும்

வண்மைப் புதுமை திருச்செந்தூர்
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 5

(தெ-ரை) வெண்ணிற சிறகுகளை உடைய அன்னப்பறவைகள் மணம் மிகுந்த தாழை மலரில் அக இதழ் ஒன்றை எடுத்து விருப்பம் தரத்தக்க குழந்தை என நினைத்து, மடியில் வைத்துப் பாராட்டி, உறுதியாக உள்ள வரிகள் அமைந்த சங்கில், குவளை மலரின் தேனை எடுத்துப் பாலாக ஊட்டிச் செழித்து வளர்ந்த தாமரை மலரில் இதழ் ஒன்றைப் பாயாக விரித்து, அப்படுக்கையில் கிடத்தித் தூங்க வைத்துத் தாலாட்டாவும். பெண் நாரைக்குப் பெரிய ஆண் நாரை

ஒன்று தனக்குக் கிடைத்த இரையை அதன் கூர்மையான அலகைப் பிளந்து அன்போடு அளிக்கும் புதுமையான சிறப்பு மிக்கத் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும முருகப் பெருமானே, வருவாயாக. வளரும் தன்மை உடைய குரும்பை போன்ற முலையில் சந்தனம் அணிந்த வள்ளியின் கணவனே வருவாயாக.

**ஓடைக் குளிர்தண்டுள் பனியால்**
**உடைந்து திரையில் தவழ்ந்தேறி**
**ஒளிரும் புளினத் திடையொதுங்கி**
**உறங்குங் கமடம் தனைக்கடைந்து**

**கோடை குளிர் காத்தடிக்க உடல்**
**ஒடுங்கி நடுங்கி உளகழிந்துக்**
**குடக்கூன் பணிலத் துட்புகுந்து**
**குஞ்சுக் கிரங்கி இரைகொடுக்குப்**

**பெடைக் குருகுதன் சேவற்**
**பெரிய குருகின் சிறைப்புறத்திற்**
**பிள்ளைக் குருகு தனையணைத்துப்**
**பிரச மடற்கே தகைப்பொதும்பின்**

**வாடைக் கொதுங்குள் திருச்செந்தூர்**
**வடிவேல் முருகா வருகவே**
**வளருங் களபக் குரும்பை முலை**
**வள்ளி கணவா வருகவே. 6**

(தெ-ரை) காற்றால் ஓடையிலிருந்து எழுந்து வீசுகின்ற குளிர்ச்சிப் பொருந்திய தண்ணீர் துளியாகிய பனியினால் வருத்தம் கொண்டு, அலைகளில் தவழ்ந்து சென்று கரையில் ஏறி மணல் மேட்டில் ஒதுங்கி உறங்கிக் கொண்டிருக்கும் ஆமையைக் கடந்து, குளிர்ச்சி மிக்க கோடைக் குளிர்காற்று வீச அதனால் நடுக்கம் கொண்டு; உயிரற்ற சங்குக் கூட்டினுள் புகுந்து கொண்டு தன்னுடைய குஞ்சின் துன்பத்துக்காக இரங்கி, உணவு கொடுக்கும் பெண் நாரைக்கு உதவிய பெரிய

ஆண் நாரை, தன் மென்மையான சிறகின் புறம் குஞ்சை அணைத்துக் கொள்ளும் தேன் நிறைந்த மடல்களை உடைய தாழை மலர்ச்சோலையில், வாடைக் காற்றக்கு அச்சம் கொாணடு ஒதுங்குகின்றவனே. திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகக் கடவுளே, வளர்கின்ற குரும்பை போன்ற முலையில் சந்தனக் கலவை பூசியிருக்கும் வள்ளியின கணவனே, வருவாயாக.

எள்ளத் தனைவர் துறுபசிக்கும்
இரங்கிப் பரந்து
எக்கிக் குழைந்து மணித்துவர்வாய
இதழைக் குவித்து விரித்தழுது

துள்ளித் துடிக்கப் புடையெடுத்துத்
தொட்டில் உதைத்து பெருவிரலைச்
சுவைத்துக் கடைவாய் நீரொழுகத்
தோளின் மகரக் குழைபிரள

மெள்ளத் தவழ்ந்து குறுமுரல்
விளைந்து மடியின் மீதிருந்து
விம்மப் பொருமிமுகம் பார்த்து
மூண்டு உமையாள் களபமுலை

வள்ளத் தமுதுண் டகமகிழ்ந்த
மழலே வருக வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 7

(தெ-ரை) எள்ளளவு வந்து துயரம் கொடுக்கும் பசிக்கு வருத்தம் கொண்டு, வாடி சிறிய வயிற்றை உட்புறமாகச் சுருட்டிக்கொண்டு, சோர்வுற்று, சிவந்த அழகான வாயின் இதழைக் குவித்தும், விரித்தும், அழுதும் துள்ளியும், துடித்தும், பக்கத்தில் அசைந்து பருத்திருக்கின்ற தொட்டிலைக் காலால் உதைத்துக்கொண்டு, கால் பெரு விரலை வாயில் வைத்துச் சுவைத்துக் கொண்டு உன் கடை வாயில் இருந்து உமிழ்நீர் வழிந்து கொண்டிருக்கவும். தோள்களில் மகர குண்டலம்

கிடந்து அசையவும் மெல்லத் தவழ்ந்து வந்து சிறிய பற்களைக் காட்டிச் சிரித்து மடியில் அமர்ந்து விம்மலுடனும், பொருமலுடனும் தாயின் முகம் பார்த்து வேண்டுகின்ற உமையம்மையின் சாந்து அணிந்த முலையில் இருந்து சுரக்கும் பாலை உண்டு, மனமகிழ்ச்சி கொண்ட மழலை மொழி பேசும் குழந்தையே, வருவாயக குறும்பை போன்ற முலைகளில் சந்தனக் குழம்பணிந்த வள்ளியின் கணவனே, வருவாயாக.

பேரா திருக்கும் அடியவற்கு
பிறப்பை ஒழித்துப் பெருவாழ்வும்
பேறுங் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமா னென்னும் பேராளா

சேரா திருதர் குலகாலா
சேவற் கொடியாய் திருச்செந்தூர்
தேவா தேவர் சிறைமீட்ட
செல்வா என்றுன் திருமுகத்தைப்

பாரா மகிழ்ந்து முல்லையார்
பரவிப் புகழ்ந்து விருப்புடனப்
பாவா வாவென் றுனைப் போற்றப்
பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்.

வாரா திருக்க வழக்குண்டோ
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 8

(தெ-ரை) உனக்கானத் திருப்பெயர்களை அன்புடன் கூறி வழிபடுகின்ற அடியவர்களின் பிறப்பினை ஒழித்து வாழ்கின்ற பிறவியில் பெரிய பேற்றையும், மறுமையில் சிவானுபவத்தையும், கொடுப்பதற்காக வருகின்ற பிள்ளைப் பெருமானே, பகைவர்களாகிய அசுரர்களின் குலத்தை அழிக்கும் பேராளனே; சேவல் கொடியை உடையவனே, திருச்செந்தூரில் கோயில் கொண்டிருப்பவனே, தேவர்களைச்

சிறையல் இருந்து மீட்டருளிய செல்வமானவனே, என்றெல்லாம் கூறி உன்னுடைய திருமுகத்தைப் பார்த்து மனமகிழ்ச்சியுடன் முலைப்பால் தருகின்ற தாய்மார்கள், வணங்கிப் போற்றிப் புகழ்ந்து அன்புடன் அப்பா, வருவாயாக. என்று கூறி உன்னைப் போற்றும் பொருட்டு உன்னை வருமாறு அழைத்தால் நீ வாராமல் இருப்பது நியாயமா, கூர்மையான வேலினை ஏந்தியிருப்பவனே, வளர்கின்ற குருமபை போன்ற முலையில் சந்தனம் பூசியிருக்கும் வள்ளியின் கணவனே வந்தருள்வாயாக.

**விண்டு மாவின் கனிதடத்தின்**
**மீதே வீழக் குருகினங்கள்**
**வெருவி இரியக் கயல்வெகுண்டு**
**வெடிபோய் மீள மண்டூகம்**

**கண்டு பாய வரிவாளை**
**கழிக்கே பாயக் கழிக்கானற்**
**கம்புள் வெகுண்டு துண்ணெனக்கட்**
**கடைதாள் விழித்துத் தன்பார்ப்பைக்**

**கொண்டு பாயக் கருவாழைக்**
**குலையே சாய்க்கும் கனியின்**
**குறுங்காற் பலவு வேர்சாய்ந்த**
**குழிக்கேக் கோடி வரி**

**வண்டு பாயும் திருச்செந்தூர்**
**வடிவேல் முருகா வருகவே**
**வளருங் களபக் குரும்பைமுலை**
**வள்ளி கணவா வருகவே. 9**

(தெ-ரை) மரத்திலிருந்து காம்பற்று மாங்கனி ஒன்று தடாகத்தில் விழுந்ததால் அதனைக் கண்ட நீர் நிலையின் அருகில் இருந்த பறவைகள் அச்சம் கொண்டு ஓடவும், கெண்டை மீன்கள கோபம் கொண்டு பாயந்தோடவும், அதனைக் கண்டு தவளை பாய்வும்; கடற்கரைச் சோலையில்

(தெ-ரை) நீண்ட அழகான கிரீடங்களில் படிந்திருக்கும் புழுதி கீழே சிந்துமாறு வருவாயாக, நடக்கிறபோது இடையில் கட்டியிருக்கின்ற மணிகள் அரஅர என்று ஒலி எழுப்புமாறு வந்தருள்வாயாக. ஏவல் பணிசெய்யும் பெண்கள் போற்றி புகழ வந்தருள்வாயாக.

பல்வேறு முனிவர்களும் உன்னுடைய திருவடிகளைப் புகழ்ந்தேத்த வந்தருள்வாயாக. மயில் வாகனத்தின் முதுகிலும், சிங்காசனத்திலும் வீற்றிருக்கும் முருகப்பெருமானே வந்தருள்வாயாக. சடைமுடியில் பிறைச் சந்திரனைக் கொண்டிருக்கும் சிவபெருமானின் உடலில் இடப்பாகத்தில் வீற்றிருக்கும் பார்வதிதேவி பெற்ற இளமை பொருந்திய களிறே, வந்தருள்வாயாக.

அழகு பொருந்திய இதழ்களிலிருந்து ஒழுகுகின்ற அமுதம் கலந்த மழலை மொழி பேசுகின்ற இளமை பொருந்தியகன்றே வந்தருள்வாயாக. சங்குகள் ஈன்ற முத்துக்களை அலைகள் கரையில் வீசுகின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் உயர்வு பொருந்திய தெய்வமே, வந்தருள்வாயாக.

வருகைப் பருவம் முற்றும்.

## அம்புலிப் பருவம்

கலையால் நிரம்பாத கலை உனக்குண்டு நிறை
கலையுண் டிவன் தனக்குக்
களங்கமரு குறமான் உனக்குண்டு குறமான்
கருத்துண் டிவன் தனக்குத்

தொலையாத கணமுன் டுனக்குமங் கலகணத்
தொகையுண் டிவன் தனக்குத்
துளியமுத முண்டுனக் கிவனுக்கு மாறாத
சொல்லமுதம் உண்டு னக்குத்

கொலையா டராவழிப் பகையுண்டு கருவிடங்
கொப்பளிக் குங்கட் செவிக்
கொளரா வைக்கொத்தி யெறியுமே காரமிக்
குமரனுக் குண்டு கண்டாய

அலையாழி சூழ்திருச் செந்தில்வடி வேலவா
அம்புலீ ஆடவாவே
அரவின்முடி நெளியமயில் முதுகில்வரு குமரனுடன்
அம்புலீ யாடவாவே. 1

(தெ-ரை) கலையால் முழுமையடையாத கலை உனக்கு உண்டு. முருகப்பெருமானுக்கு நிறைந்த கல்வி அறிவு உண்டு. உனக்குக் களங்கமாக உன்னிடம் வாழ்கின்ற முயலகன் என்னும் மான் உண்டு. முருகப்பெருமானுக்கோ குறவர் குலப் பெண்ணாகிய வள்ளியின் மனத்தில் அன்பு உண்டு. என்றும் உன்னைவிட்டு பிரிந்திடாத நட்சத்திரக் கூட்டங்கள் உனக்கு உண்டு. முருகப்பெருமானுக்கோ சிவ கணங்களின் கூட்டம் உண்டு.

சிறிதளவு மட்டும் அமுதம் உன்னிடம் உள்ளது. முருகனிடமோ என்றும் குறையாத சொல்லமுதம் உண்டு. உனக்கு கொலைத் தொழில் புரியும் இராகு, கேதுகளின் பகை உண்டு. கடுமையான விடத்தை உமிழும் தன்மை கொண்ட கண்ணே காதாக உடையதுமாகிய கொடிய பாம்புகளைக் கொத்தித் துண்டாக்கும் மயில் வாகனம் எம் முருகப்பெருமானுக்கு உண்டு.

அதனால் அலைகள் நிறைந்து விளங்கும் கடலால் சூழப்பட்ட திருச்செந்தூர்த் தலத்தில் கோயில் கொண்டருளும் கூர்மையான வேலாயுதத்தைக் கொண்டிருக் கின்ற முருகப்பெருமானுடன் நிலவே நீ விளையாட வருவாயாக. ஆதிசேடனின் தலை நெரியுமாறு மயில் வாகனத்தில் அமர்ந்து நிலவுலகை வலம் வரும் முருகப் பெருமானுடன் நிலவே நீ விளையாட வருவாயாக.

பாய்ந்து இறந்து வீடுபேறு பெற்று விருப்பமொடு வாழ்ந்திருக்கும் பெரிய வெளி ஆகையினால் ஒளிமிக்க பதினாறு கலைகளை உடைய உன் உடலில் குறைபாடு உண்டாகாதோ; அதனால் அலைகள் ஒலி எழுப்பும் சுறா மீன்கள் நிறைந்த கடல் சூழ்ந்த திருச்செந்தூர் தலத்தில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானுடன் நிலவே, நீ விளையாட வருவாயாக ஆதிசேடனின் முடி நெரியுமாறு மயிலின் முதுகில் ஏறிவரும் முருகப்பெருமானுடன் நிலவே நீ விளையாட வருவாயாக.

வெறியார் இலைத்தொடைத் தக்கனழல் வேள்வியை
வெகுண்டுபகல் பல்லுகுரத்து
விழியைக் கலக்கி வேள்வியை சாய்த்தப் பாகன்
வேறுருக் கொடுபறக்கச்

செறியா டகத்தகட் டிதழ்முளரி நான்முகன்
சென்னியைத் திருகிவாணி
செய்யதுண் டம்துண்டம் ஆக்கியத் தக்கன்
சிரத்தையொரு வழிப்படுத்திப்

பொறியார் அழற்கடவுள் கைத்தலம் அறுத்துவிண்
புலவர்முப் பத்துமூவர்
போனவழி ஒருவர்போ காமலுன் னுடலையும்
புழுதியில் தேய்த்த தெல்லாம்

அறியாத தல்லநீ செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அரவின்முடி நெளியமயில் முதுகில்வரு குமரனுடன்
அம்புலீ ஆடாவாவே. 4

(தொ-ரை) மணமிகுந்த இலைகளைக் கொண்டு கட்டப்பட்ட மாலைகளை அணிந்த தக்கன் தொடங்கிய, அக்கினி முகமாக நிகழும் யாகத்தைக கோபம் கொண்டு, சூரியனின் பற்களை உடைத்தும், சுக்கிரனின் கண்களுள் ஒன்றைக் கெடுத்தும், அயிராவத யானையில் ஏறிவரும்

இந்திரன் குயிலாக வேற்று உருவம் கொண்டு பறந்து செல்லவும், பொன் தகடு போன்ற அக இதழ்களை உடைய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம்மனின் தலைகளுள் ஒன்றைத் திருகி, சரசுவதியின் செம்மை நிறமான மூக்கினை அறுத்தெறிந்தும், வேள்வி தொடங்கிய தக்கனின் முடியை முன்பு இருந்தது போலல்லாமல் ஆட்டின் தலையாக மாறச் செய்தும், தீக்கடவுளின் கைகளை அறுத்தும், வானுலகத் தேவர்கள் முப்பத்து மூவரும் ஒருவர் சென்ற வழியில் மற்றவர் செல்லாமல் ஓடி ஒளியவும், சந்திரனே உன்னைப் புழுதியில் வைத்துத் தேய்த்ததை நீ அறியவில்லையா; நீ அறியாதவை அல்ல, நீ அதனால் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானுடன் விளையாட வருவாயாக. ஆதிசேடனின் முடி நெரியுமாறு மயில் வாகனத்தில் ஏறிவரும் முருகப்பெருமானுடன் விளையாடுவதற்காக நிலவே நீ வருவாயாக.

விடமுழுது துளைமுள் எயிற்றுவன் கட்செவி
விரிக்கும் பணாட வியறா
மென்பொறி உடற்பெரும் பகுவாய் அராவடிவை
வெம்பொறி எடுத்துரு வெம்பிக்

குடதிசைக் கொடையைப் பருகிக் குணக்கெழுங்
கொண்டலை அருநதி வாடைக்
கொழுந்தையுந் தென்றலையும் அள்ளிக் குடித்துக்
கொழுங்கதிரை உணடதினியுன்

இடமொழிய வேறோர் இலக்கில்லை நீயதற்
கெதிர்நிற்க வல்லையல்லை
இவனுடன் கூடிவிளை யாடிநீ யிங்கே
இருக்கலாம் இங்குவந்தால்

அடல்புனையு மயிலுண் டுனக்குதவி ஆகையால்
அம்புலீ ஆடவாவே
யருவரைகள் கிடுகிடென மயில்க் கடவுள் முருகனுடன்
அம்புலீ ஆடவாவே, 5

(தெ-ரை) விடமானது ஒழுகும் துளையை உடைய முள்போன்ற பற்களையும், கண்களையே காதுகளாகக் கொண்டதும், மிகுதியான படங்களையும், எண்ணற்ற சிறிய புள்ளிகளையுமுடைய, பெரிய வாயினையுடைய பாம்பு தன் உருவத்தைப் பசி எடுத்ததன் காரணமாக மேற்குத் திசையில் தோன்றும் கோடைக்காற்றையும், கிழக்குத் திசையில் தோன்றும் வாடைக்காற்றையும், தென்திசையில் இருந்து எழுந்து வருகின்ற தென்றல் காற்றையும் குடித்துவிட்டு, ஒளிக்கிரணங்களை உடைய சூரியனையும் உண்டுவிட்டது.

இனி உன் இடம் அன்றி அதற்கு வேறு இடமில்லை. அதனை நீ எதிர்க்க இயலாது. இங்கு நீ வந்தால் முருகனோடு விளையாடலாம், நலமாக இருக்கலாம்.

வலிமையும், வெற்றியும் உடைய மயில் உனக்கத் துணையாக இருக்கும். அதனால் நிலவே நீ முருகப் பெருமானுடன் விளையாட வருவாயாக ஆதிசேடனின் முடி நெரியுமாறு மயில் வாகனத்தில் ஏறிவரும் முருகப் பெருமானுடன் நிலவே நீ விளையாட வருவாயாக.

பண்டுபோல் இன்னமுதம் இன்னங் கடைந்திடப்
பழையமந் தரமில்லையோ
படர்கட் குண்டாழி அளறாக வற்றியிப்
பாரினில் திடரானதோ

விண்டலத் தமரர்களும் அமரோ னுஞ்சேர
வடநீ டந்தகரா
மேவியெழு பகிரண்ட கூடம்வெளி யானதோ
விடமொழுகு நெட்டெயிற்று

மண்டும லர்சுகி துண்ட மானதோ இன்னமொரு
வாலிக்கு வாலில்லையோ
மதியிலா மதியமே இவன்நினைந் தாலெந்த
வகைசெலா தாகையானீ

அண்டர்நா யகனெங்கள் செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அரவின் முடிநெளிய மயில்முதுகில் வருமுருகனுடன்
அம்புலீ ஆடவாவே. 6

(தெ-ரை) பண்டையநாள் நடந்ததைப் போன்று இனிமையுடைய அமுதத்தை மீண்டும் ஒருமுறை கடைவதற்குப் பழமை பொருந்திய மந்திர மலை இல்லையோ? அகன்ற கடல் வற்றி இவ்வுலகு மேடாகி போனதோ? தேவருலகில் உள்ளள தேவர்களும், தேவர்களின் தலைவனாகிய இந்திரனும் ஒன்றாக இறந்து மிகுதியான இருள்தோன்றி ஏழு உலகங்களும் ஒன்றுமில்லாமல் போயினவோ, விடம் கொண்ட நீண்ட பற்கள் உடைய வாசுகி என்னும் பாம்பு துண்டாகிவிட்டதோ, இன்னுமொருமுறை வாலிக்கு வால் இல்லாமல் போய்விட்டதோ, அறிவற்ற நிலவே முருகன் நினைத்தால் எதுவும் நடக்காது அதனால் நீ திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானுடன் விளையாட வருவாயாக, பெரிய மலைகள் நடுக்கம் கொள்ளுமாறு மயில் வாகனத்தில் வரும் முருகப்பெருமானுடன் நிலவே நீ விளையாட வருவாயாக.

புட்டக ரமத்துவெளி வடிவுகொள லாமென்று
மானைத் தரித்திடுகையால்
மந்தா கினிதாங் கத்துவளம் எயதலால்
மன்னுங் கிணஞ் சூடிதலா

இட்டமொடு பேரிரவில் வீனுபேசுதலால் உலகில்
எவருந் துதித்திடுதலால்
இரவின்கண் ணுறுதலால் இடபத்தி லேறாலால்
ஏமமால் வரை யெய்தலால்

முட்டமற வேள்வி குறித்தாகையால் வெய்ய
முரியர வுக்குடைதலால்
முக்கணா உமைபாகர் னோக்குதி யென்றுதிரு
முகமலர் வரவழைந்தால்

அட்டபோ கம்பெறுவை செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்கடவுள் முருகனுடன்
அம்புலீ ஆடவாவே. 7

(தெ-ரை) வானில் வெண்மை நிறவடிவம் கொண்டு விளங்குவதனால் தன் உருவில் களங்கமாகிய மான் உருவைக் கொண்டிருப்பதானால், வான வீதியில் ஓடுகின்ற கங்கையின் அலைகளின் வளம் மிகுதியாக இருப்பதனால், விருப்பமுடன் இரவு வேளையில் பெருமைபெற்று விளங்குவதானல், உலக மக்கள் வேத மந்திரங்களால் வணங்குவதனால்; அமாவாசைக் காலத்தில் சூரியனிடம் நெருங்கிச் செல்கின்ற காரணத்தால் இடப நாளில் தோன்றுவதனால் உலகின் நடுவில் இருக்கின்ற பொன் மலையைச் சூழ்ந்து வருவதனால், யாகங்களில் அழைக்கப்படும் உரிமை பெற்றிருப்பதால், இராகு கேதுக்களிடம் தோற்று ஓடுவதால் நீ மூன்று கண்களை உடைய சிவபெருமானுக்கு நிகராவாய் என்று உன்னை முகம் மலர விளையாட அழைத்தான்.

நீ சென்றால் எட்டுவகைச் செல்வங்களையும் பெறுவாய், அதனால் முருகப்பெருமானுடன் நீ விளையாட வருவாயாக, மலைகள் நடுக்கம் கொள்ளுமாறு மயில் வாகனத்தில் வரும் முருகப்பெருமானுடன் நிலவே நீ விளையாட வருவாயாக.

பரியநிழல் தன்னைக் குழித்தெழிலி யொடுபொருது
பாதசங் கிலிவைநூறிப்
பாரிசா த்தக்கருவை இடுகுடி கெனக்கடவுட்
பகுவாய் புக்கரு தட்டித்

தரியலாந் தகப்புறத் தேயிலிடு கபாடந்
தனைத்தூள் படுத்தியவர்பொன்
தருணமணி முடியிட முறைமுறை அழைக்குந்
தழைச்செவிப் பிறைமருப்புச்

**சொரியுமத் தாரைக் குறுங்கட் பேருங்குலைத்**
**துடியடிப் புகரொத்தல்**
**துங்கவேள் இவனுடைய மன்றிற் புறத்தில்**
**துளைக்கர நிமிர்ந்து நிற்கும்**

**அரியகரு நாகமென வெருகொளிவனுடன்**
**அம்புலீ ஆடவாவே**
**அருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுடன்**
**அம்புலீ ஆடவாவே. 8**

**(தெ-ரை)** தன்னுடைய பெரிய நிழலைக் கண்டு கோபம் கொண்டு வெயிலுடன் போராடித் தன்னுடைய கால் சங்கிலியை அறுத்து எறிந்து பாரிசாத மரத்தைத் தனக்கு இட்ட உணவு என்று நினைத்து பிளந்த வாயில் புகுமாறு கடித்து, பகைவர்களாகிய அவுணர்களின் நகருக்கு வெளியில் அரணின் முன்புறம் இருக்கின்ற கதவை உடைத்துத் தூளாக்கி, அவர்களின் மணிமுடிகளைக் கால்களால் உதைத்துப் பலரையும் போருக்கு அழைக்கின்ற அகலமான காதுகளும் பிறைபோல் வளைந்திருக்கின்ற தந்தமும் பொழிகின்ற மத நீரும் சிறிய கண்களும்; கொலைத் தொழிலும், உடுக்கை போன்ற கால்களையும், முகத்தில் புள்ளிகளையும் உடைய யானை பெருமை மிக்க அழகனாகிய முருகப்பெருமானின் வாயிலில் தன் துளை உடைய தும்பிக்கையைத் தூக்கி வணங்கி நிற்கும்; அதனைக் கண்டு கருமை நிறமான பாம்போ என்று அச்சம் கொள்ளாதே, முருகப்பெருமானுடன் நிலவே நீ விளையாட வருவாயாக. மலைகள் நடுக்கம் கொள்ளுமாறு மயில் மீது ஏறிவரும் முருகப்பெருமானுடன் நிலவே நீ விளையாட வருவாயாக.

காதலால் எறிதிரைக் கடல்மகளிர் சிறுமகரக்
கரையிற் குவித்தமுத்தும்
கழிவாய் வலம்புரி யுமிழ்ந்தமணி முத்துமுட்
கண்டல்மடல் விண்டகண்ணத்

**தாதலர இளவாடை கொடுவருங் காவினில்வெண்**
**சங்குநொந் தீற்றுழைந்து**
**தனியே உகிந்தபரு முத்தமுந் தனிலே**
**சதகோடி நிலவெறிக்கும்**

**ஈதலா லொருசிறிதும் இரவில்லை எவருக்கும்**
**இரவில்லை நீயும் இங்கே**
**ஏகினா லுனதுடன் கறைதுடைத் திடுதலாம்**
**என்பதற் கையமில்லை.**

**ஆதலால் நீதிபுணை செந்தில்வடி வேலனுடன்**
**அம்புலீ ஆடவாவே**
**அருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுடன்**
**அம்புலீ ஆடவாவே. 9**

(தெ-ரை) அலைகள் வீசுகின்ற கடல் துறையில் வாழும் நுளைச்சியர்களின் சிறு குழந்தைகள் கடற்கரையில் குவிதது வைத்த முத்துக்களும், கழிவாயில் வலம்புரிச் சங்குகள் ஈன்ற முத்துக்களும், முள் நிறைந்த தாழை மடல்களில் மலர்ந்து சிந்திய மணம் மிக்க மகரந்தத் துகள்களும் கலக்க,

இளமை பொருந்திய வாடைக்காற்று கொண்டு வருகின்ற கடற்கரை நிலப்பகுதிகளில் உள்ள வெண்மை நிறமான சங்குகள் கருக்கொண்டிருப்பதால் துன்புற்றுத் தனியே ஈன்று சென்ற முத்துக்களும் முருகப்பெருமானிடம் நூறு கோடிச் சந்திரனுடைய ஒளியைக் கொடுக்கும்.

அவன் வேண்டியவர்களுக்கு வேண்டியதை வழங்கும் குணமுடையவன், இங்கு சிறிதுகூட இரந்து நிற்றல் இல்லை, யாருக்கும் இங்கு இரவும் இல்லை, நீ கூட இங்கு வந்தால் உன் உடலில் உள்ள இருளாகிய களக்கத்தைத் துடைக்கலாம். இதில் சந்தேகமே இல்லை. ஆதலால் நீ திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானுடன் விளையாட வருவாயாக, மலைகள் நடுக்கம் கொள்ளுமாறு மயில் மீது ஏறிவரும் முருகப்பெருமானுடன் நிலவே, நீ விளையாட வருவாயாக.

நெடியவழி எறியுங் தழைச் சிறைக் கூருகிற
கருடவா கனனும்இகல்கூர்
கட்டைமுள் அரைஞாண் நெட்டிலை யுடுத்துப்பொற்
கமலையோ ளியுமெழுந்து

கொடியபெருங் குலைபுரி வராகமென ஒருவனெழு
குவலயம் இடந்துதேடக்
குறித்தொருவன் எகினமாய் அண்டபனி ரண்டமுங்
கொழுதிக் குடைந்துதேட

முடியஇது காணுமவர் அறிவுறா வகைநின்ற
முழுமுதற் கடவுள் அடியும்
முடியுநீ கண்டனை எனக்கருதி இன்றுதிரு
முகமலர்ந் துணை அழைத்தனன்

அடியவரை வாழ்வித்த செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே. 10

(தெ-ரை) நெடிய வழியில் செல்லும் பெரிய சிறகுகளையும், கூர்மையான நகங்களையும் கொண்ட கருடனை வாகனமாக கொண்ட திருமாலும், வலிமையான முட்களை அரையில் கொண்ட நாளத்தில் மலர்ந்திருக்கும் நீண்ட இதழ்களைக் கொண்ட தாமரையில் பிறந்த பிரம்மனும், தம் இடத்திலிருந்து புறப்பட்டதும், திருமால் கொடியவராக அவதாரம் எடுத்துத் தன் கொம்பினால் ஏழு உலகங்களையும் பிளந்து தேடவும்; பிரம்மதேவன் மனத்தில் நினைத்து அன்னப் பறவையாய் மாறி உள் அண்டங்களையும் வெளி அண்டங்களையும் துழழ்ந்து கொண்டே தேடவும். இதுநாள் வரை இருவருமே அறிய இயலாமல் ஒளிமயமாய் விளங்கும் சிவபெருமானின் அடியையும், முடியையும் நீ கண்டிருக்கிறாய் என்று நினைத்து மலர்ந்த முகத்துடன் விளையாட அழைத்தான்.

தன்னை அடைந்த அடியார்களுக்கு வீடுபேறு அருளிய திருச்செந்தூர் முருகப்பெருமானுடன் நிலவே நீ விளையாட வருவாயாக. மலைகள் நடுக்கம் கொள்ளுமாறு மயில் மீது ஏறிவரும் முருகப்பெருமானுடன் நிலவே நீ விளையாட வருவாயாக.

**பெரியமா கத்துளே வருவைநீ வஞ்சக்கண்டு**
**பசுமா கத்துள் வாரான்**
**பெருகநீ வேலையிற் புகுவாய் இவன்பார்**
**பிளக்கவோ வேலைவிட்டான்**

**உரியமா குணவரையில் உறுவைநீ இவன்**
**அன்புற்ற குணவரையுநான்**
**உடலிலே மறுவுனக்குண் டிவன்தனக்**
**கொருமறுவும் இல்லைமீளக்**

**கரியமா முகிலிலே மறையுவைநீ இவன்நெடுங்**
**கரியமா முகிலின் மறையான்**
**கருதிநீ இவையெலாம் உணரிவன் பெருமையைக்**
**கண்டுநீ அங்கிராதே**

**அரியமா நாயகன் எங்கள் செந்தில்வடி வேலனுடன்**
**அம்புலீ ஆடவாவே**
**அரவின் முடிநெளிய மயில் முதுகில்வரு முருகனுடன்**
**அம்புலீ ஆடவாவே. *11***

(தெ-ரை) பெரிய வானில் வலம்வருவாய் நீ. முருகப் பெருமானோ வஞ்சகம் கொண்டு பேசுபவர்களின் மனத்திறகுள் வரமாட்டான் நீ கடலில் குளிப்பாய் . இவன் நிலவுலகம் பிளக்குமாறும் கடல் வற்றுமாறும் அம்பு எய்தான். உனக்குரிய கிழக்கு மலையில் குதித்தெழுவாய் நீ. இவன் அன்பற்ற குணம் உடையவர்களை நெருங்கமாட்டான்.

உனக்கு உடலில் முயல் கறையாகிய மறு இருக்கிறது. இவனுக்கோ எவ்வகையான கறையும் இல்லை. மீண்டும் தோன்றுமாறு நீ கரிய மேகத்தில் மறைவாய். இவன் பெரிய மேகங்களால் தோல்வியடைவது இல்லை.

இவற்றை எல்லாம் நீ ஆராய்ந்தறிய வேண்டும். இவனுடைய பெருமைகளை உணர்ந்து வானுலகில் இராமல் அரிய தவமுடைய முருகப்பெருமானுடன் விளையாட வரவேண்டும். மலைகள் நடுக்கம் கொள்ளுமாறு மயில் வாகனத்தில் ஏறிவரும் திருச்செந்தூர் முருகப்பெருமானுடன் நிலவே நீ விளையாட வருாவயாக.

அம்புலிப் பருவம் முற்றும்.

## சிறுபறை

பொருவாகை சூடுமர வக்கொடிக் குருகுலப்
பூபாலர் ஏறும் அந்தப்
பூபால னுக்கிளைய துணைவர்நூற் றுவரும்
பொருபதினெட் டக்குரோணி

ஒருவாய்மை சொற்படை வீரரும் செருவினில்
உருத்தெழலும் நீதியைவர்
உடனாக நின்றபற் குணன்மணித் தேரினுக்
குள்ளசா ரதியாகியம்

மருவார் கடாறுணையிற் பட்டவர்த் தானமகுடவர்
தனாடங்கலும் போய்
மயங்கவொரு நாள்விசைய னுக்குவிசை யம்பெருக
மண்ணேழும் உண்டுமிழ்ந்த

திருவாய் வலம்புரி முடிக்குதிரு மால்மருக
சிறுபறை முழக்கியருளே
செருவில்எதிர் பொருதபர நிருதாகுலகனே
சிறுபறை முழக்கியருளே. 1

*(தெ-ரை)* போரின் பொருட்டாகச் சூடப்படும் வாகை மாலையை அணிந்தவனும் பாம்பு உருவம் வரைந்த கொடியை ஏந்திய குருவமிசத்து அரசர் தலைவனாகிய துரியோதனனும் அவனுடைய சகோதரர்கள் நூறு பேர்களும் போர் செய்வதற்காக வந்த பதினெட்டு அக்குரோணி அளவுடைய படை வீரர்களும் போரில் எதிர்த்து வரவும்.

நீதியைக் கைக் கொண்டிருந்த பாண்டவர்களின் அருகில் நின்று அருச்சுனனின் அழகான தேருக்கு ஏற்ற தேரோட்டியாகிய அந்தப் பகைவர்களின் படையில் பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர் மற்றும் பிறர் அடங்கிய எல்லாப் படை வீரர்களும் மயக்கம் கொள்ளுமாறு அருச்சுனனுக்கு ஒருநாள் வெற்றி பெருகுமாறு ஏழு உலகங்களையும் ஊழிக்காலத்தில் உண்டு உமிழ்ந்த வாயினால் வலம்புரிச் சங்கை ஒலித்த திருமாலின் மருமகனே, சிறுபறையை முழங்கியருள்வாயாக. போர்க்களத்தில் எதிர்த்த அசுரர்களை அழித்த வீரனே, சிறுபறையை முழக்கியருள்வாயாக.

முருந்தாரு மணிமுறுவல் நெய்தல்நில மகளிரின்
முகிண்முலை தனக்குடைந்து
முளரிமுகை நீரிற் குளித்துநின் றொருதாளில்
முற்றிய தவம் புரியரவங்

கருந்தாரை நெட்டிலைப் புகர்வே லெனப்பொருங்
கட்கடைக் குள்ளுடைந்து
காவிமலர் பங்கப் படக்கருங் குழல்கண்டு
கரியமுகில் உடல்வெளுத்துப்

பொருந்தாமப் பொடிவேந்தர் சாகியாய் பொருபொருப்
பேற்வளமை யெறும்
புகழேற வாழுந் திருச்செந்தில் வேலனின்
பொற்றாள் வணக்கமுற்றுந்

திருந்தார்கள் நெஞ்சப் பெருபறை முழக்கியருளே
நீசிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர் நிருதர்குலகலனே
சிறுபறை முழக்கியருளே. 2

(தெ-ரை) மயிலிறகினது அடிக்குருத்துப் போன்ற அழகான பற்களை உடைய நெய்தல் நிலத்தில் வாழும் பெண்களின் முகிழ் போன்ற முலைகளுக்குத் தோற்றுத்

தாமரை மொட்டு தண்ணீரில் குளித்து ஒரு காலில் நின்று தவம்புரிய, விரும்பத்தக்கதான கருமை நிறமும், கூர்மையும் உடைய நீண்ட இலை வடிவமாக இருக்கின்ற உயர்ந்த வேல் போலப் பிறழ்கின்ற அப்பெண்களின் கடைக்கண்களுக்குத் தோற்று குவளை மலர் சிறுமையடைய, இப்பெண்களின் கருமை நிறமான கூந்தலைக் கண்டு கரிய மேகங்கள் உடல் வெளுத்து ஓர் இடத்தில் நில்லாமல் அலைந்து வான் வழிச்சென்று ஒரு மலையில் தங்கியிருக்க, செல்வம் மிகுவதால் வரும் புகழை மிகவும் பெற்றிருக்கின்ற திருச்செந்தூர்த் தலத்தில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே. உன்னுடைய அழகான திருவடிகளை வணங்கி பகைவர்கள் மனமானது அச்சம் கொண்டு நடுங்குவதனால் பெரும் பறையை முழங்காமல் நீ சிறுபறையை முழங்கியருள்வாயாக. போர்க்களத்தில் எதிர்த்த அசுரர்களை அழித்த வீரனே, சிறுபறையை முழக்கியருள்வாயாக.

காவான பாரிசா தத்தருக் குலநிழ
கடவுள் தெரு வீதிதோறும்
கடிமண் பதிய மங்கலந் தொனிமுழங்க
முகைகட்ட விழ்திதமுடைக்கும்

பூவாரி லைத்தொடையழகர் புகரசன புரந்தொறுங்
குளிரும் முரசம்
போமென முடிக்கமன் மதனுடைய பலமெம்
பொங்குதெண் திரைமுழக்கப்

பாவாணர் மங்கலக் கவிபாடிப் பாடிப்
பரிந்துதி ண்டிமுழக்கப்
பரவரிய திருவிழா என்று பல பல்லியம்
பட்டினந் தொறுமுழக்கத்

தேவாரி தேவருயர் சதுமறை முழக்கநீ
சிறுபறை முழக்கியருளே
தெருவி லெதிர் பொருதபர் நிருதர்குல கலகனே
சிறபறை முழக்கியருளே. 3

**(தெ-ரை)** கற்பகச் சோலையில் வளர்ந்திருக்கின்ற பாரிசாத மரங்களின் நிழலில் வீற்றிருக்கும் இந்திரனின் அமராவதி நகர வீதிகள் தோறும் மணம் நடைபெறுவதற்குரிய மங்கள இசைக் கருவிகள் முழங்க, அரும்புகளை இதழ்விரித்து மலரும் நிலையில் இருக்கின்ற பூக்கள் நிறைந்த இலைகளால் கட்டப்பட்ட மாலையை அணிந்த அளகாபுரியின் மன்னனாகிய குபேரனின் நகரங்களில் ஒலி எழுப்புகின்ற முரசு, பொம் என்னும் ஒலியொடு விளங்கவும், மன்மதனின் முரச வாக்கியமாகிய பொங்கும் தெளிவான அலைகளை உடைய கடல் முழக்கம் செய்யப் புலவர்கள் மங்களமான பாக்களைப் பாடி, அன்புடன் உன்னுடைய வெற்றி குறித்துத் திண்டிமம் என்னும் சிறு முரசை முழங்கப் புகழ்ந்து கூறுவதற்கு அரிதான திருவிழா என்று பலவகை இசைக் கருவிக்ள் நகரங்கள் எங்கிலும் ஒலி எழுப்ப, தேவர்களின் தலைவனான இந்திரனும் பிறரும் உயர்வான நான்கு வேதங்களைக் கூறவும். நீ சிறுபறை முழங்கியருள்வாயாக. போர்க்களத்தில் எதிர்த்த அசுரர்களை வென்ற வீரனே, சிறுபறை முழக்கியருள்வாயாக.

**கங்கையிணி யுஞ்சடைமலைத்த குழ விப்பிறைக்**
**கடவுளா லயமனைத்துங்**
**கங்குலில் கருங்கடல் கழித்தவை கரையிற்**
**கலித்தவால் வளைமுழங்கப்**

பங்கய மலர்ப்பொருட் டிதழ்வாய் துளிக்குப்
பசுந் தென்றலுண்டுமெள்ளப்
பலகோடி சஞ்சரீ கப்படலை பெடையோடு
படித்துபல காலமுழங்க

வெங்கய முட்குந் துளைக்கா நிமிர்த்துவெளி
மேகநீ ரைக்குடித்து
வீதிவாய் நின்றுபிளி றித்தினமுழக்கும்வெறி
வெண்திரைக் குண்டகழியிற்

செங்கயல் முழங்குந் திருச்செந்தில் வேலனே
சிறுபறை முழங்கியருளே

செருவிலெதிர் பொருதமர் நிருதர்குல கலகன்
சிறுபறை முழக்கியருளே. 4

**(தெ-ரை)** கங்கை நதியை அணிந்திருக்கின்ற சடை முடியில் இளமையான பிறையைச் சூடியிருக்கின்ற சிவபெருமானின் திருக்கோயில்களில் எல்லாம் இருள் என்னும் கருமை நிறமான கடல் காலை வேளையில் கழித்த ஒலி மிகுந்த வெண்ணிறமான சங்குகள் முழங்கும். தாமரை மொட்டின் இதழில் துளிர்க்கின்ற பசுமையா தேனை உண்டு, மெதுவாகப் பலகோடி வண்டுக் கூட்டங்கள் தம் பெண் வண்டுகளோடு சேர்ந்து உறவாடிப் பன்முறை பாடல் இசைக்கும்.

கோபம் மிகுந்த யானைகள் வளைவான துவாரம் இருக்கின்ற தும்பிக்கையை நிமிர்த்தி, வானில் உலவும் மேகத்தில் உள்ள நீரைக் குடித்து, வீதியில் நின்று பிளிறிக் கொண்டு தினமும் முழக்கம் செய்யும் தன்மையது திருச்செந்தூர்.

நாற்றம் மிக்க வெண்ணிறமான அலைகளை உடைய ஆழமான கடலில், செம்மை நிறமான கயல் மீன்கள் ஓடுகின்ற வேகத்தால் ஒலி எழும் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே, சிறுபறையை முழங்கியருள்வாயாக. போர்க்களத்தில் எதிர்த்த அசுரர்களை வென்ற வீரனே சிறுபறையை முழக்கியருள்வாயாக.

வரைவாய் முழங்க வெங்கூன் மருப்பில்
விளைமுத்தமென வெய்யமணிமுத்து
மடுமாலை வனசுரத்திற் கருவார்ந்த
தினமுத்து மண்ட

உரைவாய் முழக்கம் பரலுந்தி தந்துமிழும்
மணிமுத்து மள்ளரொலி
யறா மருதவேலிச் சென்னல் கன்னல் தருமொளி
முத்துமோங்கும் நெய்தற்

கரைவாய் முடிக்குமுட் கூனல்வெண் பணிலம்
கடுஞ்சூல் உழைந்து கொண்ட
கதிர்முத்து மொக்கக் கொழித்து வருபொருநைபாய
கழிதோ நுங்கயல் குதிக்கத்

திரைவாய் முழக்கம் திருச்செந்தூர் வேலனே
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருள் பல நிருதர் குலகலகனே
சிறப்பறை முழக்கி யருளே. 5

(தெ-ரை) மலைப்பகுதியில் பிளிறுகின்ற மதயானைகளின் கொடுமைத்தன்மையும், வளைவும் உடைய கொம்பில் விளைந்த முத்தும், இளமை பொருந்திய மூங்கிலில் பிறந்த மணிமுத்தும், தன்னிடம் வந்தவர் களரி கொல்லும் தன்மை உடைய பாலை நிலத்தில் கரும்பன்றியின் கொம்பில் விளைந்த முத்தும், ஆரியர்கள் தமக்குரிய மொழியில் பேசி வாழ்கின்ற பெரிய காட்டில் தவழ்ந்து சென்று சங்குகள் ஈனுகின்ற அழகான முத்தும், உழவர்கள் வாழ்கின்ற ஒளி குறையாத மருத நிலத்தில் செம்மை நிறமான நெல்லும், கரும்பும் தருகின்ற ஒளிமிக்க முத்துக்களும், மணல் மேடுகள் உயர்ந்து காணப்படும் கடற்கரையில் ஒளி எழுப்பும் முள்ளும், வளைவு பொருந்திய வெண்மை நிறமான சங்குகள் கடுமையான துன்பத்தைக் கருத்தாக்கியதால் பெற்ற முத்துக்களும் என அனைத்தையும் தன்னில் கொண்டு வருகின்ற பொருநை ஆற்றுக்குத் தலைவனே.

உப்பங்கழிகளில் கயல் மீன்கள் குதித்தலால் அலைகள் மிகுதியான ஒலி எழுப்பும் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே சிறுபறை முழக்கியருள்வாயாக. போர்க்களத்தில் எதிர்த்த அசுரர்களை வென்ற வீரனே சிறுபறையை முழக்கியருள்வாயாக.

முனைவாளை வடிவேலை வடுவைவெங் கருவையிதழ்
முளரியைப் பிணையை நீரைவேள்
மோகவா ளியையடு சகோரத்தை வென்றுகுழை
முட்டிமீ ளுங்கண்மடவார்

நினைவாளை விம்முறுவ லாடியிள முலைபரவி
நேர்நேர் நிறுத்தி நெய்தல்
நீடுமென கவிவனத்திற் பிணித்திடுவர் நிலத்தில்
அவர் வடந்தெரிந்து

புனைவாளைநா ணமுடிவிளம்பி நடுவாளை
மென்போ திலுறை வாளையொப்புப்
பாளை தளைவாளை நாடிவிளை பொங்கிழி
கடந்து மெள்ளச்

சினைவாளை பாயுந் திருச்செந்தில் வேலனே
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே. 6

(தெ-ரை) கூர்மையான வாள் படையினையும், தீட்டப்பட்ட வேலையும், மா வடுவினையும், கடுமையான விடத்தையும், பல இதழ்களை உடையதாமரை மலரையும், பெண் மானையும், மன்மதனின் மோகத்தைத் தரும் நீலோத்பலம் என்னும் மலர் அம்பையும், பிரிந்தவர்களின் மனத்தைத் துன்பம் கொள்ளச் செய்யும் சக்கரவாளப் பறவையினையும்; அழகினால் வென்று காதணியில் மோதி மீளும் தன்மை உடைய கண்களை உடைய பெண்களுள் தன்னிடம் நினைவு கொண்ட ஒரு ஆண்மகனை, ஒளிமிக்க பற்களால் புன்னகை செய்து இளமையான முலைகளை நேராக நிறுத்திக் கொண்டு நெய்தல் மலர்களால் அலங்கரிக்கப்பட்ட கூந்தல் காட்டின் அழகால் தன்வயப்படுத்தி, வெண்மை நிறமான முத்து மாலைகளை இது சிறந்ததென்று ஆராய்ந்து எடுத்து அணிபவளை நல்ல

நாளில் நெல் நாற்றுகளை நடுகின்றவளாகிய உழத்தியை; மென்மையான தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமியை ஒத்து விளங்குகின்ற வயல்களில் நின்று களைகளைப் பறிக்கின்றவளை எதிர்பார்த்து உப்பு விளைகின்ற நீண்ட உப்பங்கழிகளைக் கடந்து மெல்ல கரு முதிர்ந்த வாளை மீன்கள் பாய்கின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே, சிறுபறை முழக்கி அருள்வாயாக. போர்க்களத்தில் அசுரரை வென்ற வீரனே சிறுபறை முழக்கியருள்வாயாக.

அறந்தரு புரந்தரா தியருலகில் மகளிர்
ஆடுமண யூசல்சிற்றில்
அம்மானை கழங்குபல செறியுந் தடஞ்சாரல்
அருவிபாய் பரகிரி

புரத்து வெள்ளைத் திரைதொறும் பொருத
சீரலை வாயுமென்
போதுகமழ் திருவாவி னன்குடியும் அரியமறை
புகலுமே ரகமுமினிமைக்

குறந்தரு கோட்டை முறைபாடல் பலவுங்
குன்றுதோ றாடலும்
கோணமு முழங்குமது கண்டின மெனக்கரட
குஞ்சரம் பிளிறுமரவம்

சிறந்தபழ முதிர்சோலை மலையும் புரந்தநீ
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே. 7

(தெ-ரை) தருமத்தால் பெறுகின்ற பேறாகிய இந்திரன் முதலான தேவர்கள் வாழ்கின்ற தேவலோகத்தில் இருக்கின்ற அரம்பை முதலானவர்கள் விளையாடுகின்ற நவ இரத்தினங்கள் பதித்த ஊஞ்சல்கள் பொன்னால் அமைக்கப் பெற்ற சிறிய வீடுகளில், அம்மானைக் காய்களும், கழற்காய்களும் பலவாக நிறைந்திருக்கின்றன.

பரந்த அலைகள் வந்து மோதி செல்லும் சாரலை உடைய திருப்பரங்குன்றம் என்னும் திருத்தலமும், முட்கள் அமைந்திருக்கின்ற முதுகினை உடைய வெண்மை நிறமான சங்குகள் கடல் அலைகளில் பாய்ந்து வருகின்ற திருச்செந்தூர் என்ற திருத்தலமும், மென்மையான மலர்கள் மனம் வீசுகின்ற திருவாவினன்குடி என்ற திருத்தலமும், அரிதான வேதங்கள் ஒலிக்கின்ற திருவேரகம் என்ற திருத்தலமும், இனிமை பொருந்திய குறவள்ளைப் பாடல்களைப் பாடுகின்ற குறப் பெண்களின் குன்றக் குரவை ஒலிக்கின்ற குன்றுகள் தோறும் கோயில் கொண்டிருக்கின்ற தோற்றமும் கருமையான மேகம் ஒலி எழுப்புவது கண்டு தன் இனம் என்று கருதி மதம் கொண்ட யானைகளானது ஒலிக்கும் பழமுதிர்ச் சோலை என்ற திருத்தலமும் என அனைத்தையும் ஆட்சி புரிகின்றவனே. சிறுபறை முழக்கியருள்வாயாக. போர்க் களத்தில் அசுரர்களை வென்ற வீரனே, சிறுபறை முழக்கியருள்வாயாக.

எழுமிரவி மட்கஒளி தருமணி யமுத்தமுடியிலே
யிருகுழை பிடித்த விழியா
மகளிர் சுற்றி தடமிது வெனநடித்து வரவே
வழுவுறு தமிழ் பனுவல்

முறைமுறை யுரைத்து வெகுகவிஞருர்
உட்குழையவே கணமும்
இச்சையுடன் வழியடுமை செப்பியிடவே
பொழுது தொறும்

ஒக்க விதி முறையுனை அருச்சனைசெய்
புனிதசிவ விப்ரருடனே
பத்தசனம் அரகர வெனக்குலவு
புரவலர் விருப்பமுறவே

ரெமறை முடிக்கவரு முருகமே ரக்கவுள்
சிறுபறை முடிக்கியருளே
திரளுமணி முத்தையலை யெறியுநக ருக்கதிப
சிறுபறை முழக்கியருளே. 8

(தெ-ரை) உதிக்கின்ற சூரியனின் ஒளி குறையுமாறு ஒளிவீசும் நவ இரத்தினங்கள் பதிக்கப்பட்ட கிரீடங்களை உடைய தேவர்கள் மகிழ்ச்சி கொள்ளவும். இரண்டு காதணிகளிலும் போய் பாய்கின்ற விழிகளை உடைய தேவப் பெண்கள் சுற்றி நின்று நடனம் இதுவே என்று கூறுமாறு ஆடவும்.

சிறிதும் குற்றம் இல்லாத தமிழ்ப்பாக்களை முறையாகக் கூறிப் பல வரகவிகளின் மனம் உருகவும், இந்திரனும், இருடிகளும் தங்கள் வழிவழியான அடிமையை கூறுவதனயும், உரிய காலத்தில் ஆகமவிதிப்படி உனக்குப் பூசை செய்கின்ற பூசர்களுடன் சொல்வதற்கு அரிதான பக்தர்களின் கூட்டம் ஹர ஹர என்று எழுப்பவும், மன்னர்கள் மிகுதியான அன்பு கொள்ளவும், வளம் மிக்க நான்கு வேதங்களையும் உலகில் நிலைபெறச் செய்யும் பொருட்டு உலகில் எழுந்தருளிய முருகக் கடவுளே, என்றும் இளமையானவனே, சிறுபறையை முழக்கியருள்வாயக. திரட்சியான உருவம் உள்ள முத்துக்களைக் கடல் அலைகள் வீசுகின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் தலைவனே, சிறுபறை முழங்கியருள்வாயக.

தவனனிர தப்புரவி வலமுறையில் வட்டமிடு
தருணவட வெற்பசையவே
தமரதிமி ரத்துமிதம் எறியுமக ரப்பெரிய
சலதியொலி யற்றவியவே

புவமுழு தொக்கமணி முடிமிசை இருத்துபல
பொறியுரகன் அச்சமுறவே
புணரியிடை வற்றமொரு மொகுமொகு வெனப்பருகு
புயலுருமு வெட்கியிடவே

பவனனு மிகுந்தகடை யுகமுடி வெனப்பெருமை
பரவியடி யிற்பணியவே
படகநிபி டத்துழனி அசுரர்வெரு விக்கரிய
பரியவரை யிற்புகுதவே

**சிவனருள் மதிக்கவரு முருக்கு மாக்கடவுள்**
**சிறுபறை முழக்கியருளே**
**திரளுமணி முத்தையலை யெறியுநக ருக்கதிப**
**சிறுபறை முழக்கியருளே. 9**

**(தெ-ரை)** சூரியன் பயணிக்கும் தேரில் பூட்டப் பட்டிருக்கும் குதிரைகள் வலது புறமாகச் சுற்றி வருகின்ற பெருமை பொருந்திய வடதிசையில் உள்ள மேருமலை அசையவும். ஒலியுடன் நீர் திவளைகளை வீசுகின்ற சுறாமீன்களை உடைய பெரிய கடல் ஒலி இல்லாமல் அடங்கி கிடக்கவும், உலகம் முழுவதையும் ஆயிரம் தலைகளால் தாங்குகின்ற பல புள்ளிகளையுடைய ஆதிசேடன் அச்சம் கொள்ளவும்.

கடலில் நீர் வற்றிய காரணத்தினால் மொகு, மொகு என்னும் ஒலியுடன் நீர் குடிக்கின்ற மேகங்களிலிருந்து எழும் இடி வெட்கம் கொள்ளவும், வாயுதேவன் இது உலகின் முடிவு காலமோ என்று உன்னுடைய சிறப்புகளைக் கூறி உன் அடிகளில் பணியவும்.

படகம் என்னும் இசைக் கருவியின் மிகுதியான ஒலிப்பும், அசுரர்கள் அச்சம் கொண்டு தங்களுக்குரிய பெரிய மலையில் புகுந்து ஒளிந்துகொள்ளவும். சிவபெரு மானின் மேன்மை மிக்க அருளை உலகத்தவர்கள் மதிக்குமாறு சிறப்புமிக்க அவதாரம் செய்தருளிய முருகப்பெருமானே, சிறுபறையை முழக்கியருள்வாயாக. திரட்சியான முத்துக்களை அலைகள் வீசி எறியும் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானே, சிறுபறை முழக்கியருள்வாயாக.

**சகரமக ரச்சலதி உலகுதனில் இப்பொழுது**
**சருவிய புறச்சமய நூல்**
**தலைமழிய முத்திதரு சிவசமய முத்திபெறு**
**தவநெறி தழைத்துவரவே**

அகரஉக ரத்தில்விளை பொருளைடைவு பத்தியுறும்
அடியவர் தமக்கருளவே
அமரகுல கத்தவரும் எவருமரு விப்பரவி
அடியினை தனைப்பணியவே

பகரவு நினைத்திடவும் அரிதுனது சொற்பெருமை
பரகதி அளிக்குமெனவே
பலபல முனித்தலைவர் அனைவரும் உனக்கினிய
பணிவிடை தனைப்புரியவே

சிகரபர வெற்பில்வரு முருககும ரக்கடவுள்
சிறுபறை முழக்கி யருளே
திரளுமணி முத்தையலை யெறியுநக ருக்கதிப
சிறபறை முழக்கியருளே. 10

(தெ-ரை) சகரர்களால் தோண்டப்பட்ட சுறாமீன்கள் நிறைந்த கடலால் சூழப்பட்ட உலகத்தில் இன்றை நாளில் வளர்ந்த சமணம், பௌத்தம் என்ற மதங்கள் அழியுமாறு, தம்மை அடைந்தவர்களுக்கு வீடுபேறுலகை கொடுத்தருளிய தவமாகிய அருளநெறி நன்கு வளரவும், அகர, உகர மந்திரங்களில் அமைந்த ஓம்கார மந்திரத்தின் தன்மையை அடியார்கள் புரிந்துகொள்ளும் பொருட்டும், அருள்புரியும் பொருட்டும், தேவருலகத்தவர் உள்ளிட்ட பிறரும் நெருங்கி வந்து உன் திருவடிகளை வணங்கவும், நினைத்தற்கு அரிதான உன் மந்திரத்தின் பெருமையானது வீடுபேற்றை அருளும் என்று பல முனீசுவரர்கள் அனைவரும் உனக்குப் பணிவிடை செய்ய, திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியிருக்கின்ற முருகப் பெருமானே, சிறுபறை முழங்கியருள்வாயாக. திரட்சியான முத்துக்களை அலைகள் வீசுகின்ற திருச்செந்தூர் நகருக்கு உரிமை உடையவளே, சிறுபறை முழக்கியருள்வாயாக.

சிறுபறைப் பருவம் முற்றும்.

## சிற்றிற் பருவம்

பொன்னின் மணக்கம் புனற் புகலிப்
புடைசூழ பணில முத்தெடுத்துப்
புறக்கோட்ட டகமுண் டாக்கிவலம்
புரியைத் தூதைக் கலமமைத்துக்

கன்னி மணக்குங் கழனியிற்செங்
கமலப் பொருட்டு முகையுடைத்துக்
கக்குஞ் செழுந்தேன் உலையேற்றிக்
கழைநித் திலவல் சியைப்புகட்டிப்

பன்னி மணக்கும் புதுப்பொழிலில்
பலபூப் பறித்துச் சாற்றித்திரித்துப்
பரிந்துசிறுசோ றிடும் பெருமை
பாராய் ஆயிரா வதப்பாகன்

சென்னி மணக்குஞ் சேவடியால்
சிறுவர் சித்தில் சிதையேலோ
திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலோ 1

(தெ-ரை) பொன்போன்றதொரு மணமிக்க புது நீரின் பக்கங்களில் சூழ்ந்திருக்கும் சங்கின் முத்துக்களை எடுத்து, கரை வெளிப்புறமாக அமைந்திருக்குமாறு சிறிய வீடு ஒன்றை அமைத்து, வலம்புரிச் சங்கினை சமையலுக்கு உதவுகின்ற மண்கலமாக வைத்துக்கொண்டு; இளமையான பயிரின் மணம் வீசும் நெல் வயல்களில் செந்தாமரை அரும்புகளை மலரச் செய்து அதில் துளிர்க்கும் தேனை உலையில் தண்ணீராக ஏற்றி வைத்துக் கரும்பில் விளையும் முத்தாகிய அரிசியை இட்டுப் பனிநீரின் மணம் நிறைந்த சோலை உள்ள பூக்களைப் பறித்துக் கறி சமைத்து, அன்பும் விருப்பமும் கொண்டு நாங்கள் சமைக்கின்ற சிறு சோற்றின் சிறப்புகளைக்

காண்பாயாக, அயிராவத யானையைத் தன் வாகனமாகக் கொண்டுள்ள இந்திரனின் தலை மணக்கும் சிவந்த கால்களால் எங்களுடைய சிறுவீட்டை அழிக்காதே, அலைகள் முத்தினை வீசுகின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே, எம்முடைய சிறிய வீட்டை சிதைக்காதே.

**தையல் மடவார் இழைத்த வண்டல்**
**தன்னை அழிக்கும் அதுக்கல்ல**
**தரளம் உறுத்தி உன்னுடைய தண்டை**
**திருத்தாள் தடியாதோ**

**துய்ய தவளப் பிறைமுடிக்குஞ்**
**சோதி யெடுத்து முகத்தணைத்துத்**
**தோளில் இருத்தும் பொழுதுமணித்**
**தோளிற் புழுதி தோயாதோ**

**வையம் அனைத்தும் ஈன்றெடுத்து**
**வயது முதிரா மடப்பாவை**
**மடியில் இருத்தி முலையூட்டி**
**வதனத் தனைக்கில் உன்கடிற்காற்**

**செய்ய சிறுதாள் தெரியாதோ**
**சிறுவா சிற்றில் சிதையாலே**
**திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்**
**செல்வா சிற்றில் சிதையேலே. 2**

(தெ-ரை) இளம்பெண்கள் செய்து வைத்த மணல் வீட்டை அழிப்பதற்காக நாங்கள் சொல்லவில்லை. முத்துக்களானது அழுத்துவதால் தண்டை அணிந்த அடிகள் வருத்தம் கொள்ளாதோ. தூய வெண்மை நிறம் பொருந்திய இளம்பிறையைச் சடையில் கொண்டிருக்கும் ஒளிவடிவமான சிவபெருமான் வாரி எடுத்து அணைத்து தோளில் வைத்துக் கொள்ளும்போது அவருடைய தோளிற் புழுதிபடியாதோ, உலக உயிர்களை எல்லாம் பெற்றெடுத்து இளமைத் தன்மை நீங்காமல் இருக்கின்ற இளம்பெண்ணான உமையம்மை தன்

மடியில் அமர்த்திக் கொண்டு பால் ஊட்ட முகத்தோடு அணைத்துக் கொள்கிறபோது உன்னுடை வீரகண்டமணி அணிகின்ற கால்களில் இருந்து எழும் செம்மை நிறமான புழுதி உடம்பில் படாதோ, ஆதலால் எங்களுடைய சிற்றிலைச் சிதைக்காமல் இருப்பாயாக. அலைகள் முத்தினை வீசுகின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானே சிற்றிலைச் சிதைக்காமல் இருப்பாயாக.

தௌவுங் கரட மடையுடைக்குள்
 தந்தப் பக்டு பிடிபட்டுந்
தருவும் அமுதும் இருநிதியுந்
 தனியே கொள்ளை போகாமல்

எவ்வவ் உறவிட் புலத்தமரர்
 ஏக்கம் உறாமல் அயிராணி
இருமங் கலநாண் அழியாமல்
 இமையோர் இறைஞ்சும் மாமகளிர்

பௌவம் எறியுந் துயராழிப்
 பழுவத் தழுந்தி முழுகாமல்
பரக்குஞ் சுருதித் துறைவேள்வி
 பழுதா காமல் பரவரிய

தெவ்வர் புரத்தை அடுஞ்சிறுவா
 சிறியேம் சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்
 செல்வா சிற்றில் சிதையேலே. 3

(தெ-ரை) பாய்ந்தோடுகின்ற மதநீர் மடைகளை உடைக்கின்ற ஆண் யானையாகிய ஐராவதம் அசுரர்களின் கையில் பிடிபட்டுப் போகாமலும், பஞ்ச தருக்களும், அமுதமும், சங்கநிதி, பதுமநிதி என்ற இரு நிதிகளும் காப்பவர்கள் இன்றிக் கொள்ளைப் போகாமலும்; வானுலகத் தேவர்கள் துன்புற்று வருந்தாமலும் இந்திராணியின் மங்கல அணியான தாலி அறுந்து விடாமலும், தேவர்கள்

வணங்குகின்ற தேவப் பெண்கள் அலைவீசும் துன்பம் என்ற கடலில் மூழ்காமல், அளவில்லாமல் பரந்திருக்கின்ற வேதத்திற்கிணங்க இயற்றப் பெறுகின்ற யாகங்களில் குறை ஏற்படாதவாறு, உன்னைப் பணிந்து புகழாத பகைவர் களாகிய அசுரர்கள் வாழ்ந்த அரண்களோடு கூடி இருக்கின்ற பெரிய நகரத்தை அழித்த குழந்தையே, சிறுவர்களான எங்களின் சிறு வீட்டைக் கால்களால் சிதைக்காதே. அலைகள் முத்துக்களை வீசுகின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானே எங்களுடைய சிறு வீட்டைச் சிதைக்காமல் இருப்பாயாக.

**ஆடுங் கொடித்தோர் எழுபுரவி**
**அருணன் நடத்தும் அகலிடத்தை**
**அடைவே படைத்தும் படைத்தபடி**
**அளித்துந் துடைத்தும் முத்தொழிலுங்**

**கூடும் பெருமை உனக்குளது**
**கூடார் புரத்தைக் குழாம்பறிக்கக்**
**கொள்ளுங் கருத்து நின்கருத்துக்**
**கொங்கை சுமந்து கொடிமருங்குல்**

**வாடுங்க கலக விழிமடவார்**
**மலர்க்கை சிவப்ப மணற்கொழித்து**
**வண்டல் இழைத்த மனையழிக்கை**
**வன்போ சுரரும் மகவானும்**

**தேடுங் கமலத் திருத்தாளால்**
**சிறியேம் சிற்றில் சிதையேலே**
**திரைமுத்த தெறியுந் திருச்செந்தூர்ச்**
**செல்வா சிற்றில் சிதையேலே. 4**

(தெ-ரை) ஆடுகின்ற கொடிகளையும், ஒற்றைச் சக்கரத்தினையும் உடைய தேரில் ஏழு குதிரைகளைப் பூட்டி, சூரியன் வழிநடத்துகின்ற உலகங்கள் எல்லாவற்றையும் முறைப்படி படைத்தும், காத்தும் அழித்தும் மூன்று தொழில்களையும் செய்கின்ற பெருமை உனக்கு

இருக்கின்றது. பகைவர்களின் நகரத்தை அங்கு வாழ்ந்த அசுரர்களின் கூட்டத்துடன் அழிப்பதே உன்னுடைய மனக்கருத்தாகும்.

முலைகளைச் சுமப்பதனால் கொடிபோன்ற இடை வாடுகின்ற ,கலகம் புரியும் கண்களை உடைய பெண்கள், மலர் போன்ற தம்முடைய கைகள் சிவக்குமாறு மணலைக் கொழித்து வண்டல் விளையாடுவதற்காக அமைத்த சிறிய வீட்டை அழிப்பது, உன் வலிமைக்கு அழகாக அமையாது.

தேவர்களும், இந்திரனும் தேடுகின்ற தாமரை மலர் போன்ற அழகான திருவடிகளால் சிறியவர்களாகிய எங்களின் வீட்டை அழிக்காதே. அலைகள் முத்துக்களை வீசுகின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டுள்ள முருகக் கடவுளே எங்களில் சிறிய இல்லத்தைச் சிதைக்காதே.

துன்று திரைக்குண் டகழ்மடுவில்
சூரன் ஒளிக்கப் பகைநிருதர்
தொல்லைப் பதியும் அவரிருந்து
துய்த்த வளமுந் தூளாக்கி

வென்று செருவில் பொருதழித்தாய்
வேதர் விதித்த விதிப்படியை
விலக்கி வெகுண்டு மீண்டளித்தாய்
வேண்டும் அடியார் வினையொழித்தாய்

கன்றும் அமணர் கழுவேறக்
காழிப்பதியில் வந்துதித்துக்
கள்ளப் பரச மயக்குறும்பர்
கலகம் ஒழித்துக் கட்டழித்தாய்.

அன்று தொடுத்துன் வழியடிமை
அடியேன் சிற்றில் சிதையாலே
அலைமுந் தெறியுந் திருச்செந்தூர்
அரசே சிற்றில் அழியேலே. 5

(தெ-ரை) அலைகள் அதிகமாக வீசுகின்ற அழகான கடலில் சூரபதுமன் ஒளிந்து கொள்ளவும், பகைவர்களாகிய அசுரர்களின் பழமை பொருந்திய நகரமும் அவர்கள் இருந்து ஆண்டு அனுபவித்த செல்வமும் தூள் தூளாகுமாறு அழித்து அவர்களைப் போரில் வென்றாய், பிரம்மனானவன் விதித்த விதிமுறையை மாற்றி அவன்மேல் கோபம் கொண்டு அவனுக்கு படைப்புத்தொழிலை மீண்டும் கொடுத் தருளினாய்.

உன்னை வணங்கும் அடியார்களின் வினைகளை அழித்தாய், உன்னை பகைத்த சமணர்கள் கழுவேறி அழியுமாறு சீர்காழி தலத்தில் திருஞானசம்பந்தராய் அவதரித்தாய், சமண பௌத்தர்களின் கலகத்தை அழித்தாய், அவர்களை அழித்தொழித்தாய், அன்று முதல் நாங்கள் உன் அடியாராக ஆனோம்.

எங்களின் சிறிய வீட்டைச் சிதைக்காதே, அலைகள் முத்துக்களை வீசி எறியும் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே, எம்முடைய சிறிய வீட்டைச் சிதைக்காதே.

**களிப்பார் உன்னைக்கண் டவரவரே**
**கண்ணு மனமுங் களித்திடுவார்**
**கள்ளன் இவனை நம்முடைய**
**காதல் வலையிற் கட்டுமென**

**விளிப்பார் வாகமங் குறித்த**
**வேடப் பலிப்பைப் பாரென்று**
**மெள்ள நகைப்பார் இவருடனே**
**விளையா டாமல் வேறாகித்**

**துளிப்பாய்ச் சாடக முடுத்த**
**தொல்லைப் புவியும் பகிரண்டத்**
**தொகையும் தொகையில் பல்லுயிருந்**
**தோற்றம் ஒடுக்கந் துணையாய்நின்**

றளிப்பாய் அழிக்கை கடனலக்கா
அடியேஞ் சிற்றில் அழியலே
அலைமுத் தெளியுந் திருச்செந்தில்
அரசே சிற்றில் அழியேலே. 6

(தெ-ரை) உன்னைக் கண்ணில் கண்டு களிப்பார்கள். அவரவர்களின் கண்ணும் மனமும் களித்து, இக் கள்வனை நம்முடைய அன்பு வலையினால் கட்டுவோம் என்று ஒருவரை ஒருவர் அழைத்துக் கூறிக்கொள்வார்கள். காமவேதனை நிரம்பிய என்னைப் பார் என்று மெல்லச் சிரிப்பார்கள்.

இத்தகைய குணம் உள்ள இளம் பெண்களுடன் நீயும் ஒன்றாகச் சேர்ந்து விளையாடாமல் இவர்களுடைய சிந்தனையில் இருந்து வேறாகி நீர்த்துளிகள் நிறைந்த அலைகளை உடைய ஆழமான கடலை உடுத்த பழமையான திருச்செந்தூர்த் தலத்தையும், பூமிக்கு வெளியில் உள்ள அண்டங்களின் தொகுதிகளையும், எண்ணிக்கை இல்லாத பல ஊர்களையும் அவற்றின் தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் துணையாக நின்று காத்திருக்கின்ற அருள் தன்மை நிறைந்தவனே.

நீ எங்கள் சிறிய வீட்டைச் சிதைப்பது முறையா? அலைகள் முத்துக்களை வீசும் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகக் கடவுளே, நீ எம்முடைய சிறிய வீட்டைச் சிதைக்காதே.

பொய்யா வளமை தரும் பெருமை
பொருணை துறையில் நீராடிப்
பூட்டுங் கலன்கள் வகைவகையே
பூட்டி எடுத்து முலையூட்டி

மெய்யால் அணைத்து மறுகுதனில்
விட்டார் அவரை வெறாமலுனை
வெறித்தே வெறு கடனுண்டோ
விரும்பிய பாலைக் கொழித்தெடுத்துக்

**கையால் இழைத்த சிற்றிலைநின்**
**காலால் அழிக்கை கடனலகாண்**
**காப்பான் அழிக்கத் தொடங்கிலெங்கன்**
**கவலை எவரோ டினியுரைப்போம்.**

**அய்யா உனது வழியடிமை**
**அடியேம் சிற்றில் அழியேலே**
**அலைமுத் தெறியுந் திருச்செந்தூர்**
**அரசே சிற்றில் அழியேலே. 7**

(தெ-ரை) குறையாத வளத்தினைத் தருகின்ற பொருநைத் துறையில் நீராட்டி, அணிவிப்பதற்குத் தகுதியான அணிகலன்களை வகைவகையாக அணிவித்துக் கையில் எடுத்து, முலைப்பால் கொடுத்து உடலோடு அணைத்துக்கொண்டு வீதியில் விட்டார்கள் அவர்களை வெறுக்காமல் உன்னை வெறுப்பதற்கு முறை இருக்கிறதா, ஆசையுடன் பருக்கைக் கற்களை கொழித்து எடுத்து எறிந்துவிட்டு நாங்கள் கை வருத்தம் கொள்ள அமைந்த சிறிய வீட்டை உன்னுடைய காலால் அழிப்பது முறையல்ல, எங்கள் துன்பததை யாரிடம் சொல்வோம்.

நாங்கள் உன் அடிமையாவோம். எம்முடைய சிறிய வீட்டைச் சிதைக்காதே. அலைகள் முத்துக்களை வீசுகின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானே, எம்முடைய சிறிய வீட்டைச் சிதைக்காதே.

கூவிப் பரிந்து முலைதாயர்
கூட்டி யெடுத்து நீராட்டி
குடுமி திருத்தி மலர்சொருகிக்
கோலம் புனைந்து கொண்டாடிப்

பூவிற் பொலிந்த திருமேனிப்
புனிதா வண்டற் புறத்தெயிலில்
புகந்தால் இனியுன் னுடலேறப்
புழுதி இறைத்துப் போகாமல்.

காவிக் குறுந்தோட் இதழ்நெருக்குங்
கண்ணி தனைக்கொண் டேறவனைக்
கானல் தரளத் தொடையாலுன்
கைத்தா மரையைக் கட்டிவிடோம்

ஆவித் துணையே வழியடிமை
அடியேம் சிற்றில் அழியேலே
அலைமுத் தெறியுந் திருச்செந்தூர்
அரசே சிற்றில் அழியேலே. 8

(தெ-ரை) அன்புடன் கூவி அழைத்துப் பாலூட்டுகின்ற தாய்மார்கள் ஆறு உருவமும் ஒன்றாகும்படி உன்னை கூட்டி எடுத்து அணைத்து முலைப்பால் கொடுத்து உன்னுடைய குஞ்சியை நன்றாக திருத்தி மலர்களைச் சூடிப் பல வகையான அலங்காரம் செய்து பலவாறு பாராட்டுவதால் பூவைப் போல் விளங்கும் அழகான உடலை உடைய முருகப்பெருமானே; யாம் விளையாடுகின்ற சிறு வீட்டின் மதில்புறம் நீ வந்து புகுந்தால் இப்போது உன்னுடைய உடல் முழுவதும் புழுதி படிந்து திரும்பாதவாறு, சிறிய நீல மலர்களின் இதழ்களால் நெருக்கமாகத் தொடுக்கப்பட்ட மாலைகளைக் கொண்டு ஒச்சி, கடலில் விளையும் சங்குகளால் தொடுக்கப்பட்ட சங்கு முத்து மாலையால் உன் கைத்தாமரையைக் கட்டிவிட்டாய், எங்கள் துணையே, நாங்கள் உன் வழிவழியான அடியார்களாவோம். எம்முடைய சிறிய வீட்டைச் சிதைக்காதே. அலைகள் முத்துக்களை வீசும் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே, எம்முடைய சிறிய வீட்டைச் சிதைக்காதே. அவைகள் முத்துக்களை வீசும் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானே, எம்முடைய சிறிய வீட்டைச் சிதைக்காமல் இருப்பாயாக.

மிஞ்சுங் கனக மணித்தொட்டில்
மீதே இருத்தித் தாலுரைத்து
வேண்டும் படிசப் பாணிகொட்டி
விருப்பாய் முத்தந் தனைக்கேட்டு

நெஞ்சு மகிழ வரவழைத்து
நிலவை வருவாய் எனப்புகன்ற
நித்தல் உனது பணிவிடையின்
நிலைமை குலையேம் நீயறிவாய்

பிஞ்சு மதியின் ஒருமருப்புப்
பிறங்கும் இருதாட் கவுட்சுவடு
பிழியுங் காடமும்மதத்துப்
பெருத்த நால்வாய்த் திருத்தமிகும்

மஞ்சுக் காக்குஞ் சாந்துணையே
அடியேம் சிற்றில் அழியேலே
அலைமுத் தெறியுந் திருச்செந்தூர்
அரசே சிற்றில் அழியேலே. 9

(தெ-ரை) அழகும், ஒளியும் மிக்க பொன்னாலும், நவரத்தினங்களாலும் அமைக்கப்பட்ட தொட்டிலில் அமரச்செய்து தாலாட்டுப் பாடி விருப்பம் போலச் சப்பாணி கொட்டிக்கட்டி, ஆசையுடன் முத்தம் தரவேண்டும் என வேண்டி மனம் மகிழ வாவா என்று அழைத்து, நிலவை உன்னோடு விளையாட வருமாறு கூறி உனக்கு செய்யும் அடிமைப் பணிகளில் சிறுகுறையும் வைக்காமல் இருக்கிறோம்.

இதனை நீ அறிவாய் இளம்பிறை போல ஒற்றைக் கொம்பு விளங்குகின்ற இரு பாதங்களை உடைய கபோலத்தில் உள்ள பள்ளங்களில் இருந்து வழியும் மூன்று மதங்களை உடையதும் சுத்தம் மிக்கதும் ஐந்து கைகளை உடைய விநாயகக் கடவுளின் இளையவனே. எம்முடைய சிறிய வீட்டைச் சிதைக்காதே. அலைகள் முத்தினை வீசி எறியும் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமானே எம்முடைய சிறிய வீட்டை சிதைக்காதே.

புற்றில் அரவந் தனைப்புனைந்த
புனித ருடனே வீற்றிருக்கப்
பொலியுந் திகிரி வாளகிரிப்
பொருப்பை வளர்த்துச் சுவராக்கிச்

சுத்தி வளைந்த வரையனைத்துஞ்
சுவர்க்கால ஆக்கிச் சுடரிரவி
தோன்றி மறையுஞ் சுருப்பைவெளி
தொறுந்தோ ரணக்கால் எனநாட்டி

மற்றில் உவகை யெனுங்கனக
வரையைத் துளைத்து வழியாக்கி
மாகமுகிலை விதானமென
வகுத்து மடவா ருடன்கூடிச்

சிற்றில் இழைத்த பெருமாட்டி
சிறுவா சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே. 10

(தெ-ரை) புற்றில் வாழ்கின்ற தன்மையுடைய பாம்பினை அணிகலனாக அணிந்திருக்கின்ற தூய்மையுடைய சிவபெருமானுடன் அமர்ந்திருப்பதற்காக, அழகான சக்கரவாள மலையினை வளர்த்துச் சுவராக அமைத்துச் சுற்றிலும் வளர்ந்திருக்கின்ற பெரிய மலைகளை எல்லாம் அச்சுவருக்குக் கால்களாக அமைத்து, ஒளி இலங்கும் சூரியன் தோன்றி மறையும் உதயகிரி, அந்தகிரி என்னும் இரண்டு மலைகளையும், வெளியெங்கும் தோரணக்காலாக நட்டு; வேறு உவமை இல்லை என்று கூறுமாறு மகாமேருவை துளைத்து வழியமைத்து வானில் உள்ள மேகங்களை விதானமாக அமைத்து கலைமகள், திருமகள் என்னும் இரு பெண்களுடன் கூடி சிற்றில் கட்டி விளையாடிய உமையம்மை பெற்ற மைந்தனே, எம்முடைய சிறிய வீட்டைச் சிதைக்காதே அலைகள் முத்துக்களை வீசுகின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகக் கடவுளே, எம்முடைய சிறிய வீட்டைச் சிதைக்காதே.

சிற்றிற் பருவம் முற்றும்.

## சிறுதேருருட்டல்

தண்டே னுடைந்தொழுகு மதுமாலை நீண்முடி
தரிக்குஞ் சதக்கிருதுசெந்
தருணமணி அரசன் தேற்மா தலிசெமுழுந்
தமணியத் தேருருட்டப்

பண்டே பழம்பகை நிசரசரர்கள் உட்கப்
பரப்புநிலை கெட்டதென்று
பரவுங்கு பேரன்வட பூதரம் பொருட்
பகத்தோ உருட்டவீறு

கொண்டே உதித்தசெங் கதிரா யிரக்கடவுள்
குண்டலந் திருவில் வீசச்
கோலப்பி ரபாமண்டலச் சுடர்கொழிக்கமுட்
கோலெடுத்துத் தருண அருணன்

திண்டே ருருட்டவளர் செந்தில்வாழ் கந்தனே
சிறுதேர் உருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதேர் உருட்டி யருளே.

(தெ-ரை) குளிர்ச்சிப் பொருந்திய தேன் ஒழுகுகின்ற மலர்கள் மலர்ந்த மாலையை அணிந்திருக்கின்ற நீண்ட கிரீடத்தைச் சூடியிருக்கின்ற இந்திரன், செம்மை நிறமும், அழகும் பொருந்தியிருக்கின்ற மணிகள் பதிக்கப்பட்ட அரசு இருக்கையில் வீற்றிருக்க, இந்திரனுடைய தேர்பாகனாகிய மாதவி வளம் மிக்கப் பொன்னால் செய்யப்பட்ட தேரை வழிநடத்திச் செல்ல, முன்பே பழைய பகைவர்களாகிய அசுரர்கள் அச்சம் கொள்ள, நிலத்தின் நிலை கெட்டுவிட்டதே என்று உன்னை வணங்குகின்ற குபேரன் வடதிசையில் இருக்கின்ற மேருமலையை ஒத்த புட்பகம் என்னும் பெயருடைய விமானத்தை செலுத்த உதிக்கின்றபோது ஒளிரும், ஆயிரம் செந்நிறமான கதிர்களை உடைய சூரியனின் காதில் அணிந்திருக்கின்ற காதணி ஒளிபரப்ப; அழகான

ஒளிவட்டமாகிய பரிவேடத்தின் சுடர் அசையுமாறு முள் அமைந்திருக்கின்ற கோலைக் கையில் தாங்கிக் கொண்டு செம்மை நிறம் உள்ள சூரியனின் தேர்ப்பாகனாகிய அருணன் வலிமையான சூரியனின் தேர்ப்பாகனாகிய அருணன் வலிமையான சூரியன் தேரை உருட்ட அருள் புரிந்து கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானே, நீ சிறு தேரை உருட்டுவாயாக. சேவல் கொடியை உடைய கம்பீரமான தோற்றமுடைய முருகக் கடவுளே, நீ உன்னுடைய சிறிய தேரை உருட்டியருள்வாயாக.

வாராரும் இளமுலை முடைத்துகிற் பொதுவியர்
மனைக்குட் புகுந்து மெள்ள
வைத்தவெண் தயிருண்டு குடமுருட் டிப்பெருக
வாரிவெண் ணெயை யுருட்டிப்

பாராமல் உண்டுசெங் கனிவாய் துடைத்துப்
பருஞ்சகடு தன்னையன்று
பரிபுரத் தாளால் உருட்டிவிளை யாடுமொரு
பச்சைமால் மருக பத்தி

ஆராமை கூருமடி யவர்பழ வினைக்குறும்
பறவே உருட்டி மேலை
அண்டபகி ரண்டமும் அனைத்துலக முஞ்செல்லும்
ஆணையா ழியையுருட்டிச்

சேராநி சாசரர் சிரக்குவடுருட்டநீ
சிறுதேர் உருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரானே
சிறுதேர் உருட்டி யருளே. 2

(தெ-ரை) இளமையான கச்சணிந்த முலைகளை உடைய கொச்சை நாற்றம் வீசும் ஆடைகளை உடைய ஆய்ச்சியர் வீடுகளுள் மெல்லப் புகுந்து அங்கு வைத்திருந்த வெண்மை நிறமான தயிரை உண்டு, அத்தயிர் குடங்களை உருட்டி விளையாட்டு புரிந்த ஒப்புமை கூற இயலாத பசுமை

நிறம் கொண்ட திருமாலின் மருமகனே; பக்தி உணர்வுமிக்க அடியார்களின் முற்பிறவிகளில் வந்த வினைகளாகிய பகைகளை அழியுமாறு உருட்டிப் பழமையான அண்டத்திலும், பகிரண்டங்களிலும் பிற எல்லா உலகங்களிலும் செல்லுகின்ற ஆணைச் சக்கரத்தை உருட்டிப் பகைவர்களாகிய அசுரர்களின் தலைகளை நிலத்தில் புரளச் செய்த உன்னுடைய தேரை உருடடியருள்வாயாக. சேவல் கொடியை உடைய கம்பீரமான தோற்றமுடைய முருகக்கடவுளே, நீ உன்னுடைய சிறிய தேரை உருட்டியருள்வாயாக.

கொந்தவிழ் தடஞ்சாரல் மலையைமால் வரைநெடுங்
குடுமியில் வளர்ந்த தெய்வக்
கொழுந் தென்ற லங்கன்றும் ஆடகப் பசுநிறங்
கொண்டுவிளை யும்பருவரைச்

சந்தன நெடுந்தரு மலர்ப்பொதும் பருமியல்
தண்பொருநை மானதியும்த்
தண்பொருநையாய் விளைச்சாவிநெற் குலையுமச்
சாலிநெற் குலைப டர்ந்து

முந்திவிளை யும்பரு முளிக்கரும் பும்பரு
மொழிக்கரு ம்பைக்க றிந்து
முலை நெறிக்கும் புனிற் றெருமைவா யுஞ்சிறுவர்
மொழியும் பரந்த வழியுந்

செந்தமிழ் மணக்குந் திருச்செந்தில் வேலனே
சிறுதேர் உருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதேர் உருட்டி யருளே. *3*

(தெ-ரை) பூங்கொத்துக்கள் மலர்ந்திருக்கின்ற அகன்ற மலைச் சாரலை உடைய பொதிய மலையின் சிகரத்தில் தோன்றி வளர்ந்த தெய்வீகக் குணம் கொண்ட இளம் தென்றல் காற்றும், பசும் பொன் நிறத்தில் விளைகின்ற நீண்ட

சந்தன மரச்சோலையும், இயற்கை வளம் மிக்க தாமிரபரணி ஆறும், அந்நீர் பாய்வதால் விளைகின்ற செம்மை நிறமான நெல்லும், நெற்கதிர்களுடன் படர்ந்து வளரும் நீண்ட முற்றிய கரும்பும், கரும்பை கடித்து உண்ணும் கன்றை ஈன்ற எருமையின் வாயும், இளம் சிறுவர்களின் வாய்சொற்களும், அகன்ற விழிகளும் செந்தமிழ் மணம் வீசுகின்ற திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானே, சிறுதேரை உருட்டியருள்வாயாக. சேவல் கொடியினை உடைய கம்பீரமான தோற்றமுடைய முருகக் கடவுளே, நீ உன்னுடைய சிறிய தேரை உருட்டி யருள்வாயாக.

பெருமையுடன் நீள்தலத் திருவர்பர சமயமும்
பேதம் பிதற்றி விட்ட
பிறைமருப் புக்களும் பகடுமுந் நீரின்
பிழைத்து நீள் கரையி லேறப்

பொருவருஞ் சந்நிதியி லெய்துவது போல்மண
புடைக்குமிள நீரி ரண்டு
புணரியின் மிதந்துசந் நிதியேற விந்நாட்
பொருந்த விளை யாடி முன்னாள்

இருதிரையி னிற்சந் தனக்கொடி மரத்தினை
இழுத்துவரும் எருமை ஏற்றை
எப்பொழுது முதியகற் பகடாக உலகத்தில்
யாவருங் காண வென்று

திருவுள மகிழ்ந்துதிரு விளையாடல் கண்டநீ
சிறுதேர் உருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதேர் உருட்டி யருளே. 4

(தெ-ரை) பெருமையுடன் சிறப்புற்று விளங்கும் திருச்செந்தூர்த் திருத்தலத்தில் சமணர், பௌத்தர்களின் பிற சமயக்கொள்கைகளும், சைவ சமயத்திற்கு வேறுபாடாகவும்,

மாறுபாடாகவும் இருக்கின்ற தன்மையைக் கூறி தம்முடைய கருத்து வெல்லும் என்னும் கருத்தால் அலைபாய பிறை போன்ற கொம்பினை உடைய சூரிய நிறமான பெரிய யானைக் கடலில் மூழ்கி இறக்காமல் உயிருடன் பிழைத்து நீண்ட கடற்கரையை உடைய திருச்செந்தூரில் கரையேறி, ஒப்புமை கூற இயலாத கோயில் முன் எழுந்தருளியது போல, முத்து முளைத்த இரண்டு இளநீர் காய்கள் கடல் நீரில் மிதந்துவந்து கோயில் சன்னதியில் வந்து சேருமாறு இந்நாளில் பொருத்தமாக விளையாடி அன்று பெரிய அலையில் சந்தன மரத்தால் செய்யப்பட்ட கொடிக்கம்பத்தைக் கோயில்வரை இழுத்துக் கொண்டுவந்த எருமைக் கன்றை, எக்காளத்திலும் விளங்குமாறு கல்லால் அமைந்த எருமையாக உலகில் உள்ளோர் எக்காலமும் காண வேண்டும் என்ற உள்ளம் கொண்டு, திருவிளையாடல் செய்தாய் நீ, சிறுதேரை உருட்டியருள்வாயாக. சேவல் கொடியினை உடைய வீரனே, சிறுதேரை உருட்டுவாயாக.

ஆதிநூல் மரபாகி அதனதும் பொருள் ஆகி
அல்லவை யனைத்தும் ஆகி
அளவினுக் களவாகி அணுவினுக் கணுவாய்
அனைத்துயிரும் ஆகி அதனின்

சாதியின் பிரிவாகி வெவ்வேறு சமயங்கள்
தானாகி நானா கிமெய்ச்
சாலோக சாமீப சாரூப சாயுச்ய
தன்னொளியீ லீலை யாகி

ஓதிய தனைத்தினும் அடங்காமல் வேறாகி
உள்ளும் புறம்பும் ஆகி
ஒளியிலொளி யாகிமற் றிரவுமக லற்றவிடம்
ஒப்புவித் தெனை யிருத்தித்

தீதினை அகற்றிநின் திருவருள் புரிந்தவா
சிறுதேர் உருட்டி யருளே
சேவற் பதாகைக் குமார கம்பீரனே
சிறுதேர் உருட்டி யருளே. 5

(தெ-ரை) வேதங்களின் அமைப்பும், அதனுள் உள்ள பொருளாகி அவற்றில் கூறப்படாத பொருள்களும் ஆகி, உண்மைகளைக் கூறும் ஞான நூல்களுக்கு அளவைக் கற்றுக் கொடுப்பதாய் அணுவுக்குள் இருக்கின்ற அணுவாகி உலகில் உள்ள எல்லா உயிர்களுமாகி, பல்வேறு சாதிப் பிரிவுகளாகி, வேறுபட்ட மதங்களாகி, நானாகி, உண்மையான சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சிலம் என்னும் நான்காக அமைந்ததன் ஒளியின் திருவிளையாடலாகி, மேலே கூறிய எல்லாவற்றிலும் அடங்காமல் வேறாக நின்று, அகமாகவும், புறமாகவும் இருந்து ஒளிகளில் எல்லாம் மிகுதியான ஒளியாகி இரவு பகல் இல்லாத ஓரிடத்தில் என்னை இருக்கச் செய்து தீமை விளையாமல் திருவருள் புரிந்தவனே, சிறுதேர் உருட்டியருள்வாயாக. சேவல் கொடியுடைய வீரனே, சிறுதேர் உருட்டியருள்வாயாக.

**புலமை வித்தக மயூரவா கனவள்ளி**
**போகபூ டணசூரன்**
**சலமொழித்தவ நிசாசரர் குலாந்தக**
**சடாட்சர காங்கேய**
**குலவ கொற்றவ குமாரகண் டீரவ**
**குருபர புரு கூதன்**
**உலக ளித்தவா செந்தில்வாழ் கந்தனே**
**உருட்டுக சிறுதேரே**
**உரக நாயகன் பஃறவை பொடிபட**
**உருட்டுக சிறுதேரே. 6**

(தெ-ரை) புலமை வித்தகனே மயில் வாகனத்தை உடையவனே, வள்ளிதேவியின் போகத்தை முழுமையாக உடையவனே, சூரனால் நல்லவர்களுக்கு ஏற்பட்ட துன்பங்களைத் தீர்த்தவனே. சரவணபவ என்னும் ஆராமுத்துடையவனே. காங்கேயனை, வெற்றியுடையவனே, குமரக்கடவுளே, சிங்கத்தை ஒத்தவனே, பரமகுருவே, இந்திரனின் உலகைக் காத்தருளிய தலைவனே,

திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானே, சிறுதேர் உருட்டியருள் வாயாக. ஆதி சேடனின் ஆயிரம் முடிகளும் பொடிபடுமாறு சிறுதேர் உருட்டியருள்வாயாக.

**வீதி மங்கல விழாவணி விரும்பிய**
**விண்ணவர் அரமாதர்**
**சோதி மங்கல கலசகுங் குமமுலை**
**தோய்ந்தகங் களிகூரச்**
**சாதி மங்கல வலம்புரி இனமெனத்**
**தழைச்சிறை யொடுபுல்லி**
**ஓதிமம் துயில் செந்தில்வாழ் கந்தனே**
**உருட்டுக சிறுதேரே**
**உரக நாயகன் பஃறலை பொடிபட**
**உருட்டுக சிறுதேரே. 7**

(தெ-ரை) வீதியில் உலா புறப்படுகின்ற மங்களமான உன்னுடைய விழாக் கோலத்தைக் காண விரும்பிய தேவர்கள், தேவப் பெண்களின் ஒளி பொருந்திய மங்களமான குங்குமக் குழம்பு பூசப்பட்ட முலைகளைத் தழுவி மனமகிழ்ச்சி மிகுமாறு, வலம்புரிச் சங்குகள் போல, வெண்ணிறமாக விரிக்காத சிறகுடன் ஒன்றை ஒன்று தழுவிக்கொண்டு அன்னங்கள் துயில் கொள்கின்ற திருச்செந்தூரில் வாழ்கின்ற முருகப்பெருமானே சிறுதேர் உருட்டியருள்வாயாக. ஆதிசேடனின் மணிமுடிகள் பொடிபடுமாறு சிறுதேர் உருட்டியருள்வாயாக.

**விரைத்த டம்பொழில் வரைமணி ஆசனத்**
**திருந்துவிண் ணவர் போற்றி**
**வரைத்த டம்புரை மழவிடை எம்பிரான்**
**மனமகிழ்ந் திடவாக்கால்**
**இரைத்த பல்கலைப் பரப்பொலாந் திரட்டிமற்**
**றிதுபொரு ளெனமேனாள்**
**உரைத்த தேசிகா செந்தில்வாழ் கந்தனே**
**உருட்டுக சிறுதேரே**

உரக நாயகன் பஃறலை பொடிபட
உருட்டுக சிறுதேரே. 8

(தெ-ரை) மணம் மிகுந்த சோலைகள் சூழ்ந்திருக்கின்ற மலையாகிய சிங்காசனத்தில் வீற்றிருந்து தேவர்கள் வணங்குமாறு பெரிய மலைபோன்ற இளமையான காளை வாகனத்தை உடைய எம் இறைவனாகிய சிவபெருமான் மனம் மகிழ்ச்சி கொள்ளுமாறு, மேன்மை பொருந்திய வாயினால் ஒலிக்கின்ற பல நூல் பெருக்கங்களின் உட்பொருளை எல்லாம் சேர்த்து, அவற்றின் பொருள் இதுவாகும் என்று முன்னாளின் ஓம் என்னும் பிரணவத்தின் பொருள் கூறிய முருகக்கடவுளே, நீ சிறுதேர் உருட்டுவாயாக. உலகைத் தாங்கும் ஆதிசேடனின் தலைகள் பொடியாகுமாறு சிறுதேர் உருட்டுவாயாக.

மாதுநாயகன் எனைவடி வுடையீர்
வள்ளிநா யகமண்ணில்
ஈது நாயகம் எனவுனை யன்றிவே
றெண்ணநா யகம் உண்டோ
போது நாயகன் புணரியின் நாயகன்
பொருப்புநா யகன்போற்றி
ஓது நாயக செந்தில் வாழ் கந்தனே
உருட்டுக சிறுதேரே
உரக நாயகன் பஃறலை பொடிபட
உருட்டுக சிறுதேரே. 9

(தொ-ரை) மது நாயகமென சிறப்பமைந்த அழகான வள்ளிதேவியின் தலைவனே, பூவுலகில் இதுவே தலைமையான தெய்வம் நீயன்றி வேறு உண்டோ, தாமரை மலரில் வாழும் பிரம்மனும், பாற்கடலில் வாழ்கின்ற திருமாலும் கயிலை மலையில் வாழ்கின்ற சிவபெருமானும் வணங்கித் துதிக்கும் தலைவனே சிறுதேர் உருட்டியருள் வாயாக. ஆதிசேடனின் தலைகள் பொடிபடுமாறு சிறுதேர் உருட்டியருள்வாயாக.

தக்க பூசனைச் சிவமறை யோர்பெருந்
தானநா யகர் தம்பேர்
திக்க னைத்தினும் எண்முதல் இமையவர்
தேவர்தன் திருமேனி

மிக்க மாலிகை தருபவர் அடியவர்
மின்னார் சமயத் தோர்
ஒக்க வாழ்கெனச் செந்தில்வாழ் கந்தனே
உருட்டுக சிறுதேரே
உரக நாயகன் பஃறலை பொடிபட
உருட்டுக சிறுதேரே. 10

(தெ-ரை) ஆகமங்களில் கூறப்பட்டுள்ள முறைப்படி பூசைகளை மேற்கொண்ட ஆதி சைவர்களும், கோயில் உரிமையாளர்களாகிய பெரியோர்களும், தம்முடைய பெயரை எட்டுத் திசைகளிலும் பெருமைபெற நிறுத்திய முதற் குலத்தவர்களாகிய பூவுலகத் தேவர்களும், இறைவனுக்குரிய பூமாலைகளைத் தினமும் தொடுத்துக் கொடுப்பவர்களும், சிவனடியார்களும், பிற அகச் சமயத்தினர்களும் ஒன்றாக வாழ்வார்களாக என்று முருகப் பெருமானே சிறுதேர் உருட்டியருள் வாயாக. ஆதிசேடனின் தலை பொடியாகுமாறு சிறுதேர் உருட்டியருள்வாயாக.

சிற்றிற்ப் பருவம் முற்றும்.



# தமிழர் வாழ்வில் முருக வழிபாடு

**முருகன்**

ஓம் என்பது பிரணவம். ப்ர-என்பது சிறப்பு என்ற பொருளைத் தரும். நவம்-புதுமை-ப்ரநவம் என்ற ப்ர, நவம் என்ற இரண்டும் புணர்ந்து பிரணவம் என்று அழைக்கப்படுகிறது. சிறந்த புதியஆற்றலைத் தருவது பிரணவ மந்திரமாகும்.

பிரணவப்பொருளான தெய்வம் முருகன். முருகன் என்ற சொல்லில் முருகு என்பது பகுதி அன் - ஆண்பால் ஒருமை விகுதி, முருகு அன் என்ற பகுதி விகுதிகள் சேர்ந்து முருகன் என்றாயிற்று. இத்தகு முருகனை கிருபானந்த வாரியார்

"தமிழுலகம் தழைக்க அவதரித்த பரமஞானகுரு
நாதராகிய அருணகிரிநாதருக்கு முருகன்
அடியெடுத்துக் கொடுத்தது முத்தைத் தரு"

என்று குறிப்பிடுவார். இத்தகு முருகனானவன் ஆறு திருமுகங்கள், பன்னிரண்டு திருக்கைகள், பன்னிரண்டு திருக்கண்கள், இரண்டு திருவடிகள் என முப்பத்தியிரண்டு இலக்கணங்களுடன் தோன்றியவன்.

**முருக வழிபாடு**

சைவ சமயத்தின் ஒரு கூறு முருக வழிபாடு, இது கௌமாரம் எனவும், சொல்லப்பெறும். பழம்பெரும் காப்பியமாகிய தொல்காப்பியம் முருகப்பெருமானை சேயோன் எனச் சுட்டுகின்றது. பரிபாடலிலும், கலித் தொகையிலும் அப்பெருமான் சிவகுமாரன் எனக் குறிப்பிடப்படுகிறார்.

சமண சமய காவியமாகிய சிந்தாமணி முருகனது பெருமையை,

"குன்றம் மார்பு அரிந்து வேள்வேல் குடுமிமா மஞ்சை ஊர்ந்து
நின்றமால் புருவம் போல நெரிமுறி புருவ மாக்கிக்
கொன்றவன் வேழம் வீழ்ப்ப மற்ற போர் களிற்றில் பாய்ந்து
நின்றமா மன்னர்க்கு எல்லாம் நீண்முடி இலக்க மானான்"

வெண்மையான வேலால் கிரவுஞ்சக் குன்றினைப் பிளந்து உச்சிக் கொண்டையை உடைய அழகிய மயிலேறி வரும் முருகப்பெருமானின் திருப்புருவங்கள் போலத் தன் புருவமாகிய வில்லை வளைத்து நெறித்துக் கட்டியங்காரனின் யானையைக் கொன்று வீழ்த்தினான். உடனே அவன் வேறொரு யானையின் மீதேறி வந்து தாக்கத் தொடங்கியதால், நீண்ட முடியையுடைய சச்சந்தன் நிலைபெற்ற மற்ற வீரர்கள் குறிவைத்துத் தாக்க, தக்க இலக்காகத் தனியன் ஆனான் என்கிறது.

பண்டைத் தமிழர்வாழ்வில் இறைவழிபாடு முக்கிய அங்கம் வகித்தது. இறைவன் என்பவன் அங்கிங்கென்னாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த ஜோதியாய் நீக்கமற நிறைந்து இயற்கைக்கு அப்பாற்பட்டு இருப்பவன். மனிதன் என்பவன் இயற்கையின் சிறந்த படைப்பு. இறைவனுக்கும், மனிதனுக்கும் இடையே ஓர் உறவை உருவாக்கும் முயற்சியே சமயம். இந்நிலையில் தமிழர்கள் அவரவர்கள் பின்பற்றிய மதத்தைப் போற்றினாராயினும் பிற சமயங்களை வெறுக்கவில்லை. சமயப் பொறை என்னும் எதிர்மறைப் பண்பு கூட அக்காலத்தில் பேசப்படவில்லை.

மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கிடைக்கப்பெற்ற தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியம், சங்க இலக்கியமாகிய, திருமுருகாற்றுப்படை, அகநானூறு, மதுரைக் காஞ்சி, பெரும்பாணாற்றுப் படை, குறுந்தொகை, பரிபாடல் முதலிய நூல்களில் முருக வழிபாடு பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. சங்கம் மருவி நூலான சிலப்பதிகாரம் செவ்வேள் முருகனின் பெருமையைச்

செப்புகின்றது. பண்டை இலக்கியங்கள் மட்டுமல்லாது புராண இலக்கியங்கள் முருகனை,

‘கந்தா, கதிர்வேலா, உமையாள் மைந்தா
குமரா, மறைநாயகா, கார்த்திகேயா’

என்று போற்றுகின்றன.

**முருக வழிபாட்டுத் தலங்கள்**

குன்றிருக்கும் இடமெல்லாம் குமரனிருக்கும் இடமாகும். உலகம் உவந்து போற்ற, குன்று தோறும் கோயில் கொண்ட முருகன் நாடி வரும் அன்பர்க்கும், பாடி வரும் பக்தர்க்கும், காவடி எடுத்து ஆடி வரும் அடியவர்க்கும் அருள்புரிந்து தாயிற் சிறந்த தாயான தத்துவனாகக் காட்சி தருகின்றான்.

‘உன்னையொழிய ஒருவரையும் நம்புகிறேன்
பிள்ளை யொருவரை யான்பின் செல்லேன்’

என்று முருகனையே முழுமுதற் கடவுளாய் உணர்ந்து வாழ்ந்த நக்கீரர் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும், பரம்பொருளை ஆறுபடை வீடுகளின் தலைவனாய்ச் சித்தரிக்கின்றார்.

குமரப் பெருமான் உவந்து உறையும் தலங்கள் படை வீடுகள் என அழைக்கப்பட்டன.

‘திருபரங்குன்றத்து அரசே
சீரலைவாய் முத்தே,
பழனி மலைக்கான மணிவிளக்கே,
சூரகத்தின் பெருவாழ்வே
குன்று தோறாடும் பெருமானே
பழமுதிர்ச் சோலைப் பரனே’

என்று போற்றிப் புகழ்ந்து மகிழ்வார்கள். இந்த ஆறுபடை வீடுகளில் முருகன் தெய்வானையை மணம்புரிந்தவராகவும்.

சத்திவேல் தாங்கி தேவர்களை காத்த வீர தெய்வமாகவும், வள்ளல்களுள் தலையாய ஞான வள்ளலாகவும், ஈசருடன் ஞானமொழி பேசிய பிரணவ சொரூபியாகவும், வள்ளியைக் கரம் பிடித்த கண்கண்ட கலியுக வரதனாகவும் காட்சி தருகின்றான், ஒவ்வொரு தலமும் ஒவ்வொரு வகையில் சிறப்புப் பெற்றவையாகும்.

இவற்றை எல்லாம் உற்று நோக்கிடின் எல்லாம் வல்ல பரம்பொருள் காலத்தின் நலங்கருதி வையகத்தை ஆட்கொள்ள புதிய புதிய உருவம் கொண்டு உலகில் அவதாரம் எடுத்தார் என்பதை அறியமுடிகின்றது. பன்னிருகை கொண்ட பரமனைத் தொழுதால் நம் பழிகள் யாவும் நீங்கும் என்று அருணகிரிநாதர் கூறுகின்றார். கச்சியப்பரும் இக்கருத்தை மிகவும் சிறப்பாக,

'தீயவை புரிந்தாரேனும் திருமுன் உற்றால்
தூயவராகி மேலே தொல் கதி அடைவார்'

என்பார். முருகன் அன்பின் இருப்பிடமாகவும், அறிவின் ஊற்றாகவும், வீரத்தின் வித்தாகவும் திகழ்கின்றான்.

# திருச்செந்தூர் திருத்தலம்

திருச்செந்தூர் குன்றுதோறும் நின்று காட்சி அளிக்கும் முருகக் கடவுளின் ஆறுபடை வீடுகளுள் இரண்டாவது படைவீடாகும். இவ்வூர் தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ளது.

இடைவிடாது மன்னார் குடாக்கடல் அலைகளால் வருடப்பெறும் காரணத்தால் அலைவாய் என்னும் பெயர் பெற்றது. பிறகு 'திரு' என்னும் அடைமொழிச் சிறப்புடன் திருச்சீரலைவாய் என்னும் திருப்பெயரால் வழங்கப்பட்டது.

முருகப்பெருமான் வெற்றி சூடி வந்து தங்கியதால் இத்தலத்திற்கு திருச்செந்தூர் என்ற திருப்பெயர் உண்டாயிற்று.

இலக்கியப் புகழ் வாய்ந்த திருத்தலங்களுள் இத்தலமும் ஒன்று. இத்தலம், "அலைவாய்ச் சேறலும் நிலையாகிய பண்பே" என்று திருமுருகாற்றுப்படையிலும், "வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்" என்று புறநானூற்றிலும், "சீரலை வாய்வரு சேவைப் போற்றுவோம்" என்று கந்தபுராணத்திலும், சிறப்பிக்கப்படுவதை அறியமுடிகின்றது.

"செந்தமிழ் மணக்கும் திருச்செந்தூரில்" என்று கூறி, முருகனின் பல்வேறு சிறப்புகளையும் தலத்தின் பெருமைகளையும் திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ் சிறப்பிப்பதை அறியலாம்.

முருகப்பெருமான் சூரபத்மன் மீது படையெடுத்து வரும்பொழுது வழியில் எதிர்பட்ட தாரகா சூரனையும், அவனுக்கு துணையாக நின்ற கிரௌஞ்ச மலையையும் அழித்தார். பிறகு தம் படைகளுடன் இச்செந்தில் பதியில் வந்து தங்கினார். வீரவாகு தேவரைச் சூரபத்மனிடம் தூது

அனுப்பினார். அத்தூதானது பலனளிக்கவில்லை. இதனால் சூரபத்மன் மீது போர்த் தொடுத்தார். அதன் பிறகு மறக் கருணையால் ஆட்கொண்டார். தேவர்களைச் சிறைமீட்டு வந்து தேவர்களின் வழிபாட்டினையும் ஏற்றுக்கொண்டார். என்பது இத்தலத்தின் வரலாறு. இத்தகு வரலாற்று சிறப்பாளும், வியாழ பகவான் இங்குள்ள முருகனை வழிபட்டதாலும் இத்தலத்திற்கு பெருஞ்சிறப்பு உண்டாயிற்று.

பெருமை வாய்ந்த இத்தலம் தென் மாவட்ட மக்களின் குலதெய்வ கோவிலாகத் திகழ்கின்றது. இக்கோவில் கடல் மட்டத்தைவிட தாழ்வாக அமைந்துள்ளது. இத்திருத்தலம் கடல்நீர் மட்டத்திற்கு கீழே காணப் பட்டாலும் கோவிலில் இருக்கும் தீர்த்தத்தில் உப்புநீர் உட்புகுவதில்லை. இதனை கோவிலின் அற்புதங்களில் ஒன்றாக கொள்ளலாம்.

கோவிலின் முதல் பிரகாரத்தில் குருபகவான் சன்னதி 108மகாதேவர் சன்னதி ஆகியவை அமைந்துள்ளது. இங்கு ஒரே லிங்கத்தில் 108 சிவலிங்கங்கள் செதுக்கப்பட்டு அவற்றிற்கு ஐந்து தலை நாகம் குடைபிடிப்பது போல் சிலை அமைக்கப்பட்டுள்ளது.

இதனையொட்டி முருகன் சூரனை வதம் செய்யும் காட்சி சுவரில் புடைப்பு சிற்பமாக உள்ளது. முருகன் கையில் உள்ள வேல் மாமரத்தை துளைத்து சென்று சூரன் வயிற்றில் பாய்வதுபோல் இந்த சிற்பம் உள்ளது. அதன் அருகே ஆன்ம லிங்கம் உள்பட பல லிங்கங்கள் காட்சி அளிக்கின்றன.

மேலும் வள்ளி-தெய்வானை சன்னதிகள் முன்புறம் சன்னதிகளுக்கு பின் புகழ்பெற்ற சிவலிங்க சன்னதிகள், மயூரநாதர் சன்னதி, சண்டிகேஸ்வரர் சன்னதி மற்றும் நடராஜர் சன்னதி, சனீஸ்வரர் சன்னதி, காலபைரவர் சன்னதி, மடப்பள்ளி, இரண்டாவது கொடிமரம் ஆகியவை உள்ளன.

மூன்றாவது உட்பிரகாரத்தில் கரியமாணிக்க விநாயகர், பார்வதி தேவி, ஜெயந்திநாதர், சண்முகர் சன்னதிகள் உள்ளன. இவைகளின் நடுநாயகமாக சுப்பிரமணியசுவாமி பக்தர்களுக்கு அருள்புரியும் திருக்கோலத்தில் காட்சி அளிக்கிறார். அவர் முன்பு நந்தி, ஆபரண மயில், சேவல் சிலைகள் உள்ளன.

வேறு எந்த தலத்திலும் இல்லாத ஒரு சிறப்பம்சம் ஒன்று உள்ளது. எந்த ஆலயத்திலும் இல்லாத வகையில் ஒரே தெய்வமான முருகன் இரண்டு பெயர்களில் மூலவராக உள்ளார். கிழக்கே பார்த்து அருள்பாலிக்கும் சுப்பிரமணய சுவாமி, தெற்கே பார்த்து அருள் பாலிக்கும் சண்முகரும் திருச்செந்தூர் கோவிலின் மூலவர்கள் ஆவார்கள்.

இவ்வாலயத்தின் தேரோட்டம் ஆவணி, மாசித் திருவிழாவின்போது நடைபெறும். ஆவணி திருவிழாவை உள்ளூர் திருவிழா என்பர். ஆனால் மாசித் திருவிழா மாபெரும் திருவிழா என்று அழைக்கப்படுகிறது. இத்தகு சிறப்புகளை உடைய இத்தலம் மட்டுமே ஆறுபடை வீடுகளில் கடலோரம் அமைத்த முருகனின் திருத்தலமாகும்.

**கோவிலின் அமைப்பு**

திருச்செந்தூர் சுப்பிரமணியசாமி கோவில் கடலை யொட்டி அமைந்துள்ளது. கோவிலுக்கு செல்லும் பக்தர்கள் தரை மட்டத்தில் இருந்து கீழ்நோக்கி கட்டப்பட்ட 12படிகளில் இறங்கி அதன் கீழே அமைந்துள்ள கோவில் கருவறை சென்று சுப்பிரமணிய சுவாமியையும், சண்முகரையும் வழிபட்டு செல்கின்றனர்.

இப்படி வழிபாடு செய்யும் இத்திருத்தலம் கடற்கரையில் கிழக்கு நோக்கி இருக்கின்றது. இது கடற்பாறை அடங்கிய மணல் மேட்டில் கட்டப்பட்டுள்ளது. அளவு 299 ×214 அடியாகும். மூன்று சுற்றாலைகளும், மேலைக்

கோபுரம், கீழைக்கோபுரம், பல விமானங்கள், கருங்கற்களால் திருப்பணிக்கொண்ட பல பெரிய மண்டபங்கள் என இத்திருக்கோவில் விளங்குகின்றது.

கருவறையில் மூலவர் நின்றகோலத்தில் கிழக்கு நோக்கியுள்ளார். ஆறுமுகமூர்த்தி இரு தேவிமார்களோடு உற்சவமூர்த்தியாகத் தெற்கு நோக்கி இருக்கின்றார். சுற்றாலைகளில் இரண்டு அம்மன்மார்களும் சிவபிரான் முதுலிய மூர்த்திகளும் உள்ளார்கள். வெளிச்சுற்றாலையில் திருமால் இயற்கைக் கற்பாறையில் குடைநத குகை மண்டபத்தில் நின்ற நிலையில் இருக்கின்றார். மற்றும் இக்குகைக் கோவிலுள் கஜலட்சுமி, பள்ளிகொண்ட பெருமாள், தேவிமார், ஆழ்வார்கள் உள்ளார்கள்.

இக்குடை கோவில் பல்லவச் சிற்ப முறையில் அமைந்துள்ளது. திருக்கோயிலின் வெளிவாயில் தெற்கு நோக்கியுள்ளது. அதனையொட்டி, சண்முக விலாசம் என்ற அழகிய பெரிய மண்டபம் கட்டப்பட்டுள்ளது. மேற்கு கோபுரம் மிகப் பெரியது. அதனை ஒட்டி வசந்த மண்டபம் என்ற பெரிய மண்டபமும், கலியாணமண்டபமும் உண்டு. இவைகளில் விழாக்காலங்களில் சொற்பொழிவுகள் நடத்தப்படுகின்றன. பல தீர்த்தங்களும் உண்டு.

**சுற்றுக் கோயில்கள்**

திருக்கோயிலுக்கு வடக்கே கடற்கரையில் ஓர் இயற்கைக் குகை வள்ளியம்மை கோயிலாக அமைந்துள்ளது. ஊர் நடுவில் ஒரு பெரிய சிவாலயமும், பெரிய மண்டபங் களும் இருக்கின்றன. கோவில் பொருள்களும், உற்சவ அமைப்புக்களும் இங்கே வைக்கப்பட்டிருக்கின்றன. மேலும் ஊரில் ஊர்த்தேவதைகளின் கோவில்கள் சில உண்டு. இங்கிருந்து ஆறுகல் தொலைவிலுள்ள குலசேகரப் பட்டினத்தில் மூவேந்தர்கள் வழிபட்ட ஒரு பழைய கோவில் உண்டு. பண்டைய துறைமுகங்களான கொற்கை, காயல் பட்டினம் முதலியன அருகிலேயே இருக்கின்றன.

## இத்தலத்தின் பழமை

தமிழ் இலக்கியத்தில் சங்க நூல்களில் திருமுருகாற்றுப் படையில் திருச்சீரலைவாய்ப் பகுதி இவ்வூரைப் பற்றியது. ஆகவே இந்தத்தலம் இருபது நூற்றாண்டுகட்கு முன்பே சிறந்திருக்க வேண்டுமென அறியமுடிகின்றது.

இத்தலத்தில் உள்ள திருமால் குடைவரைக் கோயில் கி.பி.6, 7ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பல்லவர்கள் காலத்தது. மற்றும் கல்வெட்டுகளில் ஐந்து கிடைக்கின்றன. அவைகளில் கி. பி. 9ஆம் நூற்றாண்டில் இருந்த வரகுணமாராயன் காலத்து வட்டெழுத்துக் கல்வெட்டுக்கள் இரண்டாகும். இவை மிகப் பழமையானவை. 1648இல் டச்சுக்காரர் ஆறுமுகநாயனார் திருவுருவத்தை எடுத்துக்கொண்டு போய் கடலில் போட்டார்கள். அதனை 1657இல் வடமலைப்பிள்ளையன் மீட்டார். திருவிதாங்கூர் மார்த்தாண்டவவர்மன் (1729-1758) துளுவநாட்டுப் போற்றிகளை மூலவர் பூஜைக்கு அமர்த்தினான். சண்முகனார் ஆராதனை குருக்கள்மாரிடம் இருக்கின்றது. முக்காணி பிராமணர்களுக்குச் சில உரிமைகள் உண்டு. செங்கள் திருப்பணிகள் ஒரு நூற்றாண்டளவில் (1868-1910) சில துறவிகளால் செய்யப்பட்டன.

## பூஜை பலன்கள்

கார்த்திகை மாதக் கிருத்திகை அன்று வதனாரம்ப தீர்த்தத்தில் மூழ்கி உள்ளம் நிறைந்த அன்புடன் குமரனின் பாதத்தைச் சிந்திப்பவர் இம்மை, மறுமை செல்வத்தினைப் பெறுவர்.

மாசி மாதத்தில் ஒருமுறையேனும் வதனாரம்பத்திலும், கந்தபுஷ்கர்ணியிலும் மூழ்கிக் கந்தனை வணங்கினால் சனன வேதனையினின்று நீங்கியும், சித்திரை மாதம் முப்பது நாளும் வதனாரம்பத்திலே படிந்து வேலாயுதனைப் போற்றுவோர் மோட்சத்தை அடைவர்.

தட்சணாயினம், உத்தராயணத்தன்று கந்த புஷ்கரணி யிலும், முகாரம்பத்திலும் மூழ்கி சம்பாவன்னம் சண்முக மூர்த்திக்கு நிவேதனம் செய்தவர் கசல பலனையும் பெறுவர்.

ஆடிமாத முப்பது நாளும் பசுவின் ததியோதனத்தை குமரனுக்கு நிவேதனம் செய்பவர் எம்பெருமான் திருவடித் தாமரையைச் சேர்வார்கள். ஆவணி மாதம் முப்பது நாளும் வேதவிதிப்படி ஆறுமுகனைப் போற்றுபவர் நூறு யாகம் செய்த பலனைப் பெறுவர்.

புரட்டாசி மாத மாளையபட்சத்தன்று முகாரம்பத் தீர்த்தத்தில் படிந்து சிரார்த்தம் செய்தவருடைய பிதுர்க்களெல்லாம் சத்திய லோகத்தை அடைவர்.

ஐப்பசி, மார்கழி மாதத்தில் ததியோதனம் குமரனுக்குப் படைத்தவர் மோட்ச லோகத்தை அடைவர். தை மாதம் முப்பது நாட்களும் கோயில் முழுவதும் அகிற்புகையினால் சுவாசிக்கச் செய்தவர் குலத்தினரெல்லாம் சிவபிரான் திருவடியையும், கிருத்திகை நட்சத்திரத்தில் நெல்லியிலை யினால் முருகக்கடவுளை அர்ச்சித்தவர் ஒவ்வொரு இலைக்கும் ஒவ்வொரு யாகப் பலனைப் பெறுவர் என்று வேதங்கள் கூறுகின்றன. இவை எல்லாம் திருச்செந்தூர் முருகனுக்குச் செய்யும் பூஜையின் பலன்களாகும்.

**பல்லக்கு தூக்கும் அர்ச்சகர்கள்**

சூரனை சம்காரம் செய்ய முருகப்பெருமான் எழுந்தருளும் பல்லக்கை சுமந்து வருவது கோவில் அர்ச்சகர் களான திருசுதந்திரர்கள் ஆவார்கள். இவர்கள் கோவிலில் கட்டியம், ஆசீர்வாதம், புரோகிதம், வேத பாராயணம் ஆகிய கட்டளைகளை செய்துவருகின்றனர். இவர்கள் மாதப் பிறப்பு, சஷ்டி, விசாகம், கார்த்திகை மாத கடைசி வெள்ளி ஆகிய நாட்களில் சுவாமி சப்பரம் தூக்கி வருவது தொன்று தொட்டு நிலவும் வழக்கமாகும். மேலும் தங்கத்தேர்

இழுப்பதும், திருசுதந்திரர்கள்தான். இப்படி இவர்கள் சண்முகருக்கு நிவேத்தியம் படைப்பது உள்பட பல்வேறு திருப்பணிகளை செய்துவருகிறார்கள்.

### விபூதி மகிமை

திருச்செந்தூர் கோயிலில் சந்தனம் இலை விபூதி முக்கியமான பிர்சாதமாகக் கருதப்படுகிறது. பன்னீர் இலைகளில் வைத்து மடித்து கொடுக்கப்படும் விபூதி, இலை விபூதி எனப்படுகிறது. இந்த இலை விபூதி தற்போது இரவு 8. 45 மணிக்கு நடைபெறும் ஏகாந்த பூஜையின் போதுதான் பக்தர்களுக்கு வழங்கப்படுகிறது. இந்த இலை விபூதியை உண்ட ஆதிசங்கரரின் காசநோய் தீர்ந்தது என்பது கோவில் வரலாறு. இங்கு மணம் மிகுந்த வாசனை சந்தனம் பக்தர்களுக்கு வழங்கப்படுகிறது. அதனைப் பக்தர்கள் தங்கள் மார்பு மற்றும் கைகளில் பூசிக்கொள்கிறார்கள்.

### சூரன் தலைகள்

சூரசம்ஹாரத்தின் போது முருகப்பெருமான் சூரனின் சிங்கமுகம், யானை முகம், சூரபத்மன் முகம் ஆகிய தலைகளை கொய்து வதம் செய்வார். இந்த தலைகளை திருவாவடுதுறை மடம் பாதுகாத்து வழங்குகிறது. கடைசியில் மாமரத்தில் சேவலாக சூரன் வருவது போலவும், அதனை முருகன் சம்காரம் செய்வது போலவும் சித்தரித்துக் காட்டப்படும். இங்குள்ள நாழிக்கிணறு மிக்க புகழ்பெற்றது. கடல் நீராடலும் இங்கு சிறப்புற்று விளங்குகின்றது.

### இத்தலம் குறித்த இலக்கியங்கள்

நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப்படையுடன், வென்றிமாலைக் கவிராயர் இயற்றிய திருச்செந்தூர்ப் புராணம், சாமிநாத தேசிகர் இயற்றிய கலம்பகம், குமரகுருபரர் இயற்றிய கந்தர் கலிவெண்பா, தண்டபாணி

சுவாமிகள் இயற்றிய திருச்செந்திற்கோவை, அருணகிரிநாதர் பாடிய 84 திருப்புகழ்கள். இந்நூலான பகழிக்கூத்தர் அருளிய திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் என தமிழன்னைக்கு இத்திருத்தலத்தின் வழி மேற்சொன்ன இலக்கியங்கள் கிடைத்துள்ளன. சூரன் வதம் முடிந்ததும் அய்யா வைகுண்டசாமி கோவில் முன்பு உள்ள பீடத்தில் முருகன் அமர்ந்து பக்தர்களுக்கு அருள்பாலிப்பார். அப்போது சிறப்பு வழிபாடுகள் நடைபெறும்.

## தேரோடும் வீதி

திருச்செந்தூரில் 8 ரத வீதிகள் உள்ளன. அவைகள் உள்மாடவீதி, இரதவீதி என்றழைக்கப்படுகின்றன. சுவாமி எழுந்தருளும் பல்லக்கு மற்றும் இரதங்கள் உள்மாட வீதி மற்றும் இரதவீதிகள் வழியாகச் செல்லும். அப்பொழுது பக்தர்கள் தேங்காய்-பழம் சாற்றி அர்ச்சனை செய்வார்கள். தேர்கள் கிழக்கு இரதவீதி, தெற்கு இரதவீதி, வடக்கு இரதவீதி, மேலஇரதவீதி வழியாக வரும். மாசித் திருவிழாத் தேரோட்டத்தின்போது இரதவீதிகளில் இலட்சக்கணக்கான பக்தர்கள் கூடி விநாயகர் தேர், அம்மன்தேர், முருகன்தேர் ஆகியவற்றை இழுத்துச் செல்வார்கள். தேர் இழுப்பதன் மூலம் பக்தர்கள் வாழ்க்கையில் இடையூறுகள் அகன்று அவர்கள் வாழ்வு நலமாகும் என்று கூறப்படுகிறது.

## தத்துவச்செல்வன்

முருகனின் ஆறுமுகங்களும் ஆறுவிதமாகப் பக்தர்களுக்கு அருள்மழை பொழிந்து வருகிறது.

- உலகுக்கு ஒளி தருவது ஒருமுகம்
- வேள்விகளைக் காப்பது ஒருமுகம்
- அடியார் குறை நீக்கி வரம் அருள்வது ஒருமுகம்

- வேத ஆகமப் பொருளை விளக்குவது ஒருமுகம்
- பகைவரையும் தீயோரையும் அழித்து நன்மை செய்வது ஒருமுகம்
- தேவியருக்கு மகிழ்வைத் தருவது ஒருமுகம்.

## இத்தலத்தின பழம் பெயர்கள்

திருச்செந்தூருக்குப் பல பெயர்கள் உள்ளன. இதன் உண்மையான பெயர் செந்திலூர். செந்து என்றால் உயிர். தில் என்றால் அடைக்கலமான இடம். அதாவது உயிர்களுக்கு அடைக்கலமான இடம் என்று பொருள். இதை குறிக்கும் "செந்திலூர்" நாளடைவில் மருவி "செந்தூர்" ஆகிவிட்டது.

ஓயாத அலைகள் எழுந்து வருவதால் திருச்சீலைவாய் என்று சங்க காலத்தில் இந்த ஊர் அழைக்கப்பட்டது. திருமுருகாற்றுப்படையில் திருச்செந்தூரை திருச்சீரலைவாய் என்றே குறிப்பிட்டுள்ளனர்.

இது தவிர செந்திபுரம், சிந்துபுரம் என்ற பெயர்களும் திருச்செந்தூருக்கு உண்டு. வடமொழியில் ஜெயந்திபுரம் என்றும், கந்த மாதன பர்வதம் என்றும் இவ்வூர் அழைக்கப்படுகிறது.

## அழகனின் படைவீடு

சூரனை வெல்ல சிவன் எடுத்த ஒரு அவதாரமே முருகன் என்பார்கள். முருகன் தோன்றியதும் திருச்செந்தூரில்தான் அமர்ந்தார். அந்த வகையில் திருச்செந்தூர்தான் முருகனின் அறுபடை வீடுகளில் முதல் வீடு என்று கருதப்படுகின்றது. ஆனால் முருகன் தெய்வானை திருமணம் நடந்த திருப்பரங்குன்றத்தை நக்கீரர் முதல் படை வீடு என்று அழைக்க அதுவே நிலைக்கப்பெற்று திருச்செந்தூர் இரண்டாம் படைவீடாகிப் போனது.

### மணக்கும் மலை

மலையும் மலைச்சார்ந்த பகுதியையும் குறிஞ்சி என்று நம் மூதாதையர்கள் அழைத்தனர். குறிஞ்சி நிலக் கடவுள் முருகன். அவரைக் "குறிஞ்சிக் கிழவன்" என்று நக்கீரர் அழைத்தார். "மலைக்கு நாயக" என்றார் அருணகிரிநாதர். கந்தன் தலங்கள் பெரும்பாலும் மலைக் குகைகளைக் கொண்டதாக இருக்கும். திருச்செந்தூர் முருகன் கோவிலும் மலையில்தான் உள்ளது. ஆனால் பார்ப்பதற்கு அப்படித் தெரிவதில்லை. திருச்செந்தூர் கடற்கரையில் மணக்கும் சந்தனமலை உள்ளது. இதன் மீதுதான் கோவில் கட்டப்பட்டது. சந்தனமலையின் ஒருபகுதிதான் வளளி குகை. கோவிலைச் சுற்றி வரும்போது நன்கு கவனித்தால் சந்தனமலை புலப்படும்.

### வெற்றிவேல்

முருகன் தன் கையில் ஏந்தியுள்ள வேல் ஞானசக்தியின் அம்சமாகத் திகழ்கின்றது. ஞானசக்தி என்பது ஆழமானது. அகலமானது, கூர்மையானது. இது வேலின் அமைப்பை ஒத்தது.

### மந்திரம் சொல்லும் கடல்

செப்பு கொடி மரத்தையொட்டி உள்ள சுவரில் ஒரு துவாரம் உள்ளது. அதில் காதை வைத்துக் கேட்டால் "ஓம்" என்ற பிரணவ மந்திரத்தை கடல் அலைகள் எதிரொலிப்பதை அறியலாம்.

### நலம் நல்கும் தீர்த்தங்கள்

கடல் அலைகளால் தாலாட்டப்பெறும் திருச்செந்தூர் சுப்பிரமணியசுவாமி கோவிலையொட்டி 24 தீர்த்தங்கள் உள்ளன. காயத்ரி மந்திரம் 24 எழுத்துக்களும் இங்கு தீர்த்தமாக உள்ளதாகக் கூறப்படுகின்றது. கந்தபுஷ்கரணி தீர்த்தம்

எனப்படும் நாழி கிணற்றில் மட்டுமே பக்தர்கள் நீராடி வருகிறார்கள. கடற்கரையில் அமைந்துள்ள சில தீர்த்த கிணறுகள் மணல் மூடி தூர்ந்து காணப்படுகின்றன. தற்போது பல தீர்த்த கட்டங்களை குறிப்பிடும் கல்வெட்டுகளும் காணாமல் போய்விட்டன.

### திருச்செந்தூரில் உள்ள 24 தீர்த்தங்கள்

1. முகாரம்ப தீர்த்தம் (வதனாரம்ப தீர்த்தம்)
2. தெய்வானை தீர்த்தம்
3. திருமகள் தீர்த்தம்
4. சித்தர்கள் தீர்த்தம்
5. திக்கு பாலகர் தீர்த்தம்
6. பழைய காயத்ரீ தீர்த்தம்
7. சாவித்திரி தீர்த்தம்
8. கலைமகள் தீர்த்தம்
9. வெள்ளை யானை தீர்த்தம்
10. வைரவர் தீர்த்தம்
11. வள்ளியம்மை தீர்த்தம்
12. துர்க்கை தோற்றுவித்த தீர்த்தம்
13. ஞான தீர்த்தம்
14. சத்திய தீர்த்தம்
15. தர்ம தீர்த்தம்
16. தவசிகள் தீர்த்தம்
17. தேவர்கள் தீர்த்தம்
18. பாவநாச தீர்த்தம்

19. நாழிக்கிணறு தீர்த்தம் (கந்த புஷ்கரணி)

20. சேது தீர்த்தம்

21. தசகங்கா தீர்த்தம்

22. கந்த மாதான தீர்த்தம்

23. மாதரு தீர்த்தம்

24. பிதர்கள் தீர்த்தம்

இவைகளில் சேது தீர்த்தம் எனப்படுவது அனுமன் இங்கிருந்து புறப்பட்டு தென் இலங்கைக்கு சென்ற இடமாகும். மேலும் திருமகள் தீர்த்தம் எனப்படும் செல்வ தீர்த்தம் தினசரி சுப்பிரமணியசுவாமி அபிஷேகத்திற்கு எடுத்துச் செல்லப்படுகிறது.

**கும்ப தரிசனம்**

திருச்செந்தூர் சுப்பிரமணியசுவாமி கோவில் வடக்குப் புற வெளிப்பிரகாரத்தில் மூலவர் கும்ப விமான தரிசனம் காணும் வகையில் ஒரு துவாரம் உள்ளது. அதன் வழியாக பார்த்தால் மூலவர் கும்ப விமானததைக் காணலாம். இங்கு அமைக்கப்பட்டப் படியில் ஏறி நின்று பக்தர்கள் மூலவரின் கும்ப கலசத்தைப் பார்த்து வணங்கிச் செல்கிறார்கள்.

**முருகனின் படைக்கலன்கள்**

சுப்பிரமணியசுவாமி வலக்கையில் அபயம், பாசம், சக்கரம், குறிவாள், அம்பு, சக்திவேல் ஆகியவை உள்ளன. இடக்கையில் வரதம், அங்குசம், கோழி, கேடகம், வில், வச்சிரம் ஆகியவை உள்ளன. கந்தசஷ்டி விழா நடைபெறும் ஆறு நாட்கள் மட்டுமே ஆறுமுகப்பெருமானின் பன்னிரு கைகளையும் தரிசிக்க இயலும். மற்ற நாட்களில் அபயம், வரதம் தவிர ஏனைய கைகளைத் துணியால் மூடியிருப்பார்கள்.

## இவ்வூரிலும் தலத்திலும் பார்க்கவேண்டிய இடங்கள்

1. திருச்செந்தூர் நடுவே அமைந்த சிவக்கொழுந் தீஸ்வரர், ஆனந்தவல்லி அம்மன் கோவில்
2. தெப்பக்குளம் விநாயகர் கோவில்
3. உச்சி மாகாளி அம்மன் கோவில்
4. முத்தாரம்மன் கோவில்
5. வெயிலுகாத்த அம்மன் கோவில்
6. இரயிலடி ஆனந்த விநாயகர் கோவில்
7. தூண்டுகை விநாயகர் கோவில்
8. கோவில் திருப்பணி செய்த மூவர் சமாது
9. ராஜகோபுரம்
10. வள்ளி குகை கோயில்
11. நாழிக்கிணறு
12. 108 மகாலிங்கேஸ்வரர் சன்னதி
13. குருபகவான் சன்னதி
14. நடராஜர் சன்னதி
15. வீரபாண்டிய கட்டபொம்மன் வணங்கிய சாமி சிலைகள்
16. பஞ்ச லிங்கங்கள்
17, முருகன் சூரனை வதம் செய்யும் சிலை
18. பெருமாள் சன்னதி
19. வள்ளி - தெய்வானை சன்னதி
20. 63 நாயன்மார்கள் சன்னதி
21. சங்கிலி பூதத்தான் சன்னதி

22. வள்ளலார் கோவில்

23. சரவண பொய்கை

24. பந்தல் மண்டபம்

25. அய்யா வைகுண்டசாமிபதி

26. அகத்தியர் கோவில்.

என்பன இவ்வூரிலும் இத்தலத்திலும் பார்க்கவேண்டிய இடங்களாக உள்ளன.

**ஆலயத்திருப்பணி**

புராண காலத்தில் இந்த இடம் கந்தமாதன பர்வதம் என்ற மணல்மேடாக இருந்ததாம். தேவர்கள் விரும்பியபடி மயன்தான் இக்கோவிலை முதலில் கட்டியிருக்கின்றான். பிறகு பாண்டிய, சேர மன்னர்கள் இக்கோயிலை மேலும் கட்ட ஈடுபட்டிருக்கிறார்கள். மாறவர்மன், வரகுணமாறன், விக்கிரம பாண்டியன் ஆகியோர் நிவந்தங்கள் கொடுத்துள்ளார்கள். கி. பி. 1729-1758 வரை திருவாங்கூர் மன்னன் மார்த்தாண்டவர் மகாராஜா இக்கோயிலில் உதய மார்த்தாண்டக கட்டளையை அமைத்தார். மௌன சுவாமியும்,வள்ளி நாயக சுவாமியும் இங்குள்ள ராஜகோபுர பிரகாரங்களுக்கு திருப்பணி செய்தனர்.

**குமரக் கடவுளின் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கை**

**கார்த்திகை விரதம்**

**சுக்கிர விரதம்**

**சஷ்டி விரதம்**

போன்றவை முருகனின் அருள் வேண்டி மக்கள் கடைபிடிக்கும் விரதங்கள் ஆகும். குறிப்பாக திருச்செந்தூர் முருகனை எண்ணி வழிபடுவோர் செல்வம், கல்வி, ஆயுள், உத்தம பத்தினி, நன்மக்கட்பேறு, நிலபுலம் போன்ற எல்லா நலன்களையும் எளிதில் எய்தலாம் என்று மக்கள்

நம்புகின்றனர். குலதெய்வம் எது என்று தெரியாதவர்கள் இம்முருகனை குலதெய்மாக நினைத்து வழிபட்டால், அனைத்தையும் தருபவன் என்றும் நம்புகின்றனர்.

முருகனுக்கு இருக்கும் விரதங்களில் கார்த்திகை மாதத்தில் வரும் பரணியன்று பகலில் உண்டு இரவில் உண்ணாதிருத்தல் வேண்டும். அதிகாலை நீராடி, முருகவேலினை வழிபாடு செய்தல் வேண்டும். இரவில் உறங்குதல் கூடாது. மாதந்தோறும் வரும் கார்த்திகையில் விரதமிருத்தல் வேண்டும். இவ்வாறு செய்தால் நினைத்ததை நடத்தும் ஆற்றல் கொண்டவன் திருச்செந்தூர் முருகன் என்ற நம்பிக்கையும் உள்ளது.

இன்றும் இம்முருகனிடம் வேண்டிக்கொண்டு முதல் முடி எடுக்கும் நம்பிக்கையும், காதுகுத்துதல் சடங்கும் இவனை குலதெய்வமாக நினைத்து வழிபடுபவர்கள் நிகழ்த்துகின்றனர்.

**முருகன் பகழிக் கூத்தருக்கு பதக்கம் கொடுத்த நிகழ்வு**

இராமநாதபுரம் மாவட்டம் சதுர்வேதிமங்கலம் என்ற ஊரை சேர்ந்தவர் பகழிக்கூத்தர். இவரே இத்திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் நூலின் ஆசிரியர். இவர் வைணவர். இந்நூல் எழுந்த காலம் கி. பி. 18ஆம் நூற்றாண்டு.

ஒவ்வொரு நாளும் கடுமையான வயிற்று வலியால் அவதிப்பட்டுவந்தார். பல மருத்துவர்களிடம் சென்று சிகிச்சை பெற்றும் வயிற்றுவலி குணமடையவில்லை. இந்நிலையில் ஒருநாள் திடீரென பகழிக்கூத்தர் கனவில் முருகன் தோன்றி அன்பனே.........என்னைப்பார் உன் வயிற்றுவலி தீரும் என்று கூறி மறைந்தார். இந்நிலையில் கண்விழித்துப் பார்த்த பகழிக் கூத்தர் முருகனின் கருணையை எண்ணி கண்ணீர்விட்டு மனம் உருகினார். முருகனை மனதுக்குள் நினைத்தபடி திருச்செந்தூர் புறப்பட்டுச் சென்றாராம்.

ஆலயத்துக்குள் நுழைந்து முருகனை வேண்டினார். பிறகு அதி அற்புதமான தமிழில் முருகன் மீது "திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்" பாடினார். அதை முழுமையாகப் பாடி முடித்ததும் பகழிக்கூத்த ின் வயிற்றுவலி இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது.

இந்நிகழ்வை எண்ணி மகிழ்ச்சி அடைந்த பகழிக்கூத்தர் அந்த நூலை பாலசுப்பிரமணியன் திருச்சன்னதியில் வைத்து வணங்கி அரங்கேற்றினார். எவரும் இவரின் திறமையைப் பாராட்டவில்லை என்பதோடு இவர் ஒரு வைணவர் என்றபடியால் இவருக்கு மதிப்பும், மரியாதையும் கூட கொடுக்காமல் புறக்கணித்தனர்.

பகழிக்கூத்தர் அவற்றை எல்லாம் நினைத்து கவலைப் படாமல் இடைவிடாது முருகனையே துதித்துக் கொண்டிருந்தார். ஒரு இரவு பொழுதில் பகழிக்கூத்தரின் திறமையையும், சகிப்புத்தன்மையையும் பாராட்டி முருகப்பெருமானே தன் கழுத்தில் இருந்த இரத்தினப் பதக்கத்தை அவருக்கு சூட்டிவிட்டார். ஆனால் மறுநாள் காலையில் முருகனின் கழுத்தில் இரத்தினமாலையை காணாது அதிர்ச்சி அடைந்தனர். எங்கும் தேடியும் மாலை கிடைக்கவில்லை.

இச்சூழலில் கோவில் பிரகாரத்திலிருந்து ஒரு குரல் என் அன்பன் பகழிக்கூத்தருக்கு அளித்தேன் என்றது. இதைக் கேட்டு ஆச்சரியம் அடைந்த கோவில் பணியாளர்கள் பகழிக்கூத்தர் இருந்த இடம் நோக்கி ஓடிச்சென்று பார்த்தனர். அங்கு அவர் தூங்கிக் கொண்டிருந்தார். அவர் கழுத்தில் இரத்தின பதக்க மாலை அணிவிக்கப்பட்டிருந்தது. அதன் பின்னரே முருகனின் அருளைப்பெற்ற பகழிக்கூத்தரின் பக்தியின் மீது அனைவருக்கும் மரியாதை வந்தது.



